# THE MADRAS LEGISLATIVE ASSEMBLY.

**Monday, the 2nd July 1962.**

The House met in the Assembly Chamber, Fort St. George, at half-past eight of the clock, Mr. Speaker (THE HON. SRI S. CHELLAPANDIAN) in the Chair.

## I.—OBITUARY REFERENCE TO Dr. B. C. ROY AND SRI PURUSHOTHAMDAS TANDON.

MR. SPEAKER: I regret to announce the death of Dr. B. C. Roy, Chief Minister of West Bengal yesterday afternoon. He was one of the top-ranking politicians of the country, a great Chief Minister and also an eminent physician. On behalf of the House I will convey its deep sense of sorrow to the people of West Bengal.

I regret also to announce the death of Sri Purushothamdas Tandon. He also was a great leader. He was the Speaker of the Uttar Pradesh Legislative Assembly. On behalf of the House, I will convey its deep sense of sorrow to the family of Sri Tandon.

As a mark of respect to the departed souls, I request hon. Members to stand in silence for a minute.

The House stood in silence for a minute.

## II.—QUESTIONS AND ANSWERS.

### STARRED QUESTIONS.

MR. SPEAKER: Questions Nos. 70, 74, 78, 82, 83, 84, 85 and 86-A have been postponed at the request of the concerned Ministers.

அரசாங்கக் கல்லூரி (திருவண்ணாமலை)

*6. கேள்வி.—திரு. ஏ. ஆறுமுகம்: கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

1962-ல் திருவண்ணாமலையில் சர்க்கார் துறையில் ஒரு கல்லூரி திறக்க உத்தேச முண்டா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: No, Sir.

திரு. ஏ. ஆறுமுகம்: ஸார், திருவண்ணாமலையிலும், அதன் சுற்றுப்புறத்தில் உள்ள தாலூக்காக்களிலும் அநேக உயர்நிலைப் பள்ளிகள் திறக்கப்பட்டுள்ள காரணத்தினாலே, அங்கே ஒரு கல்லூரி இருக்க வேண்டியது அத்தியாவசியம் என்று கருதுகிறேன். அதற்காக அங்கே அரசாங்கம் ஒரு கல்லூரியை திறப்பதற்கு நடவடிக்கை எடுக்க முன்வருமா?

[2nd July 1962

**கனம் திரு. எம். பக்தவத்சலம்** : அங்கு ஒரு கல்லூரி இருப்பது அவசியம் என்பதை நான் மறுக்கவில்லை. தனிப்பட்டவர்கள் அதற்கு முயற்சி எடுத்துக் கொண்டால், அதற்கு அரசாங்கம் வேண்டிய உதவியை அளிக்கலாம்.

**திரு. ம. கமலநாதன் :** பிரிக்கப்பட இருக்கும் சேலம் மாவட்டத்திலே கிருஷ்ணகிரி தலைநகராக அமையப் போகின்றது என்று சொல்லப்படுகிறது. அப்படிப்பட்ட நகரத்திலே கடந்த இரண்டு ஆண்டுகளாக கல்லூரி துவங்கப்படுமென்று, அதற்கு கால்கோள் விழாகூட நடத்தி விட்டார்கள். ஆனால் இன்னும் அதைப்பற்றி எந்தவிதமான முயற்சியும் எடுத்துக் கொள்ளவில்லை. கிருஷ்ணகிரி தலைநகராகப் போவதைக் கருதி, உடனடியாக அங்கு கல்லூரி ஏற்படுத்த அரசாங்கம் வழிவகை செய்யுமா என்று அறிய விரும்புகிறேன்.

**கனம் திரு. எம். பக்தவத்சலம் :** கிருஷ்ணகிரியில் கல்லூரி அமைக்கப்படும் விஷயத்தைப் பற்றி தனியாக கேள்வி கேட்டால், நான் விவரமாக பதில் அளிக்கிறேன்.

*The Madras Universityy Act*

* 68 *Q.*—SRI M. KALYANASUNDARAM : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) whether the Government have received a resolution passed by the Senate of the University of Madras, recommending that the University Act should be revised; and

(*b*) if so, the action taken thereon?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

**திரு. மீ. கல்யாணசுந்தரம்** : ஸார், யுனிவர்சிடியிலிருந்து அரசாங்கத்திற்கு வருவதற்கு காலதாமதமாகலாம். அவர்களுடைய நடவடிக்கைகளை பார்க்கிறபோது, அந்தமாதிரி அபிப்பிராயம் அதாவது சட்டத்தைத் திருத்த வேண்டுமென்ற அபிப்பிராயம் யுனிவர்சிடிக்கும் இருக்கிறது. இதற்கு முன்பு பல முறை அரசாங்கத்தினரும் கூறி வந்திருக்கிறார்கள். இந்தச் சட்டத்தைத் திருத்த நடவடிக்கை எடுக்கவேண்டுமென்று யுனிவர்சிடியார் கூறுவிட்டாலும், அரசாங்கம் தாங்களாகவே சட்டத்தைத் திருத்த நடவடிக்கை எடுப்பார்களா ?

**கனம் திரு. எம். பக்தவத்சலம்** : பல்கலைக்கழக சம்பந்தப்பட்ட சட்டத்தை எவ்வாறாயினும் திருத்த வேண்டுமென்ற யோசனை அரசாங்கத்தில் இருந்து வருகிறது. அப்படித் திருத்துவதைப் பற்றி ஒரு குழு பரிசீலனை செய்து இருக்கிறது. அந்தக் குழு சிபார்சு செய்ததை, இப்போது அரசாங்கம் பரிசீலனை செய்து கொண்டிருக்கிறது.

2nd July 1962]

திரு. கே. ஏ. மதியழகன்: ஸார், தற்போது இன்டர்மீடியட் வகுப்பு பாஸ் செய்தவர்களைத்தான் பி.ஏ. வகுப்பில் சேர்த்துக் கொள்ளலாம் என்று பல்கலைக்கழகச் சட்ட விதியில் 36-வது செக்ஷன் 1-வது கிளாஸில் இருக்கிறது. ஆனால் இப்போது பி.யு.சி. வகுப்பு பாஸ் செய்தவர்கள் பி.ஏ. வகுப்பில் அனுமதிக்கப் படுகிறார்கள். இதற்கு இப்போது இருக்கிற பல்கலைக்கழக சட்டமே இடம் கொடுக்கவில்லை என்று கருதுகிறேன். இப்படி பலமாதிரியான நிலைமையில் இந்தச் சட்டம் இருப்பதால், இதை விரைவாகவும், உடனடியாகவும் திருத்துவதற்கு சர்க்கார் முயற்சி எடுத்துக்கொள்ளுமா?

கனம் திரு. எம். பக்தவத்சலம்: சட்டத்தின் கீழ் விதிகள் அதாவது பாட ரெகுலேஷன் இருக்கிறது. அந்த ரெகுலேஷன்படி பாட வகைகள் மாற்றியமைக்கப்பட்டு வருகிறது என்று நான் நினைக்கிறேன். ஆனால் இந்தச் சட்டத்தைத் திருத்துவது பற்றி அரசாங்கம் தாமதம் இல்லாமல் நடவடிக்கை எடுத்துக் கொள்வார்கள். ஆனால், அதை நன்றாக பரிசீலனை செய்து, பல பேர்கள் யோசனை செய்து, அதன்பேரில் பல்கலைக்கழகச் சட்டத்தைத் திருத்துவதற்கு நடவடிக்கை எடுத்துக் கொள்ளவேண்டும்.

திரு. எம். டி. தியாகராஜ பிள்ளை: ஸார், இந்த பல்கலைக்கழகச் சட்டத்தை திருத்தியமைப்பதில் நீண்டகாலமாகி விட்டபடியாலே, இப்போது அரசாங்க கல்வி கொள்கைக்குத் தக்கபடி சீக்கிரமாக அந்தச் சட்டத்தை மாற்றியமைக்க உத்தேசிக்கப் பட்டிருக்கிறதா என்று கேட்க விரும்புகிறேன்.

கனம் திரு. எம். பக்தவத்சலம்: இதைப்பற்றி முன்பே விடையளித்து விட்டேன்.

திரு. மீ. கல்யாணசுந்தரம்: ஸார், இந்தச் சட்டத்தைத் திருத்த வேண்டுமென்ற நோக்கங்கள் யாவை? சென்னை பல்கலைக் கழக சட்டம் மட்டும்தான் திருத்தியமைக்கப்படுமா? அல்லது அண்ணாமலைப் பல்கலைக் கழகச் சட்டமும் திருத்தியமைக்கப் படுமா?

கனம் திரு. எம். பக்தவத்சலம்: என்னென்ன வகையிலே இதைத் திருத்துவது என்ற விவரங்கள் தற்சமயம் என்னிடம் இல்லை. அதை பின்னால் பார்த்துத்தான் தெரிவிக்க முடியும். தமிழ் நாட்டிலே வெவ்வேறாக, இரண்டு பல்கலைக்கழகங்கள் உள்ளன. ஆகவே, சட்டத்தைத் திருத்துவதிலும் அவைகளை ஒவ்வொன்றாகத் தான் எடுத்துக்கொள்ள வேண்டும்.

திரு. மீ. கல்யாணசுந்தரம்: ஸார், இது சம்பந்தமான ஒரு ஒயிட் பேப்பர் இந்தச் சபை முன்பு வைக்கப்பட்டு, அதன்மேல் அபிப்பிராயம் எடுத்துக்கொண்டு, அதன்பிறகு சட்டத்தைத் திருத்த நடவடிக்கை எடுத்துக் கொள்ளப்படுமா?

[2nd July 1962

**கனம் திரு. எம். பக்தவத்சலம்.** இதைப்பற்றி எல்லா வகையிலும் இந்த மன்றத்தின் அபிப்பிராயங்கள் கோரப்படும். நான் ஆரம்பத்திலே சொன்னபடி இதைப்பற்றி பரிசீலனை செய்ய ஒரு குழு அமைக்கப்பட்டிருக்கிறது. இதையெல்லாம் இந்தக் குழு திருத்தியமைத்த பிறகு, அதன் யோசனையைக் கேட்டு இந்த சபை முன்பு வைக்கப்பட்ட பிறகு தான் இந்த மசோதா சட்டமாக்கப்படும்.

*Panchayat Union Council, Singampunari*

69 Q.—Sri S. MADHAVAN : Will the Hon. the Chief Minister be pleased to state the amount allotted to the Panchayat Union Council of Singampunari, Ramanathapuram district for the year 1960–61?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : The following grants were released to the Union during 1960–61.

Local Education Grant of Rs. 1,15,780 and Local Roads Grant of Rs. 13,035.

**திரு. எஸ். மாதவன் :** இந்தத் தொகை யூனியன் டெரிடரியின் பரப்பளவைப் பொறுத்து அளிக்கப்படுகிறதா அல்லது மக்களின் தொகை கணக்கை வைத்து அளிக்கப்படுகிறதா ?

**கனம் திரு. எம். பக்தவத்சலம் :** இதுபற்றி ஒரு சட்டம் இருக்கிறது. அந்தச் சட்டத்தின்படி விநியோகிக்கப்பட்டு வருகிறது.

Sri C. CHIRANJEEVULU NAIDU : Sir, may I know from the Hon. Minister whether any special allotments are made to the Panchayat Union Councils?

**கனம் திரு. எம். பக்தவத்சலம் :** நான் முன்பு கூறியது போல், அந்தச் சட்டத்தில் எந்தெந்த வகையிலே சொல்லப்பட்டிருக்கிறதோ, அந்த வகையில் விநியோகிக்கப்பட்டு வருகிறது.

**திரு. ம. கமலநாதன் :** கிராண்டுகள் வழங்குவதிலே சட்டத்தை திருத்துவதற்கு அவசியம் இருக்கிறது. சில யூனியன்கள் பரப்பு அளவிலே மிகப் பெரியதாகவும், சில யூனியன்கள் பரப்பு அளவிலே மிகச் சிறியதாகவும் இருக்கின்றன. அந்த யூனியன்களுக்கு ரோடுகள் வசதி செய்வதற்கு மக்கள் தொகையின் அடிப்படையிலே ஒரு ஆளுக்கு 40 நயா பைசா வீதம் ஒதுக்கப்பட்டிருப்பதால், மிக அதிகப் பரப்பு உள்ள யூனியன்கள் ரோடு வசதி செய்து கொடுப்பதற்கு முடிவதில்லை. ஆகவே, கிராண்டுகள் வழங்குவது சம்பந்தமாக சட்டம் திருத்தி அமைக்கப்படுமா என்று அறிய விரும்புகிறேன்.

**கனம் திரு. எம். பக்தவத்சலம் :** இந்தப் புதிய சட்டம் சமீபத்தில் தான் அமுலுக்கு வந்திருக்கிறது. இது சம்பந்தமாக நிலைமையைப் பரிசீலனை செய்வதற்கும், மேலும் எந்தெந்த வகை

யிலே திருத்தவேண்டும் என்பதைப்பற்றி முடிவு செய்வதற்கும் ஒரு ஆலோசனைக்குழு 'கன்சல்டேடிவ் கமிட்டி' அமைக்கப்பட்டிருக்கிறது. அதில் பஞ்சாயத்து யூனியன் டெவலப்மெண்டு கவுன்சில் பிரதிநிதிகள் உறுப்பினர்களாக இருக்கிறார்கள். அவர்களுடைய யோசனைகளெல்லாம் கேட்டு எந்தெந்த வகையிலே திருத்தவேண்டுமோ அம்மாதிரி திருத்துவதற்கு அரசாங்கம் கவனம் செலுத்திவருகிறது. ஆனால், கனம் உறுப்பினர் அவர்கள் ஏதாவது குறிப்பிட்ட யோசனையை எனக்கு எழுதி அனுப்பினால், அதையும் பரிசிலனை செய்து, சட்டத்தை திருத்துவதற்கு அவசியம் இருக்கிறதா என்பதைப்பற்றி மேலும் யோசித்து முடிவு செய்யலாம்.

*New Universities*

***71 Q.—Sri K. MOOKIAH THEVAR: Will the Hon.** the Minister for Finance be pleased to state—

(*a*) whether the Government have received any suggestions from the University for the establishment of four more Universities in the State, viz., at Madurai, Karaikudi, Tiruchirappalli and Coimbatore; and

(*b*) if so, the action taken thereon?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (*a*) No, Sir.

(*b*) Does not arise.

**திரு. சா. கணேசன்:** காரைக்குடி போன்ற இடங்களிலே, குறிப்பாக காரைக்குடியில், 'மாண்டிசேரியிலிருந்து' 'ரிஸர்ச் இன்ஸ்டிடியூட்' வரையிலே எல்லாம் ஒரே வட்டாரத்தின் உள்ளே அமைந்திருப்பதால் அங்கே சர்வகலாசாலை ஏற்படுத்துவதற்கு இடமும், சூழ்நிலையும் மிகவும் பொருத்தமாக இருக்கும் என்பதை அரசாங்கம் கவனத்தில் கொள்ளுமா என்று கேட்கிறேன்.

**கனம் திரு. எம். பக்தவத்சலம்:** ஒரு முழு யூனிவர்சிடி அமைப்பது என்றால், மதுரையில் அமைப்பது தான் பொருத்தம் என்பதை கனம் அங்கத்தினர் அவர்களும் ஒப்புக்கொள்ளுவார்கள். எப்படியும் இன்னொரு பல்கலைக்கழகம் மதுரையில் அமைக்க வேண்டும் என்ற கருத்து எனக்கும் இருக்கிறது, அரசாங்கத்திற்கும் இருக்கிறது. அதைப்பற்றி மேலும் கவனம் செலுத்திக் கொண்டு வருகிறோம். 'புல் ப்ளெட்ஜ்டு யூனிவர்சிடி' இல்லாமல் வேறு ஏதாவது செய்வதாக இருந்தால், அதைப்பற்றி யோசனை இருந்தால், அதையும் பரிசீலனை செய்யலாம்.

**திரு. மீ. கல்யாணசுந்தரம்:** பல்கலைக்கழகங்களை அதிகப் படுத்துவதில் இப்பொழுது இருக்கக்கூடிய பல்கலைக்கழகங்கள் யோசனை கூறுவிட்டாலும், அரசாங்கமே முயற்சி எடுத்து வருவதாக அமைச்சர் அவர்கள் கூறினார்கள். அதுவும் மதுரையில் வருவதாக அபிப்பிராயம் இருப்பதாகச் சொன்னார்கள். எங்கு வைத்தாலும் சரி, புதிய பல்கலைக்கழகம் நம்முடைய ராஜ்யத்தில்

எந்த ஆண்டில் வரும்? சமீபத்தில் 12 புதிய பல்கலைக்கழகங்கள் திறப்பதாக சிபார்சு செய்யப்பட்டிருப்பதைப் பார்த்தேன். அதிலே ஒன்றுகூட நம் ராஜ்யத்தில் இல்லை. நம்முடைய ராஜ்யத்தில் 3 கோடி மக்கள் இருக்கிறார்கள். 50,000 சதுர மைல் களுக்கு அதிகமான பரப்பு இருக்கக்கூடிய ராஜ்யம். அதை வைத்து சராசரி கணக்குப் பார்த்தால், நம்முடைய ராஜ்யத்தில் 3 பல்கலைக்கழகங்கள் இருக்கவேண்டுமே. ஆகவே, நம்முடைய ராஜ்யத்தில் பல்கலைக்கழகங்களை அதிகமாக்குவதற்கு அரசாங்கம் துரித நடவடிக்கை எடுக்கப்படுமா?

**கனம் திரு. எம். பக்தவத்சலம்**: கனம் அங்கத்தினர் அவர்கள் கூறியது போல நமது ஜனத்தொகை விகிதாசாரத்தில் 'யூனிவர்சிடி கிராண்ட்ஸ் கமிஷன்' தலைவர் அவர்கள் தெரிவித்த அபிப்பிராயப்படி 3 பல்கலைக்கழகங்கள் இருக்க வேண்டியது தான். இப்பொழுது இருப்பது 1½ தான். (திரு. மீ. கல்யாண சுந்தரம்: 1¼). இன்னும் ஒரு 'புல் ப்ளெஜ்டு யூனிவர்சிடி' வைப்பது அவசியம் தான். அதைப்பற்றி சமீபத்தில் கூட டெல்லியில் யூனியன் அமைச்சர் அவர்களோடு பேசினேன். இதைப்பற்றி மேலும் நாங்கள் கவனம் செலுத்திக் கொண்டு வருகிறோம். இதெல்லாம் அமைப்பதென்றால், அதற்கு மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் நிதி ஒதுக்கப்பட வில்லை. இதற்கு வேண்டிய நிதியை நாம் திரட்டவேண்டும். பணம் உள்ளவர்கள் தாராளமாக உதவி செய்து எண்டௌ மெண்ட்ஸ் ஏற்படுத்துவதற்கு முன்வரவேண்டும். இதையெல்லாம் வைத்துக்கொண்டு தான் மதுரையில் ஒரு பல்கலைக்கழகம் அமைக்க வேண்டும். அதை எவ்வளவு சீக்கிரம் அமைக்க முடியுமோ அவ்வளவு சீக்கிரம் அமைக்கவேண்டும் என்பது தான் என்னுடைய கருத்து.

**திரு. கே. ஏ. மதியழகன்**: இந்த மாநிலத்தில் 3 பல்கலைக் கழகங்கள் நிறுவுவதற்கு வேண்டிய வாய்ப்புகள் இருக்கின்றன என்று 'யூனிவர்சிடி கிராண்ட்ஸ் கமிஷன்' சொல்லியும், அதற்கான மானியங்கள் கொடுப்பதற்கு தயாராக இருந்தும், இதிலே கால தாமதம் ஏற்படுவதற்குக் காரணம், சென்னை பல்கலைக்கழகத்தை ஏற்கனவே ஆதீனமாக வைத்துக்கொண்டு, அது உடைந்து போய் விட்டால் தங்களுடைய அந்தஸ்து குறைந்துவிடும் என்று பல்கலைக்கழக அதிகாரிகள் நினைக்கிறார்கள் என்பதினால் அது நிறைவேறவில்லையா? அல்லது, இந்தக் காரியத்தில் இவ்வளவு நெருக்கடியான நிலைமை இருந்தும், ஏராளமான மாணவர்கள் கல்வி பயிலவேண்டும் என்ற நிலை இருந்தும், நம்முடைய சர்க்காருடைய அசிரத்தை இதற்குக் காரணமா?

**கனம் திரு. எம். பக்தவத்சலம்**: சென்னை பல்கலைக்கழக செனட் சபையிலே இன்னொரு பல்கலைக்கழகம் அமையவேண்டும் என்று அவர்கள் தீர்மானித்திருப்பதாக நான் பத்திரிகையில் பார்த்தேன். கனம் அங்கத்தினர் அவர்களும் பார்த்திருப்பார்கள். எப்படியும் சென்னை பல்கலைக்கழகம் இன்னொரு பல்கலைக்கழகம்

2nd July 1962]

அமைப்பதற்கு தடையாக இருக்க முடியாது. ஆனால், நிதி தான் முக்கியமான தடை. கனம் உறுப்பினர் அவர்கள் 'யூனிவர்சிடி கிராண்ட்ஸ் கமிஷன்' நிதி ஒதுக்குவதற்கு தயாராக இருக்கிறார்கள் என்று சொன்னார்கள். அவர்கள் மேலும் அதில் கவனம் செலுத்தி, 'யூனிவர்சிடி கிராண்ட்ஸ் கமிஷனிடமிருந்து' கொஞ்சம் நிதி வாங்கிக் கொடுத்தால், மதுரையில் சீக்கிரம் யூனிவர்சிடி அமைக்கலாம்.

திரு. வை. சங்கரன்: மதுரையில் கல்வி சம்பந்தமாக பல பணிகள் புரிந்திருக்கிற பிரமுகர் ஒருவர், மதுரையில் பல்கலைக் கழகம் ஏற்படுத்துவதற்கு 50 லட்சம் ரூபாய் ஒதுக்கி வைத்திருப்பதாகச் சொல்லியிருக்கிறார் என்பது அரசாங்கத்திற்கு தெரியும் அல்லவா? மற்றும் எந்தெந்த தேவைகளையெல்லாம் பூர்த்தி செய்தால் மதுரையில் சீக்கிரம் பல்கலைக்கழகம் ஏற்படுத்தலாம்?

கனம் திரு. எம். பக்தவத்சலம்: இதைப்பற்றி தற்சமயம் என்னிடம் தகவல் இல்லை. பல்கலைக்கழகம் மதுரையிலோ அல்லது வேறு எங்கேயோ அமைப்பது என்றால், அதற்கு உகந்தவாறு உதவி அளித்தால், அந்த நிதியை வைத்துக்கொண்டு ஆரம்பிக்கலாம்.

திரு. மீ. கல்யாணசுந்தரம்: சென்னை பல்கலைக்கழகத்தின் அபிப்பிராயத்தைப்பற்றி பத்திரிகையில் வந்த செய்தியைப் பார்த்ததாகக் கூறினார்கள் அமைச்சர் அவர்கள். புதிய பல்கலைக் கழகம் மதுரையில் நிறுவுவது பற்றி அரசாங்கம் யோசித்த பொழுது, சென்னை பல்கலைக்கழகத்தின் அபிப்பிராயத்தை அரசாங்கம் கோரினார்களா? அப்படிக் கோரியிருந்தால், அவர்கள் என்ன அபிப்பிராயம் தெரிவித்தார்கள்?

கனம் திரு. எம். பக்தவத்சலம்: இந்த அரசாங்கம் சென்னை பல்கலைக்கழகத்தின் அபிப்பிராயத்தைக் கோரவில்லை. ஆனால், இந்த அரசாங்கம் மதுரையில் பல்கலைக்கழகம் அமைப்பது என்ற யோசனையை வைத்துக்கொண்டிருக்கிறது. அதுபற்றி மேலும் நடவடிக்கை எடுத்துக்கொண்டு வருகிறது.

புலவர் கா. கோவிந்தன்: இப்பொழுதே அண்ணாமலைப் பல்கலைக்கழகம், சென்னைப் பல்கலைக்கழகம் என்று இரண்டு பல்கலைக்கழகங்கள் இருக்கின்ற நேரத்தில், 'அண்ணாமலைப் பல்கலைக் கழகம், சென்னைப் பல்கலைக்கழகம் தானே' என்றும் 'சென்னைப் பல்கலைக்கழகம், சென்னைப் பல்கலைக்கழகம் தானே' என்றும் பேசுகிற பேச்சு இருக்கிறது. இந்த நிலை போய் ஊருக்கு ஒரு பல்கலைக்கழகம் என்று உண்டாகிவிட்டால், பல்கலைக்கழகம் கல்லூரி நிலைமைக்கு தாழ்ந்து விடுமோ என்கின்ற அச்சம் உண்டாகியிருக்கிறது. அந்த அச்சத்தை மனதிலே வைத்து நடைமுறையில் செயல்படப்பெறுமா . . . ?

கனம் சபாநாயகர்: கனம் அங்கத்தினர் கேள்வி கேட்க வேண்டும், பிரசங்கம் செய்யக்கூடாது.

*கனம் திரு. எம். பக்தவத்சலம்* : அநேகமாக எல்லோரும் ஒப்புக்கொண்டிருக்கிற அபிப்பிராயம் ஒரு கோடி ஜனத் தொகைக்கு ஒரு பல்கலைக்கழகம் இருக்கலாம் என்பது. இன்றைக்கு நம் மாநிலத்தில் இரண்டுக்கு மேல் இன்னொரு பல்கலைக்கழகம் ஏற்பட்டால், அதனால் ஒன்றும் போட்டா போட்டிக்கு இடமில்லை.

*Vellakondansamudram tank (repairs)*

* 72 Q.—SRI S. NANJUNDA ROW: **Will the Hon. the** Minister for Agriculture be pleased to state—

(a) whether the Government have received a scheme for the repair of Vellakondansamudram tank in Vedasandur sub-taluk; and

(b) if so, when the scheme will be executed?

THE HON. SRI P. KAKKAN: (a) & (b) The Chief Engineer (Irrigation) has sent proposals, for the desilting of Vellakondasamudram Tank in Dindigul taluk of Madurai district, at an estimated cost of Rs. 1·94 lakhs. The proposals sent through the Board of Revenue (F.P.) have not yet been received with the remark of the Board. The question of according administrative approval to the proposals will be considered on receipt of the proposals from the Board.

*திரு. எஸ். நஞ்சுண்டராவ்* : வேடசாந்தூர் பகுதி ரொம்ப பிற்போக்கான பகுதி. அந்தத் தொகுதியில் வருஷா வருஷம் 20 அங்குலத்திற்கு மேலே மழை பெய்யாது. ஆகையினாலே அந்தக் குளத்தை சீர்திருத்துவதற்கு எஸ்டிமேட் வந்ததும், உடனடியாக வேலையை முடித்துக்கொடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அந்த ஏரிக்கு வெள்ளக்கொண்டான் சமுத்திரம் என்று அழகாக பெயரிடப்பட்டிருக்கிறது. ஆனால், அந்த சமுத்திரம் 10 வருஷமாக தண்ணீர் இல்லாத குளமாக இருப்பதினால், அதை உடனடியாக மராமத்து செய்துகொடுத்தால், 500 ஏகருக்கு தண்ணீர் பாயும். அதை நல்ல முறையில் ரிபேர் செய்துகொடுக்க வேண்டும் . . . .

*கனம் சபாநாயகர்* : கனம் அங்கத்தினர் அறிந்துகொள்ள வேண்டிய விஷயங்களை ஒரு உப கேள்வி மூலமாகக் கேட்க வேண்டுமே தவிர, சிறு பிரசங்கம் செய்யக்கூடாது.

*கனம் திரு. பி. கக்கன்* : வெள்ளைக்கொண்டான் சமுத்திரத்தில், மழை பெய்தால் நிறைய சமுத்திரம் மாதிரி தண்ணீர் தேக்க வேண்டும் என்று நினைத்துத்தான் அரசாங்கம் பரிசீலனை செய்து, ஏற்கனவே கொஞ்சம் அதற்காக பணம் செலவு செய்திருக்கிறது. வாய்க்கால் வெட்டுவதற்காக, 'சானல் ரிபேர்' செய்வதற்காக ரூ. 8,000 செலவு செய்யப்பட்டிருக்கிறது. அணைக்கட்டை பழுது பார்ப்பதற்காக ரூ. 32,450-க்கு ஒரு எஸ்டிமேட் தயார் செய்து,

2nd July 1962]

அதையும் செய்வதற்காக ஏற்பாடு செய்து திட்டமிட்டிருக்கிறார்கள். இது ஒரு முக்கியமான திட்டம். இதை எடுத்துக் கொள்ளுவதற்கு அரசாங்கம் முன்வரும் என்பதைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

*Scale of pay of N.G.Os. (further revision)*

* 73 Q.—Sri A. ARUMUGAM : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(a) whether the Government have received any representations from the Tamil-Nad Non-Gazetted Officers' Association regarding certain disparities in the recent revision of pay scales; and

(b) if so, the action taken thereon?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : (a) & (b) A Memorandum was received from the Tamil-Nad Non-Gazetted Government Officers' Association by the Government requesting for further revision of scales of pay of certain categories of staff and improvement of other service conditions. After a detailed examination of the various requests of the Association a reply was given to its Secretary in Government Letter No. 96520/Fin, Spl/60-1, complete.

Sri C. CHIRANJEEVULU NAIDU : When does the Government propose to integrate the services of personnel transferred from Andhra Pradesh to Madras State and also give them pay-scales as obtaining in Madras State?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : It is under examination. I cannot say exactly when the integration will be comlpete.

திரு. மீ. கல்யாணசுந்தரம் : இப்பொழுது சமர்ப்பிக்கப்பட்ட பட்ஜெட்டில் அறிவிக்கப்பட்டுள்ளபடி கொடுக்கப்படும் பஞ்சப்படி உயர்வு, இந்தக் குறைகளை நிவர்த்திப்பதற்குப் போதுமானதாக இருக்குமா? இதனால் சர்க்கார் ஊழியர்கள் திருப்தி அடைவார்கள் என்று அமைச்சர் அவர்கள் கருதுகிறார்களா?

கனம் திரு. எம். பக்தவத்சலம் : என்னைப் பொறுத்த வரையில், சர்க்கார் ஊழியர்களைப் பொறுத்தவரையில், முழுத் திருப்தி ஏற்படும். மற்றவர்கள் தலையிடாமல் இருந்தால் ஒரு தொந்தரவும் கிடையாது.

*Cattle Insurance Scheme*

* 75 Q.—Sri V. KRISHNAMOORTHY : Will the Hon. the Minister for Agriculture be pleased to state whether there is any proposal to introduce cattle insurance scheme in the State?

The Hon. Sri P. KAKKAN : Yes, Sir.

[2nd July 1962

**திரு. வெ. கிருஷ்ணமூர்த்தி :** பட்ஜெட்டை உரையில் கனம் நிதி அமைச்சர் அவர்கள் இந்த மாடுகளுக்கு இன்ஷூரன்ஸ் திட்டம் கொண்டுவரப்படும் என்ற உருதிப்பாட்டைக் கூறவில்லை. பட்ஜெட் உரையில் கூறாமல் இருந்தாலும், நடைமுறை ஆண்டில் கொண்டு வருவார்களா என்று அறிய விரும்புகிறேன்.

**கனம் திரு. பூ. கக்கன் :** கனம் நிதி அமைச்சர் அவர்கள் பட்ஜெட் உரையில் சொல்லாவிட்டாலும், மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ஒரு லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது என்பதை கனம் அங்கத்தினரின் கவனத்திற்குக் கொண்டுவர விரும்பு கிறேன்.

*Scale of pay of Stockmen (Kanyakumari district)*

* 76 *Q.*—Sri A. SWAMIDHAS (on behalf of Sri A. KUNJAN NADAR) : Will the Hon. the Minister for Agriculture be pleased to state—

(*a*) whether the Government have received any representation regrading the fixation of salary of stockmen in Kanyakumari district, transferred from the erstwhile Travancore-Cochin State;

(*b*) if so, the reason for the delay in fixing their salary; and

(*c*) whether any steps are being taken for the recovery of the excess salary paid to them under the Integration Order?

The Hon. Sri P. KAKKAN : (*a*) Yes, Sir.

(*b*) As the particulars regarding the fixation of pay received from the Director of Animal Husbandry were found defective and incomplete, further particulars have been called for and they are awaited.

(*c*) Yes, Sir.

*Mavali tank (construction of dam)*

* 77 *Q.*—Sri S. MADHAVAN : Will the Hon. the Minister for Agriculture be pleased to state—

(*a*) whether there is any proposal to construct a dam at Mavali tank, in Tirupattur taluk, Ramanathapuram district; and

(*b*) if so, when?

The Hon. Sri P. KAKKAN : (*a*) Yes, Sir.

(*b*) The Board's proposals have just been received and are under examination of the Government.

**இலவசக் கல்லூரிப் படிப்பு.**

* **79 கேள்வி.—திரு. அ. கு. சுப்பையா :** கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

எல்லா மாணவர்களுக்கும் கல்லூரி படிப்பு வரை இலவசமாக படிக்க ஏற்பாடு செய்ய உத்தேசமுண்டா ?

2nd July 1962]

THE HON. SRI M. BHAKTAVATSALAM : No, Sir.

**திரு. மீ. கல்யாணசுந்தரம் :** இப்பொழுது உயர்நிலைப் பள்ளி வரையிலும் இலவசப் படிப்பு இருந்து வருகிறது. அதற்கு 1,500 ரூபாய் வரையிலும் வருமான கட்டம் நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. அது போதுமானதாக இல்லாத காரணத்தால், அதை 1,800 ரூபாயாக உயர்த்த நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்படுமா ?

**கனம் திரு. எம். பக்தவத்சலம் :** இப்பொழுது, இரண்டு நாட்களுக்கு முன்புதான் வரவு செலவுத் திட்டத்திலே 1,500 ரூபாய் வரையில் உயர்த்தியிருக்கிறோம். பின்னர் கல்வி பற்றிய விவாதம் வரும்பொழுது இதைப்பற்றி பேசலாம். இப்பொழுது, உடனடியாக 2,000 ரூபாய் வரையிலும் உயர்த்துவதாக உத்தேசம் இல்லை.

*Sugarcane cess (refund)*

* 80 Q.—SRI V. SANKARAN : Will the Hon. the Minister for Agriculture be pleased to state whether the Government of India have requested this Government to refund the cane cess collected from sugar factories for sugar exported?

THE HON. SRI P. KAKKAN : Yes, Sir.

**திரு. வை. சங்கரன் :** ஏற்கெனவே வாங்கியிருக்கும்படியான ரிபேட்டை திருப்பிக்கொடுப்பதற்கு யோசனை கூறியிருக்கும் பொழுது மேற்கொண்டு ஒரு டன்னுக்கு 5 ரூபாய் என்று போட்டப்பட்டிருக்கிறது. அதனுடைய விளைவு என்ன என்பதை அறிய விரும்புகிறேன்.

**கனம் திரு. பூ. கக்கன் :** இப்பொழுது மேற்கொண்டு ஒரு டன்னுக்கு ரூபாய் 5 போட்டிருப்பதைப்பற்றி என்னிடம் தகவல் இல்லை. இதர மாகாணங்களைவிட இங்கே சர்க்கரை பாக்டரிகள் லாபத்தில் ஓடுகின்றன. ஏற்கெனவே குறைவாக விதித்திருக்கிறோம். அதைப் பார்த்துத்தான் அரசாங்கம் முடிவுக்கு வந்திருக்கிறது.

**திரு. கே. ஏ. மதியழகன் :** இந்த கரும்பு செஸ் சம்பந்தமாக ரீபண்டு கொடுக்கவேண்டுமென்று மத்திய சர்க்காரிடமிருந்து வந்ததற்கு நம்முடைய சென்னை சர்க்கார் அதை மறுத்ததாகச் சொல்லப்பட்டது. அப்படி இதைத் திருப்பிக் கொடுக்க மாட்டோம் என்று சொன்னதற்கு காரணங்கள் என்ன என்று அமைச்சர் அவர்கள் சொல்லுவார்களா ?

**கனம் திரு. பூ. கக்கன் :** கரும்பு செஸ்ஸைக் கொண்டு இன்னும் கரும்பு உற்பத்தி செய்கிற பகுதிகளில் டெவலப்மென்ட் வேலைகள் செய்யவேண்டியிருக்கிறது. திருப்பிக் கொடுத்தால் 2 லட்சம் ரூபாய் கொடுக்கவேண்டியிருக்கும். அதைக்கொண்டு இந்த வேலைகள் செய்வதால் திருப்பிக்கொடுக்க முடியாது என்று மத்திய அரசாங்கத்திற்கு எழுதியிருக்கிறோம்.

**திரு. அ. சேனுபதி கவுண்டர் :** இந்த செஸ் புதிதாக ஏற்படுத்தப்பட்டது. கூட்டுறவு சர்க்கரை ஆலேகளிலே லாபம் கிடையாது. ஆகவே அவைகளுக்கு இந்த வரியிலிருந்து விதிவிலக்கு அளிக்கப்படுமா ?

**கனம் திரு. பூ. கக்கன் :** கூட்டுறவு சர்க்கரை ஆலேகளில் லாபம் இருக்கிறதா, இல்லேயா என்பது எனக்குத் தெரியாது. அதைப் பற்றி பரிசீலனே செய்யவேண்டும்.

**திரு. மு. சண்முகம் :** இந்த செஸ் தொகை கரும்பு விவசாயிகளிடமிருந்து வசூலிக்கப்பட்டதா, அல்லது ஆலே முதலாளிகளின் நிதியிலிருந்து வசூலிக்கப்பட்டதா ?

**கனம் திரு. பூ. கக்கன் :** இந்த செஸ் ஒரு டன்னுக்கு 2 ரூபாய் என்று வசூலிக்கப்பட்டது. ஆலேயிலிருந்து வசூலிக்கப்பட்டதா அல்லது ஏற்றுமதி செய்கிறவர்களிடமிருந்து வசூலிக்கப்பட்டதா என்ற தகவல் தற்சமயம் என்னிடம் இல்லே. தனியாகக் கேள்வி போட்டால் பதில் சொல்லப்படும்.

### ராசிபுரம் குடிநீர் வழங்கும் திட்டம்

*81 **கேள்வி.—திரு. நா. பா. செங்கோட்டுவேலு :** கனம் சுகாதார அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) ராசிபுரம் நகரத்திற்கு பனமரத்துப்பட்டி தண்ணீரை உபயோகித்துக்கொள்ள அரசாங்கம் அனுமதி வழங்கியிருக்கிறதா ?

(இ) அப்படியானல், எப்போது வேலே துவங்கப்படும் ?

**The Hon. Srimathi JOTHI VENCATACHELLUM :** (*a*) & (*b*) The Government have not yet decided upon the source from which water-supply should be given to Rasipuram. The Chief Engineer, Public Works Department (General), has suggested the Panamarathupatti source, subject to certain conditions and submitted outline proposals and estimates for the scheme. The matter is under examination.

**திரு. நா. ப. செங்கோட்டுவேலு :** ராசிபுரம் நகரசபையிலிருந்து அரசாங்கத்திற்கு ஏதாவது தகவல் வந்ததா ?

**கனம் திருமதி ஜோதி வெங்கடாசலம் :** ராசிபுரத்திலிருந்து தகவல் எதிர்பார்க்கப்படுகிறது.

**திரு. வெ. கிருஷ்ணமூர்த்தி :** ராசிபுரத்திலே தண்ணீர்ப் பஞ்சம் ஒவ்வொரு ஆண்டும் இருப்பதாக நான் அறிகிறேன். ஆகவே ராசிபுரத்திற்காக ஒரு தண்ணீர்த் திட்டத்தை சர்க்கார் தனியாகப் பரிசீலித்து, ஏதாகிலும் ஒரு நிரந்தரமான முடிவுக்கு வருவார்களா ? அப்படி தண்ணீர் கொடுக்க முடியவில்லே என்றல், குழாய்க் கிணறுகள் மூலம் குடிநீர் வழங்குவதற்கு ஆவன செய்வார்களா என்று அறியவிரும்புகிறேன்.

2nd July 1962]

**கனம் திருமதி ஜோதி வெங்கடாசலம் :** ராசிபுரம் முனிசிபல் கமிஷனருக்கு இதைப்பற்றி தகவல் அறிவிக்கப்பட்டிருக்கிறது அங்கிருந்து பதில் எதிர்பார்க்கப்படுகிறது.

**திரு. சோ. ஆறுமுகம் :** பனைமரத்துப்பட்டித் தண்ணீரை ராசிபுரத்திற்குக் கொண்டுபோகவேண்டுமென்று சொல்லப்படுகிறது. அங்கேயுள்ள விவசாயிகள் அந்தத் தண்ணீரைப் பயன்படுத்த வேண்டாமென்று சொல்லியிருக்கிறார்களா ?

**கனம் திருமதி ஜோதி வெங்கடாசலம் :** அதைப்பற்றி இப்பொழுது என்னிடம் தகவல் இல்லை.

*University colleges (opening)*

***86 Q.—Sri K. MOOKIAH THEVAR :** Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) whether the Government have received any proposal from the University for the establishment of Uuniversity Colleges in the State; and

(*b*) if so, the action taken thereon?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** (*a*) No, Sir.

(*b*) Does not arise.

**தீ விபத்துக்கள்**

***86-பி. கேள்வி.—திரு. து. ப. அழகமுத்து :** கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 1959-60, 1960-61, 1961-62 ஆண்டுகளில் திருச்சி மாவட்டத்திலுள்ள பெரம்பலூர், முசிரி தாலுகாக்களில் எத்தனை தீ விபத்துக்கள் ஏற்பட்டன ?

(இ) பெரம்பலூரிலாவது துறையூரிலாவது ஒரு தீயணைக்கும் படை வைக்கும் உத்தேசம் உண்டா ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** (*a*)—

| | 1959-60. | 1960-61. | 1961-62. |
|---|---|---|---|
| Perambalur taluk .. | 8 | 12 | 12 |
| Musiri taluk .. .. | 9 | 12 | 14 |

(*b*) No, Sir.

**திரு. து. ப. அழகமுத்து :** பெரம்பலூர் தாலுகாவிலும் முசிரி தாலுகாவிலும் அடிக்கடி தீ விபத்துக்கள் ஏற்படுகின்றன. திருச்சி ஜில்லாவில் காவேரிக்குத் தெற்கேதான் தீயணைக்கும் படை வைக்கப்பட்டிருக்கிறது. தீ விபத்துக்கள் ஏற்படும் பொழுது, வெகு தூரத்திலிருந்து இந்தப் படை வரவேண்டியிருப்பதால், தீ அணைப்பதற்கு முடியாமல் போகிறது. ஆகவே காவேரிக்கு வடக்கேயும் ஒரு தீ அணைக்கும் படையை நிறுவ அரசாங்கம் ஏற்பாடு செய்யுமா ?

**கனம் திரு. எம். பக்தவத்சலம்:** இப்பொழுது தீயணைக்கும் படை முனிசிபல் எல்லைகளில் அமைக்கப்பட்டிருக்கிறது. அங்கு ஜனத்தொகை அதிகம். அதுவும் இன்னும் சில முனிசிபல் எல்லைகளிலே அமைக்கப்படவில்லை. முதலிலே எல்லா முனிஸிபல் எல்லைகளிலும் இதை அமைத்துவிட்டுத்தான், கிராமப்புறங்களிலே உள்ள எல்லைகளில் அமைக்கப்படுவதற்கு நடவடிக்கை எடுத்துக் கொள்ளப்படும்.

**திரு. மீ. கல்யாணசுந்தரம்:** பெரம்பலூர் தாலூகாவில்
9.00 a.m. அடிக்கடி தீ விபத்துக்கள் ஏற்பட்டுக்கொண்டிருக்கின்றன. அதனால் காவிரி நதியின் வட புறத்தில் தனியாக தீ அணைக்கும் படை ஒன்றை நிறுவ வேண்டும் என்று திருச்சி மாவட்ட அபிவிருத்திக் கவுன்சில் தீர்மானம் போட்டு அதை இந்த அரசாங்கத்திற்கு அனுப்பியும் இருக்கிறார்கள். அதைப்பற்றி இந்த அரசாங்கம் பரிசீலித்துக்கொண்டிருக்கிறார்களா என்பதை அறிய விரும்புகிறேன்.

**கனம் திரு. எம். பக்தவத்சலம்:** அபிவிருத்தி கவுன்சில் எத்தனையோ தீர்மானங்கள் போட்டு அனுப்பிக்கொண்டுதான் இருக்கின்றன. அவைகள் எல்லாவற்றையும் பரிசீலனை செய்வது என்பது முடியாத காரியம். எந்தத் தீர்மானங்களின்மீது விசேஷ கவனம் செலுத்த வேண்டுமோ அவைகளின்மீது அவ்வப்போது கவனம் செலுத்தப்பட்டு வருகிறது. அப்படி தீர்மானங்களுக்கு முக்கியத்துவம் கொடுத்து பரிசீலித்து அதற்கு வேண்டிய நடவடிக்கைகளும் எடுத்துக்கொள்ளப்பட்டு தான் வருகிறது.

*** 86-சி கேள்வி.—திரு. ஆ. தங்கவேலு:** *கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—*

*(அ) 1959, 1960, 1961-ல் திண்டிவனம் நகரத்திலும், வட்டத்திலும் எத்தனை தீ விபத்துக்கள் ஏற்பட்டன?*

*(இ) திண்டிவனம் நகரத்தில் தீ அணைக்கும் படை நிறுவ உத்தேசமுண்டா?*

*(உ) அப்படியானால், எப்போது நிறுவப்படும்?*

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (*a*)—

| | Tindivanam town. | Tindivanam rural area. |
|---|---|---|
| **1959** .. .. .. .. | 2 | 16 |
| **1960** .. .. .. .. | 4 | 15 |
| **1961** .. .. .. .. | .. | 9 |

(*b*) Yes, Sir.

(*c*) Under the scheme of financial assistance to State Governments for improving fire services in the country initiated by the Government of India, a grant to the extent of Rs. 2,03,000 has been applied for for the year 1962–63 to meet the cost of four fire engines and other equipments. Two of these fire engines are proposed to be utilised for opening of a Fire Station at Tindivanam.

Action will be taken to open a Fire Station as soon as the grant is received.

2nd July 1962]

போலீஸ் இலாகா சிப்பந்திகள் (திருத்தணி)

* 86-டி கேள்வி.—திரு. முனு. ஆதி : கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

6—4—1960 அன்று படாஸ்கர் தீர்வின்படி தமிழ் நாட்டுடன் இணைக்கப்பெற்ற திருத்தணி தாலுகாவில், போலீஸ் இலாகாவைச் சேர்ந்தவர்கள் தமிழ்நாடு அரசாங்க சம்பள விகிதப்படி சம்பளமும், அலவன்சும் பெறுகிறார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : No, Sir. Pay and allowances are being paid to them on the same scales as they were drawing in the Andhra Pradesh State immediately before they were transferred to this State.

துறையூர் அரசாங்க ஊழியர் சங்கம் (முறையீடு)

* 86-இ கேள்வி.—திரு. து. ப. அழகமுத்து : கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) தமிழ்நாடு என்.ஜி.ஜி.ஓஸ். அசோசியேஷன் துறையூர் சென்டரிலிருந்து வீட்டு வாடகைச் சலுகை கோரி விண்ணப்பம் ஏதேனும் வந்துள்ளதா ?

(இ) அதன் மேல் என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (a) No, Sir.

(b) Does not arise.

MR. SPEAKER : Questions are over.

[*Note.*—**An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.**]

III.—ANSWERING OF MAIN QUESTIONS IN TAMIL.

திரு. இரா. நெடுஞ்செழியன் : கனம் அவைத் தலைவர் அவர்களே, மன்றத்தில் எழுப்பப்படுகின்ற வினாக்கள் தமிழில் எழுப்பப்பட்டாலும் அவைகளுக்குக் கொடுக்கக்கூடிய முதல் பதில்கள் எல்லாம் ஆங்கிலத்தில் தான் தரப்படுகின்றன. துணைக் கேள்விகளுக்குப் பதில்கள் தமிழிலேயே கொடுக்கப்பட்டாலும் முதல் கேள்விகளுக்குக் கொடுக்கப்படும் பதில்கள் எல்லாம் ஆங்கிலத்தில் தான் கொடுக்கப்படுகின்றன. அப்படிக் கொடுக்கப் படுவதால் அவற்றைப் புரிந்துகொண்டு உடனடியாகத் துணைக் கேள்விகளைக் கேட்க சில உறுப்பினர்களுக்கு முடியாமல் இருக்கிறது. அவற்றை மொழிபெயர்த்து புரிந்துகொண்டு துணைக் கேள்விகள் கேட்பதற்கும் சங்கடமாக இருக்கிறது. ஆகவே முதல் கேள்விகளுக்குக் கொடுக்கக்கூடிய பதில்களையும் தமிழிலேயே கொடுத்தால் அவற்றைப் புரிந்து கொண்டு துணைக்கேள்விகள் கேட்பதற்கு எவ்வளவோ வசதியாக இருக்கும். ஆகவே அவ்விதம் தமிழிலேயே பதில்களைக் கொடுக்க, வேண்டிய முயற்சிகளை அவையின் அரசாங்கக் கட்சி தலைவர் முயற்சி எடுக்க வேண்டும் என்று

[திரு. இரா. நெடுஞ்செழியன்] [2nd July 1962

கேட்டுக்கொள்ளுகிறேன். அப்படி நடவடிக்கை எடுத்துக் கொண்டால் நன்ருக இருக்கும் என்று சொல்லிக்கொண்டு அதற்கு ஆவன செய்யவேண்டும் என்று கனம் தலைவர் அவர்கள் மூலமாகக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

**கனம் திரு. எம். பக்தவத்சலம் :** கனம் சபைத் தலைவர் அவர்களே, கூடிய வரையில் தமிழிலேயேதான் பதில்களைக் கொடுக்க முயற்சி செய்யப்பட்டு வருகிறது. அதற்கு வேண்டிய கவனமும் செலுத்தப்பட்டுதான் வருகிறது. ஆனுல் சில சமயங்களில் அவ்வாறு பதில் அளிப்பதற்கு போதிய பக்குவம் இல்லாத காரணத்தாலும், அது தவருகப் போய் விடலாம் என்ற காரணத்தாலும் தான் ஆங்கிலத்திலேயே பதில் கொடுக்கப்படுகிறது. கூடிய சீக்கிரத்தில் எல்லாவற்றையுமே தமிழில் பதில் கொடுக்க, வேண்டிய நடவடிக்கைகள் எடுக்கப்பட்டுதான் வருகிறது. ஆனுல் ஆங்கிலத்தில் பதில் சொல்லும்போது சில உறுப்பினர்களுக்கு அது புரியவில்லை என்று சொன்னுல் அவற்றை தமிழில் சொல்வதற்கு வேண்டிய ஏற்பாடு செய்யப்படும். அப்படி எந்த அமைச்சர்களைக் கேட்டாலும் அவர்கள் தமிழிலேயே பதில் சொல்லுவார்கள். தமிழில் மொழி பெயர்த்து பதில் சொல்லுவார்கள். ஆகவே தமிழில் மொழி பெயர்க்க வேண்டும் என்று சொன்னுலும் அல்லது ஆங்கிலத்தில் சொல்லப்படும் பதில் புரியவில்லை என்று சொன்னுலும் அவற்றை மொழி பெயர்த்துச் சொல்லப்படும். எல்லா பதில்களையுமே தமிழில் சொல்வதற்கு வேண்டிய நடவடிக்கைகள் எடுக்கப்பட்டுதான் வருகின்றன.

## IV.—ADJOURNMENT MOTSON *re.* NON AVAILABILITY OF TEXT-BOOKS PRESCRIBED FOR MADRAS CORPORATION SCHOOLS.

MR. SPEAKER : The hon. Member, Sri M. Kalyanasundaram has given notice of a privilege motion and it will be taken up to-morrow.

He has also given notice of the following adjournment motion :—

'I move that the business of the Assembly be adjourned for discussing the following matter of urgent public importance :

"the non-availability of text-books prescribed for Standards I to V in the schools administered by the Corporation of Madras and the consequent hardship to a large number of students." '

The hon. Member will now state his case.

**திரு. மீ. கலியாணசுந்தரம் :** ஸார், நேற்றைய தினம், சில கார்ப்பொரேஷன் உறுப்பினர்களும் பெற்ருேர்களும் என்னை சந்தித்து கார்ப்பொரேஷன் பள்ளிக்கூடங்களில் வைக்க தீர்மானிக்கப்பட்டிருக்கின்ற புத்தகங்களின் காப்பிகள் கடைகளில் கிடைக்கவில்லை என்றும், அவைகளில் சிலது அச்சடிக்கப்படவில்லை என்றும் குழந்தைகள் பள்ளிக்கூடங்களில் சேர்ந்து இரண்டு வாரங்களாகி

2nd July 1962] [திரு. மி. கலியாணசுந்தரம்]

யும் இன்னும் புத்தகங்கள் கிடைக்கவில்லை என்றும் புகார் சொன்னார்கள். அதற்கு வேண்டிய நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும் என்று என்னிடம் வந்து சொன்னார்கள். அதை அரசாங்கத்தினுடைய கவனத்திற்குக் கொண்டு வந்து அதற்குத் தக்க நடவடிக்கை எடுக்க வேண்டும் என்பதற்காகத்தான் இதைக் கொண்டு வந்திருக்கிறேன். அந்தப் புத்தகங்கள் கடைகளிலும் கிடைக்கவில்லை என்றும், அச்சாபீஸ்களிலும், கிடைக்கவில்லை என்றும், சமீபத்தில் கிடைக்கும் என்று அறிகுறிகூட இல்லை என்றும் சொல்கிறார்கள். இதற்கு என்ன நடவடிக்கை எடுத்துக் கொள்வது என்றும் என்னிடம் வந்து கேட்டார்கள். அதற்குத் தக்க நடவடிக்கை எடுக்க வேண்டும் என்பதற்காகத்தான் இதைக் கொண்டு வந்திருக்கிறேன். சபையின் கவனத்திற்கும் கனம் நிதி அமைச்சருடைய கவனத்திற்கும் கொண்டு வந்தால் இதற்கு வேண்டிய நடவடிக்கையை எடுத்துக் கொள்வார்கள் என்பதற்காகத்தான் இதைக் கொண்டு வந்திருக்கின்றேன். புத்தகங்கள் கிடைப்பதற்கு இரண்டொரு நாட்கள் கால தாமதமானால் பாதகமில்லை என்றாலும் பரவாயில்லை. ஒரு வாரத்திற்கு மேல் கால தாமதமாகிறது. இப்படி கால தாமதமானால் குழந்தைகள் பள்ளிக்கூடங்களில் சேர்ந்த பிறகு எப்படி படிப்பது என்பது தெரியவில்லை. நமது பிற்கால சந்ததியார்கள் இப்படி படிக்க முடியாமல் இருந்தால் என்ன செய்வது என்று புரியவில்லை. இது ஒரு முக்கியமான பிரச்னை. ஆகவே, இதைப்பற்றி விவாதிக்க வேண்டும் என்பதற்காகத்தான் இந்தத் தீர்மானத்தைக் கொடுத்திருக்கிறேன்.

**கனம் திரு. எம். பக்தவத்சலம்:** கனம் சபாநாயகர் அவர்களே, கனம் அங்கத்தினர் எழுப்பிய பிரச்னையைப்பற்றி தகவல் இப்பொழுது என்னிடம் இல்லை. நான் தெரிந்து கொண்ட அளவில் அங்கே இதற்கு முன் இருந்த ஸ்டாண்டிங் கமிட்டி மாறிவிட்டது என்றும், இவர்களால் அதை மாற்றி அமைக்க முடியவில்லை என்றும் தெரியவருகிறது. கூடிய சீக்கிரத்தில் புத்தகங்கள் பள்ளிக்கூடங்களுக்குக் கிடைத்துவிடும் என்று தோன்றுகிறது. ஆகவே இதற்கு ஒரு அவசர ஒத்திவைப்பு பிரேரபணை வேண்டியதில்லை என்று தோன்றுகிறது. ஆகவே இப்படிப்பட்ட அவசரப் பிரேரபணை வேண்டாம் என்று தெரிவித்துக்கொள்ளுகிறேன். ஆனால் கனம் அங்கத்தினர் 41-ஆவது விதிப்படி நோட்டீஸ் கொடுத்தால் அதைப்பற்றி இன்னும் இரண்டு நாட்களில் அங்கு இருக்கக்கூடிய நிலைமையை உணர்ந்து கொண்டு புள்ளி விவரங்களை சேகரித்துக் கொண்டு அதைப்பற்றி ஒரு ஸ்டேட்மெண்டை சபையின் முன் சமர்ப்பிக்கிறேன்.

MR. SPEAKER : There is no need for this adjournment motion as the Hon. Minister has agreed to make a statement if the hon. Member, Sri M. Kalyanasundaram would give a separate notice under Rule 41 in regard to this matter.

V.—REVISED BUDGET FOR 1962-63—GENERAL DISCUSSION.

* **திரு. மு. கருணாநிதி:** கனம் அவைத் தலைவர் அவர்களே 1962-63 ஆம் ஆண்டுக்கான நிதி நிலை அறிக்கையை கனம் நிதி அமைச்சர் அவர்கள் இந்த மன்றத்தின் முன் வைத்து அது இப்பொழுது விவாதத்திற்கு எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது. இந்த நேரத்தில் என்னுடைய கருத்துக்களை அதன் மீது கூற விரும்புகிறேன். வழக்கம் போல புள்ளி விவரங்களை அள்ளிக் கொட்டி இந்த அறிக்கையை வெளியிட்டிருக்கிறார். இப்பொழுது தரப்பட்டிருக்கிற புள்ளி விவரங்கள் வழக்கம்போலவே ஒன்றுக்கு ஒன்று முரண்பாடு கொண்டதாகவே இருக்கிறது என்பதை சுட்டிக்காட்ட விரும்புகிறேன். இரண்டாவது ஐந்தாண்டு திட்ட காலத்தில் இரசாயன உரம் போதிய அளவுக்குக் கிட்டாத நிலையிலும் 9 லட்சம் டன் உணவு தானியங்கள் அதிகமாக உற்பத்தி செய்ய முடிந்தது என்ற நிலைமையில் நமது புதிய நிதி அமைச்சர் அவர்கள் குறிப்பிட்டிருக்கிறார். ஆனால் இதே மன்றத்தில் இதற்கு முன் வேறு விதமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. பழைய நிதி அமைச்சர் அவர்கள் 1961-62 ஆண்டுக்கான வரவு செலவு திட்டத்தை சமர்ப்பிக்கும்போது இரண்டாவது ஐந்தாண்டு திட்ட காலத்தில் சுமார் ஏழு அல்லது எட்டு லட்சம் டன் அதிகமாக உற்பத்தி செய்யப்பட்டது என்று குறிப்பிட்டிருக்கிறார். இடைக்காலத்தில் ஒன்று அல்லது இரண்டு லட்சம் டன்கள் அதிகமாக நிதிநிலை அறிக்கையில் எப்படி புகுந்தது என்பது எனக்குப் புரியவில்லை. இப்படிப்பட்ட முரண்பாடான புள்ளி விவரங்களை, மக்களைக் கவரும்படியான அதிகமான புள்ளி விவரங்களை தொகுத்து இருக்கிற நிலைமையில் இந்த அறிக்கை இருக்கிறது என்பதை நான் சுட்டிக் காட்ட விரும்புகிறேன்.

மூன்றாவது ஐந்தாண்டு திட்ட இறுதிக்குள் உணவு தானியங்களை 17 லட்சம் டன் அதிகமாக உற்பத்திசெய்யவேண்டும் என்றும் சொல்லப்படுகிறது. பழைய லட்சிய அளவைப் பார்க்கும்போது இரண்டாவது மூன்றாவது ஐந்தாண்டு திட்ட காலத்தில் 12.79 லட்சம் டன் அதிகமாக உற்பத்தி செய்யப்படும் என்று சொல்லப்பட்டது. அப்படி உற்பத்தியாகி இருக்கவேண்டும். ஆனால் அந்த 12.79 லட்சம் டன் உணவு அதிகமாக உற்பத்தி செய்யப்படவில்லை. நான் முன்பே முரண்பாடுள்ள இரண்டு புள்ளிவிவரங்களைக் காட்டினேனே அந்தளவில்தான் உணவு உற்பத்தி அதிகப்படுத்தப்பட்டிருக்கிறது. இந்தளவு லட்சியங்கள் ஈடேறுகிற நேரத்தில், நிதியமைச்சர் அவர்கள் தந்திருக்கிற, 17 லட்சம் டன் உணவு உற்பத்தி அதிகமாகும் என்ற லட்சிய அளவை எந்த அடிப்படையில் நாம் உறுதியாக நம்புவது என்று புரியவில்லை. உரம் போதிய அளவு கிடைக்காத காரணத்தினால்தான் இரண்டாவது திட்ட காலத்தில் நமது லட்சிய அளவை நாம் அடைய முடியவில்லை என்று நமது பழைய நிதியமைச்சர் அவர்கள் காரணம் காட்டினார்கள். இப்பொழுது உரம் அதிகமாகக் கிடைப்பதற்கு என்னென்ன நம்பிக்கை ஊட்டப்படுகிறதென்று நான் அறிய

2nd July 1962] [திரு. மு. கருணாநிதி]

விரும்புகிறேன். 1956-57-ல் சல்பேட் உரம் 1.2 லட்சம் டன் என்ற அளவில் வழங்கப்பட்டு அதற்குப் பிறகு நான்காண்டுக் கணக்கில் 1960-61 முடியப்போகிற நேரத்தில் 1.3 லட்சம் டன்தான் வழங்க முடிந்தது என்றால் எந்தளவு அது அதிகமாக ஆகியிருக்கிறது? நெய்வேலியில் தயாரிக்கப்படயிருக்கிற உரத்தையும், மற்ற வகைகளில் தயாரிக்கப்படும் உரத்தையும் பற்றிச் சொல்லப்படுகிறது. மூன்றாவது திட்ட கால முடிவிற்குள் பாசன வசதி நிலங்களுக்கு 4 லட்சம் டன் அம்மோனியம் சல்பேட் உரம் தேவை என்று சென்ற வரவு செலவுத் திட்டத்தில் குறிப்பிடப்பட்டிருந்தது. இந்தக் கணக்குகளை வைத்துப்பார்க்கும்போது உரத்தைப் பொறுத்தவரையில், 17 லட்சம் டன் உணவு உற்பத்தியை அதிகமாக்குவதற்கு முயற்சிகள் போதுமானதாகயிருக்கிறதா என்று யோசித்துப் பார்க்கவேண்டும். அடுத்து உணவு உற்பத்திக்கு இன்றியமையாததாக இருப்பது விதைப் பண்ணைகள். 1959-60-க்குள் 360 விதைப் பண்ணைகள் ஏற்படுத்தப்படவேண்டுமென்று 1958-59 வரவு செலவுத் திட்ட அறிக்கையில் சொல்லப்பட்டது. அப்படி 360 விதைப்பண்ணைகளுக்கு திட்டமிட்டு, இப்போது 130 பண்ணைகள் தான் நிறுவ முடிந்தது என்று கணக்கு காட்டப்பட்டு, அதைப் பெருக்குவதற்குப் பதிலாக ஏற்கனவே ஆரம்பித்த பண்ணைகள் திறமையாக நடந்தால் உணவு உற்பத்திக்கு போதும் என்றளவில் 1959-60-ல் வலியுறுத்திக் கூறப்பட்டது. 136 விதைப்பண்ணைகள் ஏற்படுத்தப்பட்டுள்ளன என்று கூறியுள்ளார்கள். 210 விதைப் பண்ணைகள் நமக்கு வேண்டுமென்றும் மதிப்பிடப்பட்டிருக்கிறது. இன்றையதினம் அளிக்கப்பட்டுள்ள நிதிநிலை அறிக்கை மூலம் பழைய முடிவை மறுத்திருக்கிறார்களா? அல்லது 210 விதைப் பண்ணைகள் நமக்குத் தேவை என்ற லட்சிய அளவை அடைய என்ன என்ன முயற்சிகள் எடுக்கப்போகிறார்கள் என்பதைப்பற்றி இந்த அறிக்கையில் ஒன்றும் குறிப்பிடப்படவில்லை. உரத்தைப் பொறுத்தவரையில் நல்லதொரு முன்னேற்றம் இல்லாத வகையில், நம்பிக்கை ஊட்டத்தக்க வகையில் ஒன்றுமே காட்டப்படாத அளவில், 360 பண்ணைகளுக்கு திட்டமிட்டு 136 தான் நிறுவ முடிந்தது என்று கூறி, இதுவே போதும் என்ற அளவில் குறிப்பிடப்பட்டு அதனால் திருப்தி அடைந்து, 210 பண்ணைகள் இருந்தால் நல்லபடி உற்பத்தியைப்பெருக்க முடியும் என்று குறிப்பிட்டு 136 தான் இருக்கிறது என்று கூறி, 210 பண்ணைகள் நிறுவ வழி எதுவும் கூறாதிருக்கிற நிலையில் லட்சிய அளவை, 17 லட்சம் டன் உணவு உற்பத்தியை எப்படி அதிகப்படுத்தப் போகிறார்கள் என்ற சந்தேகத்தை நான் மீண்டும் வலியுறுத்திக் கூற விரும்புகிறேன்.

தொழில்துறையைப் பொறுத்தவரையில் நமது நிதியமைச்சர் அவர்கள் இந்த ஆண்டு நிதிநிலை அறிக்கையில் தொழில் வளர்ச்சியில் நமது மாநிலம் பின்தங்கிவிடவில்லை என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். நமக்கெல்லாம் தெரியாததொரு புதுமையை சர்க்காரை நடத்துகிற நிதியமைச்சர் அவர்கள் இன்றைய தினம் எடுத்துக்கூறுகிறார்கள். இடறி விழுந்தால் தொழிற்சாலையில் விழவேண்டும், தடுக்கி விழுந்தால் தொழிற்சாலையில் விழவேண்டும்

[திரு. மு. கருணாநிதி] [2nd July 1962

என்று தமிழகத்தில் எங்கு பார்த்தாலும் தொழிற்சாலைகள் இருப்பதைப்போன்று, இதை நீங்கள் யாருமே பார்க்கவில்லையா என்பதுபோல தொழில் துறையில் நமது மாநிலம் பின்தங்கிக் கிடக்கவில்லை என்ற மாபெரும் உண்மையை நமக்கு எடுத்துக் காட்டியிருக்கிறார்கள். தொழில்வளர்ச்சியைப் பொறுத்தவரையில், இரண்டாவது ஐந்தாண்டுத்திட்ட வரவேட்டிலும், மூன்றாவது ஐந்தாண்டுத்திட்ட வரவேட்டிலும், நமது மாநிலம் தொழில் துறையில் பின்தங்கிக்கிடக்கிறது என்று குறிப்பிட்டிருக்க, கோரிய 399 கோடியை வட நாட்டு சர்க்கார் மறுத்து 290 கோடியே தரப் பட்டு இருக்கும்போது திடீரென தமிழகம் தொழில் வளர்ச்சியில் முன்னேறியிருக்கிறது, அல்லது மற்ற மாநிலங்களை விட நமது மாநிலம் தொழில் துறையில் பின்தங்கிவிடவில்லை என்று அமைச்சர் அவர்கள் கூறுவதை என்னால் புரிந்துகொள்ள முடிய வில்லை. இப்படியெல்லாம் மக்களை ஏமாற்றத்திற்கு ஆளாக்கா தீர்கள் என்று நான் நிதிநிலை அறிக்கையை சமர்ப்பித்திருக்கும் நிதியமைச்சர் அவர்களை கேட்டுக்கொள்கிறேன். திரும்பத் திரும்ப நெய்வேலித் திட்டத்தைப்பற்றி கீறல் விழுந்த கிராமபோன் பிளேட்டைப்போல் இந்த மன்றத்தில் அடிக்கடி எடுத்துச் சொல்லப்படுகிறது, "நெய்வேலித் திட்டம், நெய்வேலித் திட்டம்." என்று! மற்ற தொழில்களைப் பொறுத்தமட்டில், பூர்வாங்க ஆலோசனையில் இருக்கிறது. ஆராய்ச்சி நடக்கிறது, இடம் பார்த் தாகிவிட்டது, நிலம் வாங்கியாகி விட்டது என்ற கட்டங்களில் இருக்க, இந்த மாநிலத்தில் தொழில்வளம் அதிகரித்திருக்கிறது. அல்லது மற்ற மாநிலங்களோடு போட்டியிட்டுக் காட்டும் அளவிற்கு எந்த தொழில்வளர்ச்சியை நிதியமைச்சர் அவர்கள் காட்டு கிறார்கள் என்று தெரியவில்லை. பெரும்பாலான தொழிற்சாலைகள் யார், யாருக்கு விடப்பட்டிருக்கின்றன? மறுபடியும், மறுபடியும் தனியார் துறைக்குத்தான் விடப்பட்டிருக்கின்றன, விடப்பட்டு வருகின்றன. இரண்டாவது திட்டகாலத்தில் நமது மாநிலத்தில் தொழில் நடத்த பதிவு செய்யப்பட்ட கம்பனிகள் 908. அதில் பப்ளிக் லிமிடெட் 66, பிரைவேட் லிமிடெட் 842. அடுத்து ரசாயன உற்பத்தியில் நாம் வெகுவாக முன்னேறியிருக்கிறோம் என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. நாம் என்பது யார்? நாம் என்று கூறும்போது சர்க்காரைத்தான் குறிப்பிடுகிறார்கள் என்று எண்ணினேன். ஆனால் அப்படி குறிப்பிட்டிருப்பது யாரை என்று பார்த்தால், தாரங்கதரா, இந்தியா சிமெண்ட் போன்ற ஸ்தாபனத் தாரைத்தான் அப்படி குறிப்பிட்டிருக்கிறார்கள். தனியார் துறை முன்னேற்றத்தைத்தான், நாம் முன்னேறியிருக்கிறோம் என்று குறிப்பிட்டிருக்கிறார்கள் அமைச்சர் அவர்கள். இந்த நாம், தாரங்கதரா, விஸ்கோஸ், சேஷசாயி, மதராஸ் அலுமினியம் கம்பெனி, பாரி கம்பனி இவைகளைப் பிரதிபலிக்கிற நாமாக இருப்பதால்தான், "நாம் இந்த ஆட்சியில் சுகம் காண முடியாது, நாம் இங்கிருந்தால் வாழ முடியாது; ஆகவே கப்பல் ஏறுவோம்" என்று கப்பல் ஏறி, கொடுமைகள் பல அனுபவித்து வருகிறார்கள் ஏழை மக்கள். அந்த நாம் என்ற வார்த்தையின் பிரதிநிதிகள் ஏழை மக்களை வாழ்விக்கும் நிலையில் தொழில் திட்டங்களை

2nd July 1962] [திரு. மு. கருணாநிதி]

வகுக்கவில்லை என்பதை ஒரு குற்றச்சாட்டாக இம்மன்றத்தில் எடுத்துச் சொல்ல விரும்புகிறேன். தனியார் துறையை ஏன் வளர்க்கவேண்டும் அதற்குள்ள காரணங்கள் என்ன? ஏன் இப்படி பொதுத் துறையையும் தனியார் துறையையும் கதம்பம் மாதிரி கலக்கிற பொருளாதாரத் திட்டத்தை இந்த அரசினர் மேலும் மேலும் வளர்த்துக் கொண்டிருக்கிறார்கள் என்பதற்குள்ள காரணங்களை இந்த அமைச்சரவையிடம் எதிர்பார்க்கிறேன். தனியார் துறையினர் அடிக்கும் கொள்ளை லாபம் தடுக்கப்பட்டு அரசினர் அதை ஏற்று நடத்தினால் மேலும் மேலும் வரிகளைப் போட்டு மக்களை வாட்ட வேண்டிய அவசியம் இல்லை என்று நான் குறிப்பிட விரும்புகிறேன். இந்த ஆண்டு 7 கோடி ரூபாய்க்கு வரி போடப்பட்டிருக்கிறது. அப்படி 7 கோடி ரூபாய்க்கு வரி போடப் படும் என்று முதலமைச்சர் அவர்கள் அநேகமாக வரி போடு வதற்கு முன்னரே, இம்மன்றத்தில் இப்பேச்சு வருவதற்கு முன்னதாகவே வரி வருகிறது வரி வருகிறது என்று பொது மக்களிடம் எடுத்துச் சொல்லி அவர்களை ஓரளவு தைரியப்படுத்தி விட்டு . . . .

**கனம் திரு. எம். பக்தவத்சலம்:** கனம் முதலமைச்சர் அவர்கள் 7 கோடி என்ன சொல்லவில்லை. வரி கூடாதென்று பல கனம் அங்கத்தினர்கள் இந்த மன்றத்தில் சொன்னதற்கு முதலமைச்சர் அவர்கள் "வரி போட்டால் என்ன தப்பு" என்று சொன்னார்கள்.

**திரு. மு. கருணாநிதி:** கனம் முதலமைச்சர் அவர்கள் ஏழு கோடி என்று சொல்லாவிட்டாலும் தேர்தல் நேரத்தில் திராவிட முன்னேற்றக் கழகத்தினர் வெளியிட்ட சுவரொட்டிகளில் 7 கோடி ரூபாய்க்கு வரி போடுவார்கள் என்று உணர்ந்து நாட்டு மக்களை எச்சரித்திருக்கிறோம். ஆனால் நாட்டு மக்கள் அதைக் கேட்காத தினால் நீங்கள் 139 அங்கத்தினர்கள் என்றும் நாங்கள் 50 அங்கத் தினர்கள் என்றும் வர நேரிட்டது. தேர்தல் வரை ஒன்று சொல்லிக் கொண்டிருப்பார்கள், பின்னர் தேர்தலில் வோட்டு அளித்ததற்கு நன்றியாக வரிகளை போடுவார்கள் என்பதை இந்நாட்டு வாக்காளப் பெருமக்கள் இனிமேலாவது உணருவார்கள் என்று நம்புகிறேன். இன்று ஏழு கோடி ரூபாய்க்கு வரி போடப் பட்டிருக்கிறது. அபிவிருத்தி திட்டங்களை மனதிற்கொண்டு பார்க்கும்போது வரி போடும் முயற்சியை தடுக்க முடியாதென்று நிதியமைச்சர் அவர்கள் குறிப்பிட்டிருக்கிறார்கள். 1962-63-க்கான இடைக்கால வரவு செலவுத் திட்டத்தை இம்மன்றத்தில் சமர்ப் பித்தது எல்லோருக்கும் தெரியும். அதில் பழைய நிதியமைச்சர் அவர்கள் என்ன குறிப்பிட்டிருக்கிறார்கள் என்றால், வரவு 92.71 லட்சம், செலவு 99.67 லட்சம்; துண்டு விழுவது 7 கோடி என்று குறிப்பிட்டார்கள். அதோடு, திருத்தப்பட்டு மதிப்பீடு மறுபடியும் வரலாம் என்று சூசகமாக வெளியிட்டார்கள். இடைக்கால வரவு செலவுத் திட்டத்தில் ஏழு கோடி ரூபாய் துண்டு விழுகிறது என்று சொல்லிவிட்டு, தேர்தலுக்கு முன்பு அந்த பட்ஜெட் இங்கே சமர்ப்பிக்கப்பட்ட காரணத்தால், இந்த ஏழு கோடி ரூபாயை எப்படி நாம் நிறைவு செய்யப்போகிறோம் என்பதற்கான வழிவகை

[திரு. மு. கருணாநிதி] [2nd July 1962

சொல்லாமல் இப்பொழுது வேறு காரணங்கள் சொல்லப்படுவது ஏன் என்பதை அமைச்சர் அவர்களே இந்த மன்றத்தில் ஆராய்ந்து பார்த்துக்கூறும்படி நான் கேட்டுக்கொள்கின்றேன்.

அப்பொழுது ஏழு கோடி ரூபாய் எப்படிச் சரிக்கட்டப்படும் என்று பழைய நிதி அமைச்சர் சொன்னார்?

". . .பொதுவாக மத்திய அரசின் வரி இனங்களின் வருமானம் வளர்ச்சியுற்று வருகின்றது. அதிலும் குறிப்பாக பொருள்களின் மேல் விதிக்கப்பட்டுள்ள வரிகள் மூலமாகக் கிடைக்கும் வருமானம் கணிசமாக உயர்ந்து வருகிறது. ஆகவே, நம் மாநிலத்திற்கு இந்த வரி இனங்களிலிருந்து கிடைக்கக்கூடிய பங்கு கணிசமாக உயர ஏது உண்டு. இது மக்கு ஓரளவு நம்பிக்கை அளிக்கக் கூடியதாக இருக்கிறது. மேலும், மாநிலங்கட்கு மத்திய வருமானத்திலிருந்து கொடுக்கப்படும் பங்கைப்பற்றி மூன்றாவது நிதிக் கமிஷன் தற்போது ஆராய்ந்து வருகிறது. மாநில வரிகளில் பெரும் பாலானவை போதுமான அளவிற்கு விரிந்து கொடுப்பன அல்ல என்பதைப் பற்றியும், மக்களின் அடிப்படையான தேவைகளைப் பூர்த்தி செய்வதில் மாநில அரசாங்கங்கள் மேலும் மேலும் அதிகப் படியான பொறுப்புகளை ஏற்கவேண்டியிருக்கிறது என்பது பற்றியும் நிதிக் கமிஷனுக்கு எடுத்து விளக்கியுள்ளோம். விரைவில் சமர்ப்பிக்கவுள்ள நிதிக் கமிஷனின் அறிக்கை தக்க முறையில் மாநிலங்கட்கு நீதி வழங்கும் என்று எதிர்பார்க்கப் படுகிறது . . ."

என்று இந்த மன்றத்திலே இடைக்கால வரவு செலவுத் திட்டம் சமர்ப்பிக்கப்பட்டபோது கூறப்பட்டது.

அந்த வரவு செலவுத் திட்டத்தை ஆதரித்துப் பேசிய ஆளும் கட்சியில் உள்ளவர்கள், 'ஏழு கோடி ரூபாய் துண்டு விழுந்தும் வரி போடாத அரசு அல்லவா அரசு' என்று பாராட்டினார்கள். அந்தக் காரணங்களெல்லாம் இப்பொழுது எங்கே போயின? 'ஏழு கோடி ரூபாய் துண்டு விழுந்தாலும் பயப்படமாட்டோம், வரி போடுவோம்' என்று அப்பொழுது சொன்னால், எங்கே தேர்தலில் வோட்டுப் போடாமல் இருந்துவிடுவார்களோ என்பதற் காக அப்பொழுது ஒன்றும் சொல்லாமல், தேர்தலில் வெற்றி பெற்று அமைச்சர்கள் ஆளும் கட்சியினராக வந்த பிறகு வரி போடுகிறார்கள் என்பது தவிர வேறு அர்த்தம் என்ன? அப்பொழுது நிதி அமைச்சர் தந்த வாக்குறுதி என்ன ஆயிற்று? நிதிக்கமிஷன் நீதி வழங்கவில்லையா? இதற்கான பதிலை கனம் அமைச்சர் அவர்கள் இந்த மன்றத்தில் தருவார் என்று நான் கருதுகிறேன்.

*1961-62*-ம் ஆண்டுக்கான வரவு செலவுத் திட்டத்தைச் சமர்ப்பிக்கும் நேரத்தில் பழைய நிதி அமைச்சர், "ஜனநாயக அடிப்படையில் இயங்கும் நாட்டில் வரி மூலம் நிதி திரட்டுவதற்கு ஓர் எல்லையுண்டு" என்று தமது உரையில் குறிப்பிட்டிருக்கிறார். 'பழைய நிதி அமைச்சர்' என்று நான் குறிப்பிடுகிறபோது, புதிய நிதியமைச்சர், 'அது வேறு, இது வேறு, என்கிற அந்தப்

2nd July 1962] *[திரு. மு. கருணாநிதி]*

பிரச்சினைக்கு வரமாட்டார் என்று கருதுகிறேன். 'திட்டங்கள் நிறைவேற வேண்டுமானால், நிலையான சர்க்கார் இருக்கவேண்டும்' என்று இந்த அமைச்சர்கள் அடிக்கடி கூறி வருகிறார்கள். ஆகவே, நிலையான சர்க்கார் இருக்கவேண்டும் என்ற அவர்களுடைய கொள்கையின் அடிப்படையிலேயே, பழைய நிதி அமைச்சர், புதிய நிதி அமைச்சர் என்று குறிப்பிட்டாலும், இருவரும் ஒரு ஆளும் கட்சியின் சர்க்காரைச் சார்ந்தவர்களாதலால், ஒரே கொள்கை பிரதிபலிக்கும் என்ற அளவிலேதான் நான் குறிப்பிடுகிறேன். 'ஜன நாயக அடிப்படையில் இயங்கும் நாட்டில் வரி மூலம் நிதி திரட்டு வதற்கு ஓர் எல்லையுண்டு' என்று குறிப்பிட்ட அந்த வாசகம் இந்த நிதி நிலை அறிக்கையில் எங்கே போயிற்று? மைசூர் மாநில நிதி அமைச்சர் இரண்டு நாட்களுக்கு முன்பு என்ன பேசியிருக் கிறார்? '42 கோடி ரூபாய் அளவிற்கு மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்திலே நாம் வரி போடவேண்டும் என்று இருக்கிறது; போடுவதற்கு சாத்தியம் இல்லை; 20 கோடி ரூபாய் அளவிற்குத் தான் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் போட முடியும்; துண்டு விழும் தொகையை திட்டக் கமிஷன் தந்தாகவேண்டும்' என்ற வேண்டுகோளை மைசூர் அரசாங்கம் வடக்கே இருக்கும் திட்டக் குழுவிற்கு விடுத்திருக்கிறது. அதுபோல நம்முடைய நிதி அமைச்சர் அவர்களும் தைரியமாக இதை ஏன் சொல்லக் கூடாது? நம்முடைய நிதி அமைச்சர் தைரியம் இல்லாதவரா? சென்ற தடவை போலீஸ் அமைச்சராக இருந்தவர்தானே. ஆகவே, தைரியத்தை வரவழைத்துக்கொண்டு நிச்சயமாக திட்டக் குழுவினிடம் அவர் போராடவேண்டுமென்று நான் கேட்டுக் கொள்கின்றேன்.

இப்பொழுது ஒன்பது கோடி ரூபாய்க்குமேல் துண்டு விழுவதைச் சரிக்கட்டுவதற்காகப் போடப்படுகிற வரிகளைக் குறித்து, இன்றையதினம் மேலெழுந்தவாரியாக யாருக்கோ போடப்பட்ட வரி என்று சொல்லிவிடலாம். இதனால் பெரும் பாலும் பொது மக்கள் பாதிக்கப்படுகிறார்கள் என்பதை நான் இங்கே கூற விரும்புகிறேன்.

பஸ்களுக்கு வரி அதிகமாக்கப்பட்டிருக்கிறது. கால் ஆண்டுக்கு ஐந்து ரூபாய், பத்து ரூபாய், பதினைந்து ரூபாய் என்ற விகிதங் களில் வரி அதிகமாக்கப்பட்டிருக்கிறது. பஸ்களுக்குப் போடப் பட்டிருக்கிற இந்த வரியை திராவிட முன்னேற்றக் கழகம் எதிர்க்கவில்லை. ஆனால், அப்படிப் போடப்பட்டிருக்கிற வரி யாருடைய தலையிலே சுமத்தப்படுகிறது என்பதை ஆராய வேண்டும். இது பிரயாணிகளுடைய தலையிலே பஸ் கட்டணம் மூலமாகச் சுமத்தப்படும் என்பதைக் குறித்து அறிக்கை களெல்லாம் பிரபல பஸ் முதலாளிகள் பத்திரிகைகளில் அழகாக வெளியிட்டு விட்டார்கள். 'பஸ் கட்டணத்தை உயர்த்த இருக்கிறோம்' என்று அவர்கள் அறிக்கை வெளியிட்டுவிட்டார்கள். பஸ் கட்டணம் உயர்ந்த பட்சம் 7½ பைசா என்று இருந்தாலும், இன்றைக்கு நான்கு பைசாவிலிருந்து ஆறு பைசா அளவிலேதான் கட்டணம் விதிக்கப்படுகிறது. இந்த வரி வந்த பிறகு,

[திரு. மு. கருணாநிதி] [2nd July 1962

அவர்களுக்கு இருக்கும் சட்டத்தைப் பயன்படுத்திக்கொண்டு, ஏழு, ஏழரை பைசா வரையிலும் கட்டணத்தை வசூலிக்க முற்படுவார்களானால், இந்த வரி மூலமாகப் பாதிக்கப்படுகிறவர்கள் பெரும்பாலும் ஏழைகள், பாட்டாளிப் பொது மக்கள் என்பதை நான் இங்கே உணர்த்த விரும்புகிறேன். ஆகவே, இந்த வரியைப் போடுகின்ற இதே நேரத்தில், 'கட்டணம் நிச்சயமாக உயர்ந்து விடாது என்பதற்கு சர்க்கார் தகுந்த பாதுகாப்பு அளிக்கும்' என்று அமைச்சர் அவர்கள் இங்கே உறுதிமொழி அளிக்க வேண்டும். சட்டத்தைத் திருத்தி ஐந்து அல்லது ஆறு பைசா அளவிலேதான் கட்டணம் இருக்கவேண்டும் என்று இந்தச் சர்க்கார் இதற்கான சட்டத்தை மாற்றியமைக்கவேண்டும். அப்படிப்பட்ட உறுதிமொழியைத் தந்துவிட்டு, இந்த வரியைப் போட்டால் தான் பொதுமக்கள் பாதுகாக்கப்படுவார்கள்; இல்லாவிட்டால், 'அடிப்பது போல் அடிக்கிறேன், நீ அழுவது போல் அழு' என்று பஸ் முதலாளிகளைப் பார்த்துச் சொல்வதாகத்தான் இருக்கும். பஸ் தொழிலைத் தேசியமயமாக்கவேண்டும் என்ற கோரிக்கையைப் புறக்கணித்துவிட்டு இன்றையதினம் பஸ்ஸுக்கு வரி போடுவது எப்படியிருக்கிறது என்றால், 'தும்பை விட்டுவிட்டு வாலைப் பிடிக்கும் கதை' யாகத்தான் இருக்கிறது. பஸ் தொழில் தேசியமயமாக்கப்படுமானால் வரியை விட அதன் மூலம் அதிகமான வருமானம் நிச்சயமாக வரும் என்பதை நான் இந்த சர்க்காருக்குச் சுட்டிக் காட்டுகிறேன்.

லாரிகளைப் பொறுத்தவரையில், சிறிய லாரிக்காரர்கள் பஸ் முதலாளிகள் பெருகிற அந்த அளவுக்கு லாபம் சம்பாதிக்கவில்லை. அவர்களுக்கு வரி போடுவதைப்பற்றிச் சிந்திக்கவேண்டும். பத்து, இருபது லாரிகள் வைத்திருப்பவர்கள் இந்த வரியினால் பாதிக்கப்படமாட்டார்கள் என்றாலும், ஒரு லாரி, இரண்டு லாரிகள் வைத்துக்கொண்டு பிழைப்பு நடத்திக்கொண்டிருப்பவர்கள் நிச்சயமாக பாதிக்கப்படுவார்கள். அதை இந்த அமைச்சரவை ஆழ்ந்து சிந்திக்கவேண்டும். லாரிகளுக்கு வரி போடும் காரணத்தால் ஏழை மக்கள் பாதிக்கப்படுவார்கள். உணவுப் பண்டங்களின் விலை ஏற்றத்திற்கு அது காரணமாகும். இவைகளை இந்தச் சர்க்கார் யோசிக்க வேண்டும்.

மின்சார உபயோகத்தின் மீது வரி விதிப்பதைப் பொறுத்த வரையிலும், 'லோ டென்ஷன்' மின்சாரம் விவசாயத்திற்குப் பயன்படுகிறது. அதற்கு வரியிலிருந்து விலக்கு தேவை. வீடுகளைப் பொறுத்த வரையில், ஆடம்பரமான விளக்குகள், வர்ண விளக்குகள், வாழைத் தண்டு விளக்குகள் முதலியவற்றைப் போட்டிருந்தால், அதற்கு மின்சார வரி இருக்கலாம். ஆனால், 15 வாட்ஸ், 25 வாட்ஸ் என்ற அளவில் மின்மினிப்பூச்சி போல் விளக்கு வைத்துக்கொண்டிருக்கிற, சாதாரண நடுத்தரக் குடும்பங்களுள்ள அந்த வீடுகளுக்கு விலக்கு அளிக்கப்பட வழிவகை காணவேண்டுமென்று நான் கேட்டுக் கொள்கிறேன்.

நில வரியைப் பொறுத்தவரையில், குறிப்பிட விரும்புகிறேன். சென்ற முப்பது ஆண்டுகளிலே நிலங்களினுடைய தரம் பல நிலைமைகளாக மாற்றப்பட்டிருக்கிறது. மானாவாரிப் பாசனமாக

2nd July 1962] [திரு. மு. கருணாநிதி]

இருந்தது வளமான பாசனமாக மாறியிருக்கிறது; வளமாக இருந்தது வானம் பார்க்கின்ற சீமையாக இருக்கிறது. முப்பது ஆண்டுகளில் ஏற்பட்ட மாற்றங்கள், புதிய நிலைமைகள், இவைகளை கவனித்து, நிலங்களின் தரம் சரியானபடி வகுக்கப்பட குழு ஒன்று அமைக்கப்படவேண்டும். அப்படி அமைக்கப்படுகிற குழு, தற்போது இருக்கிற நில வரி விகிதத்திலே மாறுதல் செய்யலாம். இப்பொழுது புதிதாக விதிக்கப்படுகிற நில வரியைக் கைவிட வேண்டும். அந்தக் குழு அமைக்கப்பட்ட பிறகு, நில வரி மாறுதலைக் கவனிக்கலாம்.

குதிரைப் பந்தய வரி விகிதங்களை இரட்டித்து, அதன் மூலம் 24 லட்சம் ரூபாய் கிடைக்கும் என்று சொல்லப்படுகிறது. குதிரைப் பந்தய முறையை ஒழிக்கவேண்டுமென்று மக்கள் கூறிக்கொண்டிருக்கிறார்கள். மது விலக்குத் திட்டம் வந்த காரணத்தால், மது ஒழிக்கப்பட்டது. கலால் வரி மூலம் கிடைத்து வந்த 17 கோடி ரூபாயை இழந்து அந்தத் தீய செயலை நாட்டிலிருந்து ஒழித்து விட்டோம் என்ற பெருமை பெற்றிருக்கிற இந்த சர்க்கார் குதிரைப் பந்தயத்தையும் ஒழித்து, அதனால் கிடைக்கின்ற சொற்ப வருமானத்தை இழக்கத் தயாராயிருக்கவேண்டுமென்று நான் கேட்டுக் கொள்கின்றேன்.

இறுதியாக, இந்த ஆண்டு நிதி நிலை அறிக்கையில், மக்களுடைய வாழ்க்கையை அரித்துக்கொண்டிருக்கிற விலைவாசி உயர்வுப் பிரச்சினையைப் பற்றி அமைச்சர் அவர்கள் எதுவுமே குறிப்பிடாதது மிகவும் வருந்தத்தக்கது. விலைவாசி ஏற்றத்தின் காரணமாகத்தான் பொருளாதாரத் துறை பாதிக்கப்பட்டிருக்கிறது; பொருளாதார வளர்ச்சி குன்றிக் கிடக்கிறது. நம்முடைய திட்டங்களின் முன்னேற்றம் பாதிக்கப்படுகிறது, என்று பழைய நிதி அமைச்சர் கூறியிருக்கிறார். அதைப் புதிய நிதி அமைச்சர் கவனிப்பாரா என்று கேட்டுக்கொண்டு, இந்த விவாதத்தில் என்னுடைய கருத்தை இந்த அளவில் முடித்துக் கொள்கிறேன்.

**திரு. ஜே. மாதா கவுடர்:** கனம் சபாநாயகர் அவர்களே, நிதி அமைச்சர் அவர்கள் சமர்ப்பித்திருக்கும் 1962-63-ஆம் ஆண்டினுடைய திருத்தப்பட்ட நிதி நிலை அறிக்கையை வரவேற்று எனது கருத்துக்களை நான் சொல்ல விரும்புகிறேன். இந்த ஆண்டுக்கான திருத்தப்பட்ட நிதி நிலை அறிக்கை இங்கே சமர்ப்பிக்கப் பட்டிருக்கும் இந்த நேரத்தில், புதிய வரிகள் போட இருப்பதைப் பற்றி எதிர்க் கட்சியிலே இருக்கும் அங்கத்தினர்கள் மாறுபட்ட கருத்துக்களை எடுத்துச் சொல்ல முன்வரலாம். ஆனால், இந்த வரியினால் யாருக்குத் தொல்லைகள் ஏற்படும் என்பதைப்பற்றி அவர்கள் குறிப்பிடும் நேரத்தில் பஸ் முதலாளிகளுக்கு வரி என்று விதித்திருந்தாலும், மறைமுகமாக அது மக்களைத்தான் சாரும் என்று அவர்கள் குறிப்பிடுகிறார்கள்.

இது பழைய பல்லவி. கடந்த ஐந்தாண்டு காலமாக இதே பாட்டைத்தான் எதிர்கட்சிக்காரர்கள் பாடிக்கொண்டிருக்கிறார்கள். எனக்கு முன்பு பேசிய திரு. கருணாநிதி அவர்களும் ஐந்தாண்டு காலமாக இதே பல்லவியைத்தான் பாடிக்கொண்டிருந்தார்கள். 9-30 a.m.

[திரு. ஜே. மாதா கவுடர்] [2nd July 1962

ஆனல் மக்களுக்குத் திட்டத்தின் மூலமாகவே பல நன்மைகளைச் செய்ய முடியும் என்று கருதி அவர்களுக்கு நல்வாழ்வு ஏற்படுத்துவதற்கு நாங்கள் முற்படுகிறோம். திட்டங்களைப் போட்டுச் செயல்படுத்த வேண்மென்றால் வரி போடும்படியாகத்தான் இருக்கும் என்று சூசகமாக முன்பே தெரிவித்திருக்கிறார்கள். நமக்குத் திட்டம் வேண்டுமா, வேண்டாமா என்பதைப்பற்றி எனக்கு முன்பு பேசிய கனம் அங்கத்தினர் குறிப்பிடவில்லை. திட்டம் வேண்டாம் என்று அவரது கட்சிக்காரர்களும் குறிப்பிட்டது இல்லை. ஆனல் இன்னொரு கட்சிக்காரர்கள் இருக்கிறார்கள். இந்த நாட்டிலே திட்டமே வேண்டாம். வரியும் போட வேண்டாம். வரி வரி என்று போட்டு திட்டங்களை நிறைவேற்றுவதைவிட பணக்காரர்களை தங்கள் இஷ்டம் போல் தொழில் நடத்த அனுமதி அளித்தாலே பல தொழில்கள், பல அபிவிருத்திகள் ஏற்படக் கூடும் என்று சொல்கிறவர்கள் இன்னொரு கட்சிக்காரர்கள் என்று நினைக்கிறேன்.

ஆனல் ஜனநாயக ஆட்சியில் ஒரு சிலர் தங்கள் இஷ்டம்போல் தொழில் நடத்திக் கொள்ளை லாபம் சம்பாதிக்க விட்டுக்கொண்டிருக்க முடியாது. அதுவும் பல்லாண்டு காலமாக அடிமைப்பட்டுக் கிடந்த நம் நாடு முன்னேற வேண்டும் என்றால் நிச்சயமாக வரி போடத்தான் வேண்டும். முதலாவது ஐந்தாண்டுத் திட்டம், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம், மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் என்று ஐந்து ஐந்து ஆண்டு திட்டங்களையாவது போட்டு நிறைவேற்றினல்தான் நாடு முன்னேற முடியும். எந்தநாடும் விடுதலை அடைந்த பதினைந்து இருபது வருஷங்களுக்குள் முன்னேறிவிடவில்லை. ஜனநாயக நாடு ஒவ்வொன்றிலும் அதிகமான வரிகள் தான் இருந்திருக்கின்றன. இதைக் கண்கூடாக நாம் பார்த்திருக்கிறோம்.

எதிர்கட்சிக்காரர்கள், "விலைவாசி உயர்ந்துக்கொண்டே போகிறது, உற்பத்தியும் அதிகரிக்கவில்லை" என்ற குற்றச்சாட்டுகளைச் சொல்லியிருக்கிறார்கள். உணவு தானியத்தின் விலை அதிகரிப்பதற்கும், உணவு தான்யப் பற்றாக்குறைதான் காரணம் என்று சொல்கிற குற்றச்சாட்டை எதிர்கட்சிக்காரர்கள் சற்றுச் சிந்தித்துப் பார்க்கவேண்டும். அதுவும் திராவிட முன்னேற்றக் கழகத்தின் சார்பாக "உணவு தான்ய விலையைக் குறையுங்கள்" என்று எழுதிய கொடிகளைப் பிடித்துக்கொண்டு ஜூன் 30-ஆம் தேதியன்று கோட்டைக்கு முன்பாக ஆர்பாட்டம் நடத்தினர்கள். ஏதோ ஒரு ஆயிரம் பேர் இருக்குமென்று நினைக்கிறேன். இப்படி உணவு தான்ய விலைவாசியைக் குறையுங்கள் என்று கோட்டைக்கு முன்பு கொடியைப் பிடித்துக்கொண்டு ஆர்பாட்டம் செய்வதனல் எப்படி உணவு தான்ய உற்பத்தி பெருகும் என்பதை திரு. கருணாநிதி சிந்தித்துப் பார்க்கவேண்டும். இதனல் உண்மையில் உணவு தான்ய விலை குறைந்து விடாது. அவர்கள் கையில் கொடியைக் கொடுத்து கோட்டைக்கு முன் நிறுத்தி வைத்ததற்குப் பதிலாக அத்தனை பேர்களின் கையிலும் மண்வெட்டியை கொடுத்திருந்தால்கூடப் பயன் உடையதாக இருந்திருக்கும்.

2nd July 1962]

**திரு. மு. கருணாநிதி :** எங்களுக்கு மண் வெட்டி கொழு பிடிக்கத் தெரியாவிட்டாலும் நிச்சயமாக வால் பிடிக்கத் தெரியாது.

**கனம் திரு. கு. காமராஜ் :** மாட்டுக்கு வால் பிடிக்கத் தெரிந்தால்தான் விவசாயம் செய்ய முடியும். (சிரிப்பு)

**திரு. ஜே. மாதா கவுடர் :** பட்டிணத்தில் இருக்கிறவர்கள் உங்களுக்கு வால் பிடித்துக்கொண்டு இங்கே வந்திருக்கிறார்களேயன்றி அவர்கள் சுயபுத்தியுடன் வரவில்லையென்று சொல்ல விரும்புகிறேன்.

இப்படி இருந்தால் நாட்டின் தரம் எப்படி உயர முடியும்? நாட்டு மக்களுடைய வாழ்க்கைத்தரம் எப்படி உயரமுடியும் என்று சிந்தித்துப் பார்க்கவேண்டிய நிலையில் இருக்கிறோம் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். வரி வேண்டாம் என்று சொன்னால் நம்முடைய செலவை எவ்வாறு குறைப்பது என்று யோசனை சொல்லவேண்டும். இன்ன இன்ன திட்டங்கள் வேண்டாம் என்று சொல்லவேண்டும். அப்படி எதுவும் சொல்லாது வரிபளுவைக் குறையுங்கள், வரி வேண்டாம் என்று சொல்வதில் எந்தவிதமான அர்த்தமும் இல்லை. இந்த அறிக்கையிலேயே சொல்லியிருக்கிறார்கள். "மக்கள் இப்பொழுதுதான் தங்கள் நல் வாழ்விற்கான அறிகுறிகளைக் காண ஆரம்பித்திருக்கின்றனர். இந் நிலையில் நம்முடைய செலவுத் தொகையில் பெருமளவிற்குக் காரணமான கல்வி, மருத்துவ வசதி, சுகாதார வசதி, கிராம அபிவிருத்தி ஆகிய வேலை திட்டங்களுக்காக ஒதுக்கியிருக்கும் பணத்தைக் குறைக்க முடியாது" என்று.

இப்படி கல்வி, மருத்துவம், பொதுசுகாதாரம்—இதன்காரணமாக அதிகமாக நமக்கு செலவு ஏற்பட்டிருக்கிறது என்பதை நாம் பார்க்கும்போது கல்வித் திட்டங்களை விட்டுவிடச் சொல்கிறீர்களா? பொதுசுகாதாரத் திட்டங்களைக் குறைத்துக்கொள்ளச் சொல்கிறீர்களா? அப்படி எதுவும் சொல்லாது வரித் திட்டங்களே வேண்டாம் என்று சொல்வது நாட்டு மக்களுக்கு பயன் அளிக்காது என்று தெரிவித்துக்கொள்கிறேன். நீங்கள் அப்படிச் சொல்வது மக்களுக்கு நன்மை செய்யவேண்டுமென்ற நோக்கத்தில் நீங்கள் பேசுவதாகக் காணோம் என்கிற குற்றச்சாட்டை சொல்ல ஆசைப் படுகிறேன். நாட்டின் முன்னேற்றத்திற்கு பல திட்டங்களைப் போடுகிற சமயத்திலே நாட்டின் வருவாயையும் பெருக்கிக்கொள்ள வேண்டும் என்பது தான் என்னுடைய கருத்து என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

வரியைப் பொறுத்த வரையில் புதிய வரிகளைப் போடும்போது எதிர்கட்சியில் இருக்கக்கூடிய அங்கத்தினர்கள் ஒருவகையில் அவற்றை எதிர்க்கிறார்கள். அதே சமயம் பஸ்களை ஏன் தேசியமாக்கக் கூடாது என்று சொல்லிக்கொண்டிருக்கிறார்கள். பஸ் தொழிலை தேசீயமாக்கவேண்டும், தேசீயமாக்கவேண்டும் என்று அவர்கள் சொல்லுவது தேர்தல் காலத்தில் பஸ் முதலாளிகள் காங்கிரஸ்காரர்களுக்கு ஆதரவாக இருக்கிறார்கள் என்கிற ஒரு காரணத்தினல்தான் என்றுநினைக்கிறேன். இன்றையதினம் பஸ்

[திரு. ஜே. மாதா கவுடர்] 2nd July 1962

களுக்கு வரி போடுகிறோம். திரு. நடேச முதலியார் எங்கள் பக்கத்தில் இருக்கிறார் என்பதற்காக வரிபோடாமல் விட்டோமா? பஸ்களுக்கு வரி போடத்தான் செய்கிறோம். வரி போடுவதை ஆதரிக்கிறீர்களா, இல்லையா என்று தெளிவாகச் சொல்லாமல் இன்றைக்கே தேசியமாக்கவேண்டும் என்று எதிர்க்கட்சியினர் சொல்லுகிறார்கள். ஏற்கனவே நிதி அமைச்சராக இருந்தவர் இதைப்பற்றி தெளிவாக எடுத்துச் சொல்லியிருக்கிறார். தேசிய மயமாக்குவது என்றால் ஏராளமாக நஷ்ட ஈடு கொடுக்கவேண்டிய தாக இருக்கிறது. நஷ்டஈடு கொடுக்காமல் தேசியமாக்க முடியாது. ஆகவே நம்முடைய திட்டச் செலவுகளுக்கு எல்லாம் செலவு செய்துவிட்டு உபரி வருமானம் ஏற்பட்டால் அப்போது தான் நாட்டிலுள்ள ஒவ்வொரு தொழிலையும் தேசியமாக்குவதற்கு நாம் முன் வரலாம். அப்படி யில்லாது இன்றைக்கே பஸ்களைத் தேசியமாக்கவேண்டுமென்றால் எத்தனை கோடி ரூபாய் வேண்டும்? பணமே கொடுக்காமல் அத்தனை பஸ்களையும் அள்ளிக்கொண்டு வந்து சர்க்காரிடத்தில் வைத்துக்கொள்ள முடியாது. ஜனநாயக ஆட்சி இங்கே நடைபெறுகிறது. ஆகவே சர்ப்ளஸ் பட்ஜெட்—உபரி பட்ஜெட் வருகிற போது தான் தேசியமாக்குவதைப்பற்றி யோசிக்க முடியும் என்று நான் கருதுகிறேன்.

ஆனால் இன்னொரு விஷயத்தைக் குறிப்பிட விரும்புகிறேன். குறிப்பாக லாரிகளுக்குப் போட்டிருக்கும் வரி கிராமப்புறத் தொழிலை பாதித்துவிடுமோ என்று அஞ்சுகிறேன். ஆனாலும் பற்றாக்குறை பட்ஜெட் சரிகட்டவேண்டிய நிலையில் நாம் இருப்பதனால் ஒரு யோசனை சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். இந்த லாரிகள் மூலம் நமக்குக் கிடைக்கும் வருமானம் 50 லட்சம் ரூபாய் என்று நினைக்கிறேன். இந்த வரியைத்தள்ளிவிட்டு வேறு புது வரி போடுவது நல்லது என்று நினைக்கிறேன். இந்த மாகாணத்தில் குறைந்தது 10 ஆயிரம் பெட்ரோல் பங்குகள் இருக்கின்றன. ஒவ்வொரு பெட்ரோல் பங்கிலும் பெட்ரோல் விற்பனை செய்கிற ஏஜெண்டுகளுக்கு குறைந்தது 500 ரூபாய் வரிவிதித்தால் போதும், இந்த 50 லட்சம் ரூபாய் கிடைக்கும். இவர்களுக்கு இப்போது ஏராளமாக லாபம் வருகிறது. எண்ணை கும்பெனிகள் அந்நியநாட்டுக்குச் சொந்தமானது, அதற்கு நாம் எப்படி வரிவிதிப்பது என்று யோசிக்கலாம். ஆனால் அவர்கள் இந்த ஏஜெண்டுகளின் மூலம் தான் விற்பனை செய்கிறார்கள். இந்த ஏஜென்சிகளை நாம் எடுத்துக்கொண்டால்கூட ஒரு கோடிக்குமேல் லாபம் கிடைக்கும். ஆகவே லாரிகளுக்குப் போடுகிற வரியை எடுத்துவிட வேண்டும் என்று அமைச்சரைக்கேட்டுக்கொண்டு முடித்துக்கொள்கிறேன்.

* **திரு. நெ. சா. இராமலிங்கம் :** கனம் அவைத் தலைவர் அவர்களே, சபை முன் வைக்கப்பட்டிருக்கும் 1962-63-ம் ஆண்டுக்கான வரவு செலவுத் திட்டத்தை வரவேற்று என்னுடைய கருத்துக்களைச் சொல்ல விரும்புகிறேன். இந்த ஆண்டு அறிக்கையில் பல நல்ல அம்சங்கள் காணப்படுகின்றன. முதலாவதாக, அரசாங்க கெஜட் பதிவு இல்லாத ஊழியர்களுக்கும், ஆசிரியர்களுக்கும் அவர் களுடைய மக்கள் தொழில் படிப்பு படிக்க கூடனுதவி கொடுப்

2nd July 1962] [திரு. நெ. சா இராமலிங்கம்]

பதை அரசாங்க உத்தியோகஸ்தர்கள் அல்லாத ஏழைகளுக்கும் விஸ்தரித்திருப்பது வரவேற்கத்தக்கது. எனது தொகுதியான வேதாரணியத்தில் தொழில் அபிவிருத்திக்கான நடவடிக்கைகளை எடுத்திருப்பதை அந்தப் பகுதி மக்கள் வரவேற்கிறார்கள். தற்போது மத்திய அரசாங்கம் அங்கு ரசாயனத் தொழிற்சாலையை ஆரம்பிக்க அனுமதிகொடுத்திருக்கிறது. மற்றும் ஒன்றை ஆரம்பிக்கவும் அனுமதி கோரியிருக்கிறார்கள். மக்களுடைய வேலை வாய்ப்பு அதிகரிக்கவும், அந்தப் பகுதி மக்கள் நல்வாழ்வு வாழவும் அந்தப் பகுதியில் தொழில் அபிவிருத்தி செய்து வருவதற்காக அரசாங்கத்திற்கு நன்றி தெரிவித்துக் கொள்ளக் கடமைப் பட்டுள்ளேன். இந்த மாதிரித் தொழிற்சாலை ஆரம்பிக்கும் போது சில சிறிய தொந்தரவுகளும் ஏற்படுகின்றன. இந்தத் தொழிற்சாலை ஆரம்பிக்கப்பட இருக்கும் பகுதியில் சில குடிசைகளை அப்புறப் படுத்த நடவடிக்கை எடுத்து வருகிறார்கள். இது பற்றி நன்றாக ஆராய்ந்து பார்த்து அந்தக் குடிசைவாசிகளை அப்புறப்படுத்த வேண்டும். அந்தக் குடிசைகளை அவசியம் அப்புறப்படுத்தியாக வேண்டுமா, அல்லது தொழிற்சாலையை கொஞ்சம் ஒதுக்கி வைக்கலாமா என்பதைப் பற்றி ஆராய்ந்து அரசாங்கம் நடவடிக்கை எடுக்க வேண்டும்.

கிழக்கு கடற்கரை ரோட்டைப் போடுவதற்கான நடவடிக்கைகளை எடுத்துக் கொள்ள வேண்டுமென்று கடந்த 5 ஆண்டுகளாகச் சொல்லிக்கொண்டு வந்தோம். பம்பாயில் இருந்து கன்னியாகுமரி வரையில் வெஸ்ட் கோஸ்ட் ரோடு போடப்பட்டிருப்பதைப் போல் ஈஸ்ட் கோஸ்ட் ரோடு போடுவதற்கும் முக்கியத்துவம் தரவேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன். இந்த ஐந்தாண்டுத் திட்டத்தில் அதற்கான நடவடிக்கைகளை எடுத்துக் கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். இதனால் போக்கு வரத்திற்கு வசதி ஏற்படும். செங்குத்தலை ரோடு என்று சொல்லக் கூடிய ஒரு ரோடானது ஜில்லாபோர்டு காலத்தில் சாங்ஷன் செய்யப்பட்டு வேலை ஆரம்பிக்கப்பட்டது. அது முடியாமல் தடைப் பட்டு நிற்கிறது. கிட்டத்தட்ட 60 கிராமங்களைச் சேர்ந்த மக்கள் அந்த ரோட்டை உபயோகப்படுத்த வேண்டியிருக்கிறது. அன்றாடம் நெல், புகையிலை போன்ற உற்பத்திப் பொருள்களை ஏற்றிச் செல்ல வேண்டியிருக்கிறது. எனவே, அந்த ரோடு போடும் வேலையைப் பூர்த்தி செய்வதற்கான நடவடிக்கையை உடனடியாக எடுத்துக் கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

இந்தப் பகுதி கடற்கரை ஓரமாக இருப்பதால் பாசன வசதி மிகவும் குறைவாக இருக்கிறது. கடந்த 4, 5 வருஷங்களில் சில திட்டங்கள் போடப்பட்டு வேலை ஆரம்பிக்கப்பட்ட போதிலும் அவை நல்ல முறையிலே இன்னும் பூர்த்தியாக வில்லை. மானங்கொண்டாறு என்ற ஸ்கீம் சென்ற 5 வருடங்களாக பரிசீலனையில் இருந்து வருகிறது. அடப்பாறு ஸ்கீமை எடுத்து லிப்ட் இரிகேஷன் மூலம் தண்ணீர் பாய்ச்ச திட்டம் போட்டால் அதன் மூலம் அங்குள்ள மக்கள் நல் வாழ்வு பெறமுடியும். கற்பகனத் குளம் கிராமத்தில் ஆயிரம் ஏக்கர் நிலத்திற்கு நீர்ப்பாசன வசதி

[திரு. நெ. சா. இராமலிங்கம்] [2nd July 1962

செய்வதற்காக எடுத்துக் கொள்ளப்பட்ட திட்டம் நான்கு வருஷங்களாகியும் இன்னும் பூர்த்தி பெறவில்லை. அதை உடனடியாக பூர்த்தி செய்து தரவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். வேதாரண்யம் பகுதி புகையிலைக்குப் பேர்போனது. அதை அபிவிருத்தி செய்வதன் மூலம் வெளிநாட்டு செலாவணியைப் பெற முடியும். கடற்கரை ஓரப் பகுதிகளில் முந்திரிச் செடி நன்றாக வளருகிறது. தஞ்சை முந்திரி என்றால் எல்லோரும் ஆசைப்படுகிறார்கள். இந்த முந்திரியை மேனாடுகளுக்கு அனுப்பினால் அந்நியச் செலாவணியை நாம் பெற முடியும். நம் ராஜ்யம் பிரிந்த பிறகு, கன்னடம் சென்னை மாநிலத்தில் இருந்து பிரிந்த பிறகு, இங்கு முந்திரி தொழிற்சாலை ஒன்றும் இல்லை. தமிழகத்தில் நாகப்பட்டிணம் போன்ற துறை முகப் பகுதியில் ஒரு முந்திரித் தொழிற்சாலையை ஆரம்பிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

மின்சாரத்தைப் பற்றி அதிகமாகக் கூற விரும்பவில்லை. பொதுவாக, தஞ்சை ஜில்லாவில் மின்சாரம் குறைவாக இருக்கிறது. இந்த விஷயத்தில் தாயில்லாப் பிள்ளைபோல் கருதப்படுகிறது. அங்கு அதிக அளவில் மின்சாரத்தைக் கொடுப்பதற்கு அரசாங்கம் ஏற்பாடு செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொண்டு இந்த வரவு செலவுத் திட்டத்தை ஆதரித்து எனது வார்த்தைகளை முடித்துக்கொள்ளுகிறேன்.

* **திரு. க. ர. முனிரத்தினம்:** கனம் ஆட்சி மன்ற அவைத் தலைவர் அவர்களே, இந்த ஆண்டு நிதி நிலை அறிக்கையைக் காணும்போது என் போன்ற பின்தங்கிய பகுதிகளில் இருந்து வந்திருக்கும் பிரதிநிதிகளுக்கு மெத்த ஏமாற்றந்தான் காணப்படுகிறது. நான் வந்திருக்கும் ஆற்காடு தொகுதியானது எந்த ஒரு வகையிலும் முன்னேற்றம் அடையாத ஒரு தொகுதி என்பது யாவரும் அறிந்த விஷயந்தான். அப்படி இருந்தும் இது போன்ற பின் தங்கிய பகுதிகளை நடப்பு ஆண்டில் எவ்வாறு வளம் பெறச் செய்யப் போகிறார்கள் என்று நிதியமைச்சர் அவர்கள் தெளிவு படுத்தவில்லை.

வட ஆற்காட்டில் புதிய பயிரான பருத்தியைப் பயிர் செய்ய ஏற்பாடு செய்யப் போவதாக கூறியிருக்கிறார்கள். இந்த மாவட்டத்தில் உள்ளவர்களுக்குப் பருத்தியை எவ்வாரு பயிர் செய்வது என்று தெரியாத காரணத்தால் ஏற்படும் நஷ்டத்தைச் சரிக்கட்ட விவசாயிகளுக்கு எந்த அளவுக்கு உதவி செய்வார்கள் என்பதைத் தெளிவுபடுத்தவில்லை. அதே நேரத்தில் என்னுடைய தொகுதியிலே பல ஆண்டு காலமாக மக்களுக்குப் பழக்கப்பட்டிருக்கிற நிலக்கடலைப் பயிரை தீவிரத் திட்டமாக அமுலாக்கினால் நலமாக இருக்குமென்று எண்ணுகிறேன். ஆற்காட்டிலும் அதன் சுற்றுப்புறப் பிரதேசங்களிலும் இருக்கும் மண், வளமாக இருக்கும் காரணத்தால் அங்கு ஒரு மண்வள ஆய்வுக் கூடத்தை நிறுவினால் மிகவும் நலமாக இருக்கும் என்று தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.

2nd July 1962] [திரு. க. ர. முனிரத்தினம்]

இப்போதுள்ள பாலாற்று அணையைப்பற்றி இந்த நிதி நிலை அறிக்கையில் குறிப்பிட்டிருப்பது, அழுகின்ற பிள்ளைக்கு வாழைப் பழத்தைக்காட்டும் செயலாகத்தான் இருக்கிறது என்று கருது கின்றேன். ஆகவே மைசூர் மாநிலத்திலிருந்து காவேரி ஆற்றி லிருந்து தண்ணீர் கொண்டுவந்து ஆண்டு ஒன்றுக்கு மூன்று மாத காலத்திற்காகவாவது தண்ணீர் ஓடும்படி செய்தால்தான் நன்மை பயக்குமே தவிர, வேறு முறைகளில் செலவு செய்வதெல்லாம் வீண் செலவுதான் என்பதைக் கூறிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

தவிரவும், இந்த நிதிநிலை அறிக்கையில் ஊற்றுநீர் குழாய் களையும் வடிமுனைக் குழாய் கிணறுகளையும் வெட்டுவதற்கு ஏற்பாடு செய்யப்போவதாக கனம் அமைச்சர் அவர்கள் கூறி யிருக்கிறார்கள். ஆனால் என் தொகுதியில் எல்லாம் பாறைதான் அதிகமாக இருக்கிறது. அம்மாதிரியான இடங்களில் குறைந்த செலவில் போரிங் போடுவதற்கு வேண்டிய ஏற்பாடு செய்து கொடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

என்னுடைய தொகுதியைப் பொறுத்தவரையில் ஏரியே இல்லாத பல இடங்கள் இருக்கின்றன. இந்த இடங்களில் இருக்கும் குன்றுகளை சீர்செய்து கொடுத்தால் நலமாக இருக்கும். புங்கனூர் என்ற இடத்தில் இரண்டு குன்றுகள் இருக்கின்றன. இவற்றை சீர் செய்து கரை அமைத்துக் கொடுத்தால் நல்ல ஏரி யாக அமையும் என்பதை தெரிவித்துக்கொள்கிறேன். அதோடு இம்மாதிரி செய்வதால் அரசாங்கத்திற்கும் செலவு குறையும். இதன் மூலமாக அந்தப் பகுதியும் வளமுறுவதற்கு வசதியாக இருக்கும் என்பதையும் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

கனம் அமைச்சர் அவர்கள் காட்டுவளத்தைப்பற்றி அவர்கள் உரையில் குறிப்பிட்டிருக்கிறார்கள். என்னுடைய தொகுதியில் சில ஆண்டுகளுக்கு முன்னால் 3,000 ஏக்கர்கள் கொண்ட காடு இருந்தது. அது இப்போது அழிக்கப்பட்டு தரிசாக இருக்கிறது. இந்த இடத்தில் வாட்டில், கற்பூரம் போன்ற மரங்களை வளர்த்தால் அரசாங்கத்திற்கு வருவாய் கிடைக்கும். அப்படி செய்ய முடியா விட்டால் அங்குள்ள நிலமற்ற விவசாயிகளுக்கு அந்த தரிசு நிலங்களை பட்டா செய்து கொடுத்தால், அதன் மூலம் கிடைக்கும் வரியிலிருந்து அரசாங்கத்திற்கு ஓரளவு வருவாய் கிடைக்கும்.

வருகின்ற ஐந்தாண்டுத் திட்டத்தில் திட்டமிட்டிருக்கிற எட்டு சர்க்கரை ஆலைகளில் மூன்று போக, பாக்கியுள்ள ஐந்தில் ஒன்றை எங்கள் தொகுதியில் நிறுவவேண்டும் என்று பணிவன்போடு கேட்டுக்கொள்கிறேன்.

வட ஆற்காடு மாவட்டத்தில் மருத்துவக் கல்லூரி ஏற்படுத்த வேண்டும் என்று பல தடவை கேட்டிருந்தும் அதைப்பற்றி அமைச்சர் அவர்களுடைய உரையில் ஒன்றும் காணப்படவில்லை என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக்கொள்கிறேன்.

தொழில் பேட்டைகளை ஏற்படுத்துவதைக்குறித்து ஆராய்ந்து பார்க்கும் போது, தொழில் பேட்டைகள் அமைந்துள்ள இடங்கள் எல்லாம் நல்ல வசதி பெற்று காணப்படுகிறது. எங்கள் தொகுதியை எடுத்துக்கொண்டால் சுமார் 12 மைல் சுற்றளவுக்கு

[திரு. க. ர. முனிரத்தினம்] [2nd July 1962

எந்த விதமான தொழிற்சாலையும் இல்லை. ஆகவே இந்த இடங்களில் ஏதாவது தொழில்கள் ஏற்படுத்தவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

அதோடு, எங்கள் தொகுதியில் கலவை, திமிரி போன்ற இடங்களில் எந்தவிதமான மருத்துவ மனையும் கிடையாது. எந்த அவசர நிலை ஏற்பட்டாலும் 12 மைல் தொலைவிற்கு சென்றுதான் பார்க்கவேண்டியிருக்கிறது. பின் தங்கிய மக்களுக்காக பல காரியங்களைச் செய்யப்போவதாக சொல்லும் இந்தச் சர்க்கார் இந்த இடங்களிலுள்ள பின் தங்கிய மக்கள் வீடு கட்டிக்கொள்ள, மக்களுக்கு புறம்போக்கு நிலங்களை கொடுப்பதற்கு தயங்குகிறது. இம்மாதிரி பல குறைகள் இருந்தும், இப்போது நிதி நிலைமையில் துண்டு விழும் தொகைக்கு 7 கோடிக்கு வரி போட்டிருக்கும் போது, இந்த நாட்டில் பரிதவிக்கின்ற மக்களின் வருங்கால நிலை எப்படியிருக்கும் என்பதை பார்க்க மிகவும் பயமாக இருக்கிறது. இப்போது பஸ்களுக்கு வரி போட்டிருப்பதாக சொல்லியிருக்கிறார்கள். இம்மாதிரி வரி போடுகிற காரணத்தினால்தான், சற்று முன் பேசிய நண்பர் மாதா கவுடர் அவர்கள் கூறியது போல் நடேச முதலியார் அவர்கள் இந்த மன்றத்திற்கு வரவில்லை. பஸ்களுக்கு போடப்பட்டிருக்கும் வரியை நான் முழு மனதுடன் வரவேற்கின்றேன். அதே நேரத்தில் இந்த வரிப் பளு பொது மக்கள் தலையில்தான் விழப்போகிறது என்று தெரிகிறது. ஆகவே இவ்விதம் எந்த விதமான சுமையும் ஏற்படாத வண்ணம், இப்போது எப்படி எப்படி கட்டணம் அமைந்திருக்கிறதோ அது போலவே இருக்கவேண்டும் என்று அரசினர் உடனடியாக ஓர் உத்தரவிடவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். லாரிகளுக்கு போடப்பட்டிருக்கும் வரியைப் பொறுத்தவரையில் 150 முதல் 180 அந்தர் வரையுள்ள வண்டிகளுக்கு இப்போது இருக்கும் 427 ரூபாய் என்பது 615 ரூபாயாக உயரும் என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. குறைந்த அளவில் லாரிகளை வைத்துக்கொண்டு ஓட்டிக் கொண்டிருப்பவர்கள் பலவிதமான இன்னல்களுக்கும், தொல்லைகளுக்கும், ஆளாகிக்கொண்டிருக்கிறார்கள். பார்சல் சர்வீஸ், பெட்ரோல்—கிரஸன் ஆயில் போன்றவைகளை ஏற்றிச்செல்லும் சர்வீஸ் இவைகளுக்கு வேண்டும் என்றால், இந்த வரி கட்டிவரும் என்று சொல்ல முடியும். ஒன்றிரண்டு லாரிகளை வைத்துக்கொண்டு ஏதோ அதிலிருந்து கிடைப்பதை மட்டும் கொண்டு வாழ்க்கையை நடத்திக் கொண்டிருப்பவர்களுக்கு இந்த வரி அதிகமாக இருக்கும். ஏற்கனவே அவர்கள் கடன்களில் அவஸ்தைப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். ஆகவே அவர்களுக்கு ஓரளவுக்கு நிவாரணம் கொடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். மின்சாரத்திற்கு போடப்பட்டிருக்கும் வரியைப் பொறுத்த வரையில் லோடென்ஷன் மின்சாரத்திற்கும், ஐ-டென்ஷன் மின்சாரத்திற்கும் வரி போடப்பட்டிருக்கிறது. லோ-டென்ஷன் உபயோகிப்பவர்களை இது பாதிக்கும், ஆகவே ஹை-டென்ஷன் மின்சாரத்தின் பேரிலேயே இப்போது 20 சதவீதம் என்றிருப்பதை 25 அல்லது 30 சதவீதம் என்று உயர்த்திவிட்டால் லோ-டென்ஷன் மின்சாரத்திற்கு போடப்பட்டிருக்கும் வரியிலிருந்து கிடைக்கும் தொகையை சரிகட்டலாம். நிலத்திற்கு போடப்பட்டிருக்கும்

2nd July 1962] [திரு. க. ர. முனிரத்தினம்]

வரியை எடுத்துக்கொண்டால், முப்பது வருட காலமாக வரிகளை சீர்திருத்தவில்லை என்று கூறி, இப்போது திடீரென்று வரி போடப் பட்டிருக்கிறது. இது சரியாக இருக்காது என்பதை தெரிவித் துக்கொள்கிறேன். அதே நேரத்தில் எங்கள் கட்சி துணைத் தலைவர் அவர்கள் கூறியது போன்று இதற்கென்று ஒரு குழு நியமித்து இதைப்பற்றி நன்கு ஆராய்ந்து பார்த்து ஒரு முடிவுக்கு வந்தால் நலமாக இருக்கும் என்பதை தெரிவித்துக்கொள்கிறேன். அதோடு, இப்போது குதிரைப்பந்தயத்திற்கு போடப்பட்டிருக் கும் வரியை சற்று அதிகப்படுத்தினால், நிலத்திற்கு போடப்பட் டிருக்கும் வரியின் மூலமாக கிடைக்கவேண்டும் என்று எதிர்பார்க் கிற தொகையை சரிகட்டிவிடலாம் என்று கருதுகிறேன். விவ சாயிகள் ஏற்கனவே உற்பத்தியைப் பெருக்குவதற்காக முயன்றுக் கொண்டிருக்கிறார்கள். அதற்கு வேண்டிய பொருள்களை எல்லாம் கள்ள மார்கெட்டில் வாங்கிக்கொண்டு கஷ்டப்படுகிறார்கள். விவசாயத்தையே விட்டுவிடலாமா என்று நினைத்துக்கொண்டிருக் கிறார்கள். ஆகவே விவசாயிகள் மீது வரி எதையும் போடாமல் இருக்குமாறு கேட்டுக்கொள்ளுகிறேன். அதோடு இப்போது மத்திய அரசுக்கு போய்க்கொண்டிருக்கும் சில வரிகளை நாம் பெறலாம். உதாரணமாக எங்கள் தாலுகாவிலுள்ள வாலாஜா தாலுகாவில் இருக்கின்ற பீடித்தொழிலை எடுத்துக்கொண்டால், இதற்காக உபயோகிக்கப்படும் புகையிலைக்காக மத்திய அரசுக்கு ஒரே நபர் மட்டும் வரியாக ஒருமாதத்திற்கு 1 லட்சம் ரூபாய் வரை கொடுக்கிறார். வாலாஜா தாலுகாவை எடுத்துக்கொண் டால், அதற்குள்ள ரெவின்யூ வருவாய் 5½ லட்சம், அதற்கு ஏற்படும் செலவு 2½ லட்சம், நாம் பெறுவது 3 லட்சம். ஆனால் மாதத்திற்கு வெறும் 500 ரூபாய் செலவு செய்யும் மத்திய அரசு ஒரு நபரிடத்திலிருந்து மட்டும் 1 லட்சம் ரூபாய் மாதாமாதம் பெறுகிறது. ஆண்டு ஒன்றுக்கு 12 லட்சம் ரூபாய் கிடைக்கிறது. இதற்கு செலவு செய்வது ஆண்டு ஒன்றுக்கு 6,000 ரூபாய். ஆகவே இம்மாதிரி இனங்களில் கிடைக்கின்றவரியில் ஒரு பாகத்தை நாம் எடுத்துக்கொண்டால் இனிமேலாவது புதிய புதிய வரிகள் போடாமல், மக்களை வாட்டாமல் பார்த்துக்கொள்ள ஏதுவாக இருக்கும் என்று எடுத்துச்சொல்ல விரும்புகிறேன்.

ஆகவே இப்படிப்பட்ட பலகுறைகள் இந்த நிதி நிலை அறிக்கை யில் காணப்படுவதால், இதன் மூலம் பொதுமக்களுக்கு எந்த விதமான நன்மையும் இல்லை என்பதோடு, இது ஏமாற்றம் தருவதாகவும் இருக்கிறது என்று கூறி முடித்துக் கொள்கிறேன். 10 00 p.m.

* **திரு. சி. கோதண்டராம பாகவதர்:** கனம் சபாநாயகர் அவர்களே, கனம் நிதி மந்திரி அவர்கள் சமர்ப்பித்துள்ள பட் ஜட்டை ஆதரித்து சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். ஐந்தாண்டுத் திட்டத்தின் காரணமாக கல்வித் துறை, மின்சாரத் துறை, விவசாயத் துறை, மருத்துவத் துறை செலவுகள் அதிகரித் துள்ளன. பல்கலைக்கழகங்களுக்காக ஐந்தாண்டுத் திட்டத்தில் 56 லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. ஆனால் இவ் வருடத்தில் அரை லட்சம் ரூபாய்தான் செலவு செய்ய

[திரு. சி. கோதண்டராம பாகவதர்] [2nd July 1962

உத்தேசிக்கப்பட்டிருக்கிறது. ஆகவே ஆரணி தாலுகாவில் ஆரணி வட்டாரத்தில் ஒரு கல்லூரி ஏற்படுத்த வேண்டுமென்று நிதி மந்திரி அவர்களை மிகவும் தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறேன். மோட்டார் வரி, லாரி வரி, பஸ் வரி அதிகமாக உயர்த்தப்பட்டிருக்கிறது. சமீபத்தில் மோட்டார் வரி 17 ரூபாயிலிருந்து 30 ரூபாயாக உயர்த்தப்பட்டிருக்கிறது. சர்சார்ஜும் போடப்பட்டது. இப்போது மூன்று பிரிவாகப் பிரிக்கப்பட்டு 132 மைல்களுக்குள்ளாகப் போகும் பஸ்ஸுக்கு 5 ரூபாய் என்றும், 132 மைல்களுக்கு மேல் 169 மைல்களுக்குள்ளாக உள்ள பஸ்களுக்கு 10 ரூபாய் என்றும், 169 மைல்களுக்கு மேற்கொண்டு போகும் பஸ்களுக்கு 15 ரூபாய் என்றும் உயர்த்தப்பட்டிருக்கிறது. அநேகமாக தமிழ்நாட்டில் 169 மைல்களுக்கு மேற்கொண்டுதான் பஸ்கள் ஓடுகின்றன. ஆகவே மோட்டார் சொந்தக்காரர்கள், பஸ் சொந்தக்காரர்கள் ஆகியவர்களுக்கு இந்த வரி அதிகமாக உயர்த்தப்பட்டிருக்கிறது என்று நினைக்கிறேன். ஆகவே வெகுவாக சுமார் 75 சத விகிதம் இதைக் குறைக்க வேண்டுமென்று அரசாங்கத்தைக் கேட்டுக் கொள்கிறேன்.

வீடுகளுக்கு 10 ரூபாய்க்கு குறைவாக மின்சாரக் கட்டணம் செலுத்துவோர்களுக்கு வரிச்சலுகை கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். கைத்தறி நெசவாளர்கள், முனிசிபல் நகரங்களில் வசிப்பவர்களுக்கு வரி அதிகரிக்கப்பட்டிருக்கிறது. முனிசிபல் நகரங்களிலே வசிப்பவர்களுக்கு வீட்டு வரி சலுகை அளிப்பதற்கு, முனிசிபாலிடிகளுக்கு இந்தத் தீர்வையை ரத்து செய்து, அரசாங்கத்திலே இதற்கான நஷ்ட ஈட்டை முனிசிபாலிட்டிகளுக்கு கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டு, எனக்கு வாய்ப்பு தந்தமைக்கு நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

*திரு. ர. ஜீவரத்னம்: கனம் சபாநாயகர் அவர்களே, ஆரம்பத்திலே இந்த சட்டசபையிலே என்னையும் ஒரு மனிதனுக்கி, இங்கு பேசும் வாய்ப்பு அளித்ததற்கு கனம் முதல் மந்திரி அவர்களுக்கும், கனம் நிதி மந்திரி அவர்களுக்கும் எனது வணக்கத்தை தெரிவித்துக்கொண்டு, இந்த 1962-63-ம் வருஷத்திய பட்ஜட்டை ஆதரித்து சில வார்த்தைகள் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

நம்முடைய தேசம் சுதந்திரம் அடைந்த பிற்பாடு, இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்கள் பூர்த்தி செய்யப்பட்டு, மூன்றுவது ஐந்தாண்டுத் திட்ட காலத்திலே ஒரு வருஷம் சென்றிருக்கிறோம். சுதந்திரம் பெற்றபோது மக்களிடம் சொன்னோம், 'தேசம் பல வகைகளிலே அபிவிருத்தி அடைய வேண்டு,' மென்று. தொழிற்சாலைகள் வேண்டும், ரோடுகள் வேண்டும், நீர்ப்பாசன வசதிகள் வேண்டும், இன்னும் நல்ல வாழ்க்கை வசதிகள் வேண்டும், இதற்கு சுதந்திரம் நமது குறிக்கோள் என்று மக்களிடத்திலே சொல்லி, அதற்கான வாய்ப்புகளை நாம் பெறுவோம் என்று சொன்னோம். அந்த அளவிலேதான், கடந்த இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களை நாம் நல்லமுறையிலே பூர்த்தி செய்து, இப்போது மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டத்திலேயும் பல நல்ல காரியங்களை நாம் செய்து கொண்டு வருகிறோம். மூன்றுவது ஐந்தாண்டுத் திட்ட

காலத்திலே 290 கோடி என்று சொல்லி, அதற்கான திட்டம் தீட்டப்பட்டு நல்ல காரியங்கள் செய்து வரும்போது, நிதி பற்றுக் குறை ஏற்படுவது சகஜமானதே. பண்டைக்காலத்து சரித்திரத்தை எடுத்துக்கொண்டு பார்த்தாலும், பண்டைக்கால அரசர்கள் மக்களிடத்திலே இருந்து வரி வசூல் செய்திருக்கிறார்கள் என்பதை நாம் சரித்திரத்தில் காண்கிறோம். சமயத்திற்கு தகுந்தாற் போல அந்தக் காலத்திலே உள்ள அரசர்கள்கூட வரி வசூல் செய் திருக்கிறார்கள். அந்த அளவிலே மக்களுக்கு ஏராளமான வசதிகளை செய்து கொடுப்பதற்கு, அவர்களுடைய தேவைகளைப் பூர்த்தி செய்து கொடுப்பதற்கு வரி போடுவது என்பது நியாய மான முறையேயாகும். அந்த அளவிலே தைரியமாக வரி போடு வதற்கு முன்வந்த கனம் நிதி மந்திரி அவர்களை நான் மனப் பூர்வமாக பாராட்டிக்கொண்டு, இந்த சமயத்திலே நான் ஒரு யோசனையை தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

பஸ்களுக்கும், லாரிகளுக்கும் வரி போட்டு இருக்கிறார்கள். நம் முடைய ராஜ்யத்திலே ஏராளமான கார்கள் இப்போது இருக் கின்றன. கார்கள் எல்லாம் சுகபோகம் என்று சொல்லப்படு கிறது. ஆகவே, சிறிய கார்களுக்கு எல்லாம் 5 ரூபாய் என்றும், பெரிய கார்களுக்கு எல்லாம் 10 ரூபாய் என்றும் வரி போடவேண்டு மென்று நான் யோசனை கூறிக்கொள்ள விரும்புகிறேன். மற்ற படி நான் இந்த பட்ஜட்டை நன்கு வரவேற்கிறேன். அப்படி வரவேற்கக்கூடிய அளவிலே இருக்கும்போது, என்னுடைய ஜில்லாவைப் பற்றி இரண்டொரு வார்த்தைகள் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

சுதந்திரத்தின் பலனை அனுபவிக்க முடியாத ஒரு ஜில்லா இருக் கிறது என்றால், அது வட ஆற்காடு ஜில்லாதான். அங்கு எவ்வித தொழில் முன்னேற்றமும் கிடையாது. அந்த நிலைமையிலேதான் நாங்கள் இருக்கிறோம். ஆகவே கனம் முதல் மந்திரி அவர்களும், கனம் நிதி மந்திரி அவர்களும் மனம் வைத்து எங்கள் ஜில்லாவிலே ஒரு பெரிய என்ஜினியரிங் கல்லூரி ஒன்றும், வைத்தியக் கல்லூரி ஒன்றும் ஆரம்பிக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். அது அன்றியில், கனம் நிதி மந்திரி அவர்கள் பட்ஜெட் உரையைப் படிக்கும்போது நம்முடைய ராஜ்யத்திலே இரும்பு உருக்கு ஆலை ஒன்று ஆரம்பிக்கப் போவதாகவும், அதற்காக லைசன்ஸ் கோரி இருப்பதாகவும் வாசித்தார்கள். அப்படி ஆரம்பிக்கப் போகும் இரும்பு உருக்கு ஆலையை வட ஆற்காடு ஜில்லாவிலே வேலூர் நகரப் பகுதிக்கு அருகாமையில் ஆரம்பிக்க வேண்டுமென்று கனம் நிதி மந்திரி அவர்களைக் கேட்டுக்கொள்கிறேன். வட ஆற் காடு ஜில்லா முழுக்க, முழுக்க தொழில் வளர்ச்சியில் மிகவும் பின் தங்கிய பிரதேசம். அங்கு எந்தவிதமான முன்னேற்றமும் இல்லாததினால், எதிர்க் கட்சியினர்கூட மக்களிடத்திலே பசப்பான வார்த்தைகளைச் சொல்லிக்கொண்டு வருகிறார்கள். அதைத் தவிர்க்க வேண்டுமென்றால், அங்கு நிரம்ப தொழில்கள் ஏற்படுத்த வேண்டும். குறிப்பாக, வட ஆற்காடு ஜில்லாவில் வேலூர் நகரப் பகுதியில் எந்தவிதமான தொழிலும் கிடையாது. அங்கு ஏராள மான ஏழைமக்கள் வாழ்கிறார்கள். அங்கு பீடித் தொழிலைத்

[திரு. ர. ஜீவரத்னம்] [2nd July 1962

தவிர, வேறு எதுவும் கிடையாது. சுமார் 5,000 குடும்பங்கள் இந்த பீடித் தொழிலை நம்பிக்கொண்டு வாழ்ந்து வருகிறார்கள். ஒருநாள் மழை பெய்தால் அவர்கள் குடும்பங்கள் பட்டினி என்கிற நிலைமை. அந்த நிலைமை மாற வேண்டுமானால், மற்ற ஜில்லாக்களுக்கெல்லாம் கொஞ்ச காலம் தடை விதித்து, பின் தங்கிய பிரதேசமாகிய வட ஆற்காடு ஜில்லாவில் நிறைய அபிவிருத்தி திட்டங்களை கொண்டு வரவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

அதேபோன்று, வட ஆற்காடு ஜில்லாவில் வேலூரில் ஒரு கோட்டை இருக்கிறது. அந்த சரித்திர பிரசித்தி பெற்ற கோட்டையில் சர்க்கார் அலுவலகங்கள் எல்லாம் இப்போது இருக்கின்றன. மத்திய சர்க்காரின் அனுமதி பெற்று, இந்தக் கோட்டையை பராமரிக்கும் பொறுப்பை நமது ராஜ்ய சர்க்கார் ஏற்றுக் கொண்டு, இதை அழகாக புதுப்பித்து சீர்திருத்த வேண்டுமென்று நான் கேட்டுக் கொள்கிறேன்.

பொதுவாக, சர்க்கார் இப்போது விதித்துள்ள வரிகளை எல்லாம் நமது நிதி மந்திரி அவர்கள் நன்கு ஆலோசித்துத் தான் செய்திருக்கிறார்கள். இந்த அளவிலே இந்த பட்ஜட்டை வரவேற்று, வட ஆற்காடு ஜில்லாவிற்கு வேண்டிய வசதிகளைச் செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொண்டு, எனக்கு இங்கு பேச வாய்ப்பு அளித்தமைக்கு இந்தச் சந்தர்ப்பத்தில் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

* **திரு. வி. அருணாசலம்:** கனம் சபாநாயகர் அவர்களே, இந்த 1962-63-ம் ஆண்டு நிதி நிலை அறிக்கையின்மீது பேசுகின்ற வாய்ப்பை ஏற்படுத்தித் தந்தமைக்காக எனது வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன். இந்த ஆண்டு நிதி நிலை அறிக்கையைப் பார்க்கும்போது, திட்டங்கள் நிறைவேற்றுவதற்காக செலவுத் தொகைகளை அதிகரித்து, அப்படி அதிகரிக்கும்படியானத் தொகைக்கு அமைச்சர் அவர்கள் வரி போட்டிருக்கிறார்கள். பொதுமக்களுக்கு நன்மை செய்ய வேண்டுமென்று கனம் அமைச்சர் அவர்கள் எண்ணி, இந்தத் திட்டங்கள் பேரால் பல திட்டங்கள் போட்டிருக்கிறார்கள்; அதனாலே நாட்டு மக்களுடைய வாழ்க்கைத் தரம் உயரும் என்று கூறுகின்றார்கள். திட்டங்களின் பேரால், போடப்பட்டிருக்கின்ற புள்ளி விவரங்களைப் பார்க்கின்றபோது, அவைகள் ஏட்டளவிலே தான் இருக்கிறதே தவிர, நாட்டிலே உள்ள மக்களின் வாழ்க்கைத்தரம் உயருவதற்கான வழிவகை செய்யப்பட்டிருக்கிறதா என்று நான் அமைச்சர் அவர்களை கேட்டுக்கொள்கிறேன். இன்றைய தினம் ஆளுங் கட்சியிலே இருக்கின்ற ஒரு கனம் அங்கத்தினர் அவர்கள் சொன்னார்கள் கலைஞர் திரு. கருணாநிதியின் கையில் மண் வெட்டி எடுத்துக்கொண்டால், உணவு உற்பத்தி பெருகும் என்று சொன்னார்கள். அவர்கள் எடுத்துக்காட்டியதை பார்க்கும்போது, இன்னமும் ஆளுங் கட்சியிலே இருக்கின்ற அங்கத்தினர்களுக்கு எல்லாம் உழவு என்றால் என்ன என்பது தெரியுமா என்று கேட்க நான் ஆசைப்படுகிறேன். அவர்கள் எங்களைப் பார்த்துக்கூறுவது,

2nd July 1962] [திரு. வி. அருணாசலம்]

அவர்களுக்கே நிச்சயமாக உழவுத் தொழில் புரியுமா என்பது சந்தேகமாக இருக்கிறது. இன்றைய தினம் என்னுடைய தொகுதியில், பட்டுக்கோட்டையில் பல காட்டாறுகளில் அணைக்கட்டுகள் கட்டி பல ஆயிரக்கணக்கான ஏக்கர்களுக்கு பாசன வசதி செய்து கொடுக்க முடியும். அப்படி பல திட்டங்கள் இருக்கிறது. இப்படி இருக்கும் போது, அந்தத் திட்டங்களை எல்லாம் நிறைவேற்றுவதற்கு சர்க்கார் ஆவன செய்யவேண்டும். பூவாணம் கிராமத்தில், ஆக்கினி ஆற்றில் அணை கட்டினால் 5,000 ஏக்கர்களுக்கு மேல் நீர்ப்பாசன வசதி செய்து கொடுக்க முடியும். அந்தத் திட்டத்தை அமுல் நடத்தவேண்டுமென்று நான் கேட்டுக் கொள்கிறேன். கடலோரப் பகுதிகளிலே இருக்கிற மீனவர்களுக்கு வாழ்க்கை வசதிகள் செய்துகொடுப்பதற்கு எந்தவிதமான உருப்படியான திட்டமும் கிடையாது. மீனவர்களுக்கு வேண்டிய நவீன இயந்திரங்களைக்கொடுத்து, அவர்கள் நல்ல முறையில் மீன்வளத்தை உற்பத்தி செய்வதற்கும், அவர்கள் வாழ்க்கை மேலோங்கி வளப்படுத்துவதற்கு ஏற்பாடு செய்து கொடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்து, விவசாயத் துறையிலே நிலைமையை எடுத்துக்கொண்டால் விவசாயிகள் படுகிற கஷ்டங்கள் அநேகமாக எல்லோருக்கும் தெரியும். விவசாயிகள் உணவு உற்பத்தியை அதிகப்படுத்தி, அவர்கள் அந்த நிலையிலே கஷ்டப்படாமல், மேலும் அவர்கள் வாழ்க்கை முறை மேலோங்குமாறு, அரசாங்கம் அவர்களை ஆதரித்து, அவர்களுக்கு வேண்டிய நல்ல வாழ்க்கை முறைகளை வகுத்துக் கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டு, இந்த நிதி நிலை அறிக்கையின்மீது என்னுடைய கருத்துக்களை தெரிவிப்பதை இத்துடன் நிறுத்திக்கொண்டு, முடித்துக்கொள்ளுகிறேன்.

* திரு. வை. சங்கரன்: கனம் சபாநாயகர் அவர்களே, இந்த வரவு-செலவுத் திட்ட அறிக்கையிலே நாம் இதுவரையிலும் அடைந்திருக்கும் அபிவிருத்திகளைப்பற்றியும், இனி நாம் செய்ய இருக்கின்ற பல்வேறு திட்டங்களைப்பற்றியும், விவசாயத் துறையில் எந்த வகையிலே வளத்தைத் தேடுவது, கால்நடை வளத்தை எவ்வாறு பெருக்குவது, தொழில் வளத்தை எவ்வாறு வளர்ப்பது, சிறு தொழில்களை எவ்வாறு பெருக்குவது என்றெல்லாம் பல விவரங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இதுவரையில் உள்ள நிதிநிலை அறிக்கைகளைவிட, இந்த நிதிநிலை அறிக்கையிலே விஸ்தாரமாக எல்லா விவரங்களும் பூரணமாகக் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அதற்காக நான் கனம் நிதி அமைச்சர் அவர்களைப் பாராட்டுகிறேன்.

குறிப்பாக, இப்பொழுது உள்ள நிலைமையிலே, மின்சார வெட்டு இருக்கிற நிலைமையிலே நாம் ஒன்று பற்றி தீவிரமாக சிந்திக்க வேண்டியவர்களாக இருக்கிறோம். 'ஹைட்ரோ எலக்டிரிக் ஸ்கீம்ஸ்' மட்டும் இருந்தால் போதாது. அதிகமாக நாம் திட்டங்களை விஸ்தரித்துக்கொண்டு போகிறோம். இதுபோன்ற நெருக்கடியான நிலைமைகளில் கஷ்டங்கள் ஏற்படுவதனால், அணு சக்தி

[திரு. வை. சங்கரன்] [2nd July 1962

மின்சார நிலையத்தை நம்முடைய மாநிலத்தில் கொண்டு வருவதற்கு நாம் தீவிர முயற்சி எடுத்துக்கொள்ளவேண்டும். அதற்கென்று மத்திய அரசாங்கத்தின் ஒரு கமிட்டி தென்ராஜ்யங்களை சுற்றிப் பார்த்து சென்றதாக நாம் அறிகிறோம். ஆகவே, இது விஷயமாக அமைச்சர் அவர்கள் தீவிரமாக வற்புறுத்தி, அணு சக்தி மின்சார நிலையம் நம்முடைய ராஜ்யத்தில் அமைவதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்யவேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன். அது தவிர, பல நகரங்களில், குறிப்பாக நூற்பு ஆலைகள் இருக்கக்கூடிய நகரங்களில், நம்முடைய மாநிலத்தில் கோவை, மதுரை, தூத்துக்குடி போன்ற நகரங்களில் தெர்மல் ஸ்டேஷன்கள்' ஏற்படுத்துவதற்கு முயற்சி எடுக்க வேண்டும். இதுமாதிரி நெருக்கடியான சமயங்களில் அம்மாதிரி 'தெர்மல் ஸ்டேஷன்கள் இருந்தால், நமக்கு மிகவும் உதவிகரமாக இருக்கும். தொழில்கள் நிறைந்துள்ள நகரங்களில் 'தெர்மல் ஸ்டேஷன்கள்' ஏற்படுத்தி மின்சாரம் உற்பத்தி செய்யவேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

புதியதாக பல பள்ளிகள் திறக்கிறோம். பல தொழிற் பள்ளிகள் திறக்கிறோம். பல தொழிற்சாலைகள், தொழில் பள்ளிகள் புதியதாக ஆரம்பிக்கிறோம். பொதுமக்கள் அவற்றின் பெயர்களை அறியக்கூட முடியவில்லை. அப்படிப்பட்ட நிலைமையில் பொது மக்கள் இவைகள் பற்றி நன்றாக புரிந்துகொள்ளும்படி சர்க்கார் ஒரு சில வெளியீடுகள் ஒவ்வொரு வருட ஆரம்பத்திலும் வெளியிட வேண்டும். என்னென்ன 'காரியேர்ஸ்' இருக்கின்றன, என்னென்ன படிப்பு, எந்தெந்த பயிற்சி வேண்டும், என்ன தகுதி யிருந்தால் என்ன வேலைக்குப் போகலாம், என்னென்ன பள்ளிகள் புதியதாக திறக்கப்படுகின்றன என்ற விவரங்களையெல்லாம் கொண்ட வெளியீடு ஒன்று ஆண்டு ஆரம்பிப்பதற்கு முன்னாலேயே சர்க்கார் வெளியிடவேண்டும். அம்மாதிரி வெளியீடு பாமர மக்களுக்கு ரொம்பவும் உபயோகமாக இருக்கும். இல்லாவிட்டால், புதிது புதிதாக ஆரம்பிக்கப்படும் பலவிதமான தொழில் பள்ளிகளில் என்னென்ன வாய்ப்புகள் இருக்கின்றன என்று பாமர மக்கள் தெரிந்துகொள்வதற்கு வசதி இல்லாமல் போய்விடும். ஆகவே, இம்மாதிரி ஒரு வெளியீட்டை சர்க்கார் வருடாவருடம் வெளியிட முன்வரவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அது தவிர, சிறு தொழில்கள், குடிசை தொழில்களுக்கு என்னென்ன உதவி கிடைக்கும், எப்படி கிடைக்கும் என்ற விவரங்கள் கொண்ட ஒரு வெளியீட்டை வருடந்தோறும் வெளியிடவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். அதோடுகூட, தொழில் நுட்ப நூலகங்கள் திறக்கப்படவேண்டும். பெண்கள், குழந்தைகளுக்காக நூலகங்கள் மாவட்ட ரீதியில் திறக்கப்பட்டிருக்கின்றன. அதே மாதிரி மாவட்ட ரீதியில் தொழில் நுட்ப நூலகங்கள் ஏற்படுத்தப் பட வேண்டும். அவைகளில் தொழில் சம்பந்தமான அதிகமான நூல்கள் வைக்கப்பட்டு தனியாக தொழில் நுட்ப நூலகங்கள் திறக்கப்படவேண்டும். ஒவ்வொரு ஜில்லாவிலும், மாவட்ட

2nd July 1962] [திரு. வை. சங்கரன்]

ரீதியிலே ஐந்தாண்டுத் திட்டத்தின்கீழ் நடப்பு ஆண்டில் என்னென்ன அபிவிருத்தித் திட்டங்கள் நிறைவேற்றப்பட்டிருக்கின்றன, வரும் ஆண்டில் என்னென்ன திட்டங்கள் நிறைவேற்றப்பட இருக்கின்றன என்பதைப்பற்றி, அந்தந்த மாவட்ட அதிகாரி கலெக்டர் ஒவ்வொரு ஆண்டிற்கு ஒரு வெளியீடு வெளியிடவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். அது தவிர, ஜில்லா கெஜட்களுக்கு முக்கியத்துவம் கொடுத்து, ஜில்லா வரலாறு பற்றியும், அங்கே கிடைக்கும் முக்கிய பொருள்கள் சம்பந்தமாகவும் அதிலே விவரங்கள் கொடுத்து, ஜில்லா கெஜட்டுகள் வெளியிடவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக மதுரை நகரத்தின் பிரதிநிதி என்ற முறையில், உணவுப் பொருள்கள் சம்பந்தமாக ஓரிரண்டு வார்த்தைகள் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். உணவுப் பொருள்களின் விலை அதிகரித்துக்கொண்டு போகும்பொழுது, ஒன்று கண்டிப்பாக சர்க்கார் செய்தால், அது மக்களுக்கு பெரிதும் ஆறுதலாக இருக்கும் என்பதைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். அதற்கென்று ஒரு குழு ஏற்படுத்தி, சர்க்கார் பிரதிநிதி இரண்டு மூன்று பேர்கள் வைத்துக்கொண்டு, 'கன்ஸ்யூமர்ஸ்' உபயோகப்படுத்துகிறவர்கள். பிரதிநிதிகள் இரண்டு, மூன்று பேர்கள் வைத்துக்கொண்டு, அது தவிர அத்யாவசியமான உணவுப் பொருள்களில் வியாபாரம் செய்கிற வியாபாரிகள் இரண்டு, மூன்று பேர்களையும் வைத்துக் கொண்டு, ஒரு குழு ஏற்படுத்தி, 'ஸ்டாண்டிங் கமிட்டி' மாதிரி வைத்து, மாதத்திற்கு ஒரு முறை கூடுவது கஷ்டமாக இருந்தால், இரண்டு மாதங்களுக்கு ஒரு முறையாவது கூடி, அப்போதைக்கப் போது என்ன காரணங்களினால் அத்தியாவசியமான உணவுப் பொருள்களின் விலை அதிகரித்திருக்கிறது என்பதை விளக்கி 'புல்லெடின்கள்' வெளியிட்டால், அந்த அளவுக்கு மக்களுக்கு ஓர் அளவு ஆறுதலாக இருக்கும். உதாரணமாக, உளுந்தை எடுத்துக் கொண்டால், 'ஸீஸனல் ஃபெயிலூரினால்' விலை உயர்ந்திருக்கிறது. ஆனால் ஜனங்கள் இதை புரிந்துகொள்ள முடியவில்லை. விற்கும் வியாபாரியை திட்டுகிறார்கள், நொந்துகொள்ளுகிறார்கள். ஆகவே அத்தியாவசியமான உணவுப் பொருள்களின் விலை ஏன் உயர்ந்திருக்கிறது என்பதை அவ்வப்போது பரிசீலனை செய்து, அதற்கான காரணத்தை பூரணமாக விளக்கியும், அதை நீக்குவதற்கும் வழிகள் ஆராய்ந்தும் இரண்டு மாதங்களுக்கு ஒரு முறையாவது ஒரு 'புல்லெடின்' வெளியிட்டால் ஓரளவுக்கு ஜனங்களுக்கு அது ஆறுதல் அளிக்கும், சமாதானமாக இருக்கும் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

அடுத்தபடியாக, வீடுகட்டும் திட்டம் சம்பந்தமாக இந்த அறிக்கையில் நடுத்தர வருமானம் உள்ளவர்களுக்கும், குறைந்த வருமானம் உள்ளவர்களுக்கும் வீடுகள் கட்டித் தரப்படும் என்று கூறப்பட்டிருக்கிறது. குறைந்த வருமானம் உள்ளவர்களுக்குத் தான் முதலில் வீடுகள் கட்டித் தரவேண்டும். அவர்களுடைய

[திரு. வை. சங்கரன்] [2nd July 1962

தேவையைத் தான் முதலில் பூர்த்தி செய்யவேண்டும். ஏனெனில் அவர்கள் தான் சொந்த வீட்டு வசதி இல்லாமல் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். அதிக வருமானம் உள்ளவர்கள் ஏற்கனவே வீடு வைத்திருப்பவர்கள். அல்லது, வேறு வித ஏற்பாடு செய்து அவர்கள் வீடு கட்டிக்கொள்ள முடியும். ஆகவே, குறைந்த வருமானம் உள்ளவர்களுக்குத்தான் வீடு கட்டிக் கொடுப்பதற்குச் சர்க்கார் முன்வரவேண்டும். அதே போன்று அவர்களுக்கு மனைக் கட்டுகள் மட்டும் வழங்கும் திட்டங்களையும் மேற்கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

விவசாயிகளுக்கு கடன் கொடுப்பதற்கும், ஏழைகளுக்கு மேல் படிப்பிற்கு கடன் கொடுப்பதற்கும் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. அதிக கஷ்டம் இல்லாமல் எளிய முறையில் அவர்கள் கடன் பெறுவதற்கு ஏற்பாடு செய்யவேண்டும். இல்லாவிட்டால், அதிக செல்வாக்குள்ளவர்கள் மட்டும் இந்தச் சலுகையை உபயோகப்படுத்திக்கொள்ளக்கூடிய நிலைமை ஏற்பட்டுவிடும், ஏற்பட்டுவிடுகிறது. யாருக்காக இந்த வசதி ஏற்படுத்தப்பட்டதோ, உண்மையாக அவர்கள் அதை பயன்படுத்த முடியாத நிலைமை ஏற்பட்டுவிடும். அம்மாதிரி இல்லாமல் ஏழை எளிய மக்கள் எல்லோரும் இந்த வசதிகளை சுலபமாக பெறுவதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்து கொடுக்கவேண்டும்.

கடலைப் பயிறு சம்பந்தமாக, 'பாகேஜ் ஸ்கீம்' ஏற்படுத்தப் போவதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. உசிலம்பட்டி தாலூகாவில் கடலைப் பயிறு கம்பளி பூச்சியினால் மிகவும் பாதிக்கப்பட்டிருக்கிறது. கோவையில் இதைவிட குறைந்த அளவு பரப்புத்தான் பாதிக்கப்பட்டிருக்கிறது. கோவையில் 'ஏரியல் ஸ்ப்ரேயிங்' செய்தார்கள். அதேமாதிரி உசிலம்பட்டி தாலூகாவிலும் செய்ய வேண்டும். அதோடுகூட நிலத்தை ஆழ உழுவதால் பூச்சிகள் வெளியே வந்துவிடும், பெரிய அளவுக்கு பூச்சிகளை அழித்துவிடலாம் என்று கூறப்படுகிறது. உழவர்கள் ஆழ உழுவதற்கு வேண்டிய வசதிகள் செய்துதரவேண்டும், அவர்களுக்கு வேண்டிய நல்ல நீண்ட கனமான கொழுக்களை சப்ளை செய்யவேண்டும். உசிலம்பட்டி தாலூகாவிலும் 'ஏரியல் ஸ்ப்ரேயிங்'-க்கு வேண்டிய ஏற்பாடும் செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

கீழ் பழனியில் மலைவாழை சம்பந்தமாக ஆராய்ச்சி நிலையம் ஏற்படுத்தப்போவதாக குறிப்பிடப்பட்டிருக்கிறது. அதோடு சேர்த்து ஆரஞ்சு சம்பந்தமாகவும் ஆராய்ச்சி செய்வதற்கு அந்த நிலையத்தை விஸ்தரிக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். கொடைக்கானலில் ஆரஞ்சு உற்பத்தி நோயினால் மிகவும் பாதிக்கப்பட்டிருக்கிறது. ஆகவே, மலைவாழை ஆராய்ச்சி நிலையத்தை ஆரஞ்சுக்கும் விஸ்தரிக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

நாம் இப்பொழுது பல சர்க்கரை ஆலைகளை ஏற்படுத்திக் கொண்டு வருகிறோம். அந்த ஆலைகளில் இரண்டு விதமான கழிவுப் பொருள்கள் கிடைக்கின்றன. காகித உற்பத்திக்கு உபயோகமாக 'பகாஸும்', விவசாயத்திற்கு வேண்டிய 'மொலாஸஸ்'

2nd July 1962] [திரு. வை. சங்கரன்]

கிடைக்கிறது. அம்மாதிரி கழிவுப்பொருள்கள் கணிசமான அளவுக்கு கிடைக்கும் சர்க்கரை ஆலைகளுக்கு பக்கத்திலேயே அவைகளை நல்ல முறையில் உபயோகப்படுத்துவதற்கு காகித தொழிற்சாலையும், எரி சாராய ஆலையும் ஏற்படுத்துவதற்கு முயற்சி எடுத்துக்கொள்ளவேண்டும். இதற்கு ஒன்றிரண்டு மத்திய தொழிற் சாலைகள் ஏற்படுத்தினால் மட்டும் போதாது. பல ஆலைகளில் அதிகமாக இம்மாதிரி கழிவுப் பொருள்கள் கிடைக்கின்றன. இந்த கழிவுப் பொருள்களை நல்ல முறையில் உபயோகப்படுத்துவதற்கு ஆராய்ச்சி செய்து அதற்குவேண்டிய ஏற்பாடுசெய்து அந்தத் தொழிற்சாலைகளை சர்க்கரை ஆலைகளுக்கு பக்கத்திலேயே அமைக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக, சென்னை நகரில் தெற்கே ஒரு ஆஸ்பத்திரியை நிறுவப்போவதாக சொன்னார்கள். இது போன்ற, "வடக்கு, தெற்கு" பிரச்சினை மதுரை போன்ற பெரிய நகரங்களிலும் இருக் கிறது. அங்கேயும் வடக்கே ஒரு ஆஸ்பத்திரி இருக்கிறது. ஆனால் ஒரே அடியாக நெரிசல் ஏற்பட்டு, பொது மக்களுக்கு பல வித கஷ்டங்கள் ஏற்படுகின்றன. ஆகவே, மதுரை போன்ற இடங்களிலேயும் தெற்கு வட்டாரத்தில் ஒரு அரசாங்க ஆஸ்பத்திரி ஏற்படுத்த வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்ததாக, இந்த பட்ஜெட் உரையில் அறிவிக்கப்பட்டுள்ள ஸ்டாம்பு கட்டண உயர்வு அவ்வளவு உசிதமா என்பதை சர்க்கார் மறு பரிசீலனை செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். ஏற்கெனவே சொத்துக்களின் மதிப்பு பன்மடங்கு உயர்ந்திருக் கிறது. பத்து வருடங்களுக்கு முன் ஒரு சொத்தின் மதிப்பு ரூ. 2,000 ஆக இருந்தால், அதே சொத்தின் மதிப்பு இன்று ரூ. 20,000 ஆக உயர்ந்திருக்கிறது. அந்த முறையில் முன்பு ரூபாய் 100 ஸ்டாம்பு கட்டணம் செலுத்தியவர் இப்பொழுது ரூ. 1,000 ஸ்டாம்பு கட்டணம் செலுத்த வேண்டியிருக்கிறது. ஆகவே, சொத்து மதிப்புக்கு தகுந்தாற்போல் ஸ்டாம்பு கட்டணமும் உயர்ந்திருக்கிறது. இப்பொழுதுள்ள ஸோஷலிஸப் பாணியின்படி அடிக்கடி சொத்துக்கள் மாறவேண்டும் என்று சர்க்கார் சொல்லி வருகிறார்கள். 8 சத விகிதம் என்று இருப்பதை 9½ சத விகிதமாக உயர்த்தியதால், 3 அல்லது 4 தடவைகள் சொத்து கைமாறும்பொழுது, ஸ்டாம்பு கட்டணம் சொத்தின் விலையின் பாதிக்கு வந்துவிடும். ஆகவே, சொத்துக்கள் அடிக்கடி கைமாற முடியாத ஒரு நிலைமை ஏற்பட்டுவிடும். இப்பொழுது இருக்கின்ற 8 சத விகிதம் என்பதே அதிகமாக இருக்கிறது என்று பலர் கூறுகிறார்கள். ஆகையினால் 9½ சத விகிதம் என்று உயர்த்துவது அவ்வளவு நல்லதல்ல என்று நான் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.

மதுரையில் ஒரு பல்கலைக்கழகம் நிறுவப்படும் என்று கனம் நிதியமைச்சர் அவர்கள் தெரிவித்தார்கள். மிகவும் நன்றி. அதை சீக்கிரத்திலேயே நிறுவுவதற்கு ஏற்பாடு செய்யவேண்டும். பொது மக்கள் சார்பில் என்ன என்ன ஆதரவு வேண்டுமோ அதை உடனடி யாக செய்ய நாங்கள் தயாராய் இருக்கிறோம்.

[திரு. வை. சங்கரன்] [2nd July 1962

இப்பொழுது கோர்ட்டுக்காக கட்டிடங்கள் கட்டுவதற்கு பல இடங்களில் ஏற்பாடு செய்யப்பட்டு வருகிறது. அந்த முறையில் மதுரையிலும் தனியாக கோர்ட்டுக்கு கட்டிடம் கட்டுவதற்கு ஏற்பாடு செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். மதுரை நகரில் குடிதண்ணீர், சாக்கடை வசதியை விஸ்தரிப்பதற்காக ரூபாய் 5 கோடி கொடுக்க வேண்டும் என்று மதுரை நகரசபை கேட்டிருக்கிறது. அதையும் சீக்கிரமாக கொடுக்க வேண்டும். மதுரை நகரில் ஒரு ஸ்டேடியத்தை நிறுவுவதற்கும் ஏற்பாடு செய்ய வேண்டும். மதுரை நகரத்தில் வைகை நதி இருகரைகளிலும் ரிவெட்மெண்ட் வேலைகள் செய்யவேண்டும் என்றும் கேட்டுக் கொள்கிறேன். மேலும் பொதுமராமத்து இலாகாவில் பத்து ஆண்டுகளுக்கு மேலாக டெம்பரரி ஆக வேலை பார்ப்பவர்கள் பலர் இருக்கிறார்கள். அவர்களுடைய சர்வீஸை இதுவரையிலும் ரெகுலரைஸ் செய்யவில்லை. அதேமாதிரி கூட்டுறவு இலாகாவில் சீனியர் இன்ஸ்பெக்டர்கள் பத்தாண்டுகளாக டெம்பரரி ஆக வேலை செய்துகொண்டு இருக்கிறார்கள். இவர்கள் எல்லோரையும் சீக்கிரத்திலேயே பர்மனென்ட் ஆக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். சில இலாகாக்களில் "எபிஷியன்ஸி" என்ற போர்வையில் சீனியராக இருப்பவர்களுக்கு பிரமோஷன் கொடுக்காமல் விட்டிருக்கிறார்கள். போலீஸ் இலாகா மினிஸ்டீரியல் டிபார்ட்மெண்ட் பொறுத்த வரையில் அங்கே பிராஸ்பெக்டஸ் ஒன்றும் இல்லாமல் இருக்கிறது. அதற்கு ஏதாவது வழிவகை செய்ய வேண்டும். சில இலாகாக்களில் அப்பர் டிவிஷன் கிளார்க் விகிதம் குறைவாக இருக்கிறது. ரோடு இன்ஸ்பெக்டர்களைப் பொறுத்த வரையில், பரிட்சை பாஸ் பண்ணின பிறகும் கூட 'எல்.டி.ஸி.' குமாஸ்தா உத்தியோகம் கிடைப்பதற்கு வழி இல்லாமல் இருக்கிறது.

கல்வித்துறை சம்பந்தமாக சில சீர்திருத்தங்கள் செய்ய வேண்டும் என்று நமது நிதியமைச்சர் அவர்கள் சொல்லி வருகிறார்கள். ஆனால் இதை பரீட்சார்த்த முறையில் இல்லாமல், எல்லா அம்சங்களையும் நன்கு பரிசீலனை செய்து, ஒரு ஸ்திரமான முறையில் சீர்திருத்தங்களைச் செய்ய வேண்டும் என்று தெரிவித்துக் கொள்கிறேன். பெண்கள் கல்வியைப் பொறுத்த வரையில் இன்னும் அதிகமாக காலேஜ்களையும், டிரெயினிங் காலேஜ்களையும் அமைக்க வேண்டும். தொழில் நுட்ப உதவியாளர்களுக்காக ஜூனியர் காலேஜ்களையும் அதிகமாக ஏற்படுத்த வேண்டும். தவிர ஹாஸ்டல் வசதிகள் பல நகரங்களில் போதுமான அளவு இல்லை. அதற்கும் ஏற்பாடு செய்ய வேண்டும். கல்வித்துறையில் "நான்-டீச்சிங்" ஸ்டாஃபைப் பொறுத்த வரையிலும் பென்ஷன் வசதி செய்து கொடுக்க வேண்டும். சர்வீஸ் ஒப்பந்தமும் இல்லாமல் இருக்கிறது. அப்பர் டிவிஷன் குமாஸ்தா பதவிக்கு உயர்வு கிடைக்கும்படி செய்ய வேண்டும். அடுத்து, ஹைஸ்கூல் உபாத்தியாயர்களுக்கும், கல்லூரி உபாத்தியாயர்களுக்கும், ரிவைஸ்டு பென்ஷன் திட்டம் அமுலுக்குக் கொண்டு வரப்படவில்லை. அதையும் சீக்கிரத்தில் அமுல் செய்ய வேண்டும். தொழில் கல்லூரிகளுக்கு விண்ணப்பங்கள் போடும்போது, கால

2nd July 1962] [திரு. வை. சங்கரன்]

தாமதமாக தேர்வு நடப்பதால் இரண்டு மூன்று கல்லூரிகளுக்கு விண்ணப்பம் போட வேண்டியிருப்பது மிகவும் கஷ்டமாக இருக்கிறது. அதைப் பரிசீலனை செய்ய வேண்டும். உதவிச் சம்பளம் கொடுக்கும்போது ஆரம்பக் கட்டத்திலேயே அந்த சலுகையை அளிக்க வேண்டும். பின்னர் வாங்குவது கஷ்டமாக இருக்கிறது. பி.யு.சி. படிப்பிற்கு கல்லூரிகளின் எண்ணிக்கையை அதிகரிக்காததினுல் பலவித கஷ்டங்கள் ஏற்படுகின்றன. இந்தக் கஷ்டங்களை போக்குவதற்கு ஏற்பாடு செய்ய வேண்டும். மதுரை ஜெனரல் ஆஸ்பத்திரியைப் பொறுத்த வரையில் நான்கு ஸர்ஜிகல் யூனிட்டுகள் தான் இருக்கின்றன. சென்னை ஜெனரல் ஆஸ்பத்திரி, ஸ்டான்லி ஆஸ்பத்திரியில், 6 ஸர்ஜிகல் யூனிட்டுகளும், 6 மெடிகல் யூனிட்டுகளும் இருக்கின்றன. சீக்கிரத்திலேயே மதுரையிலும் இன்னும் இரண்டு யூனிட்டுகளையும் அமைக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். ஆஸ்பத்திரி நிர்வாகத்தைப் பொறுத்த வரையில் பல ஊழல்கள் ஏற்படுகின்றன. இவற்றையெல்லாம் ஒரு சூப்பிரண்டென்டென்டு கண் காணிக்க முடியாது. தனிப்பட்ட முறையில் ஒரு "டீனை"-ப் போட வேண்டும் என்று கேட்டுக் கொண்டு என்னுடைய உரையை முடித்துக் கொள்கிறேன்.

* திரு. ரா. சுப்பிரமணியன்: கனம் சபாநாயகர் அவர்களே, கனம் நிதியமைச்சர் அவர்கள் கொண்டு வந்துள்ள இந்த ஆண்டு நிதி நிலை அறிக்கையை வரவேற்று ஒரு சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். இந்த வருஷம் நிதி பற்றாக்குறையைச் சரிகட்டுவதற்கு 7 கோடி ரூபாய்க்கு அதிக வரிகள் போடப்பட்டு இருக்கின்றன. அதிக வரிகள் போடப்பட்டு இருப்பதைப் பற்றி எனக்கு முன்னர் பேசிய திரு. கருணாநிதி அவர்கள் அனேகமாக எல்லா இனங்களையும் எதிர்த்தாக வேண்டும் என்று சொன்னார். அதே சமயத்தில் பஸ் தொழிலை தேசியமயமாக்க வேண்டும் என்றும், மற்ற எல்லா தொழில்களையும் தேசியமயமாக்க வேண்டுமென்றும் கூறுகிறார். வரி போடாமல், சர்க்காருக்கு வருமானம் கிடைக்காமல் மற்றவர்களுடைய தொழில்களை எப்படி சர்க்கார் எடுத்துக் கொள்வது? அடித்துப் பறித்து எடுத்துக் கொள்வதா, அல்லது நஷ்ட ஈடு கொடுத்து எடுத்துக் கொள்வதா என்பதைப் பற்றி அவர் சொல்லவில்லை. இப்பொழுது வரி போட்டால், அது உடனடியாக பொதுமக்களை பாதிக்கும் என்ற ஒரே பேச்சை கடைசி வரையிலும் சொல்லி விடுகிறார். வரிகள் போடுவது எதற்காக? ஐந்தாண்டுத் திட்டங்களுக்குக்காகத்தான். நாட்டு மக்களின் முன்னேற்றத்திற்காக, கல்வி, மருத்துவம், பொதுப்பணி, ஆகிய துறைகளில் பல திட்டங்களை நாம் ஏற்றுக்கொண்டு இருக்கிறோம். ஆகவே, அம்மாதிரியான திட்டச் செலவுகளுக்கு வரி போட்டுத்தான் ஆக வேண்டியிருக்கிறது. அதை எதிர்ப்பது நல்லதல்ல என்று நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

இந்தச் சந்தர்ப்பத்தில் நான் ஒரு விஷயத்தை சொல்ல விரும்புகிறேன். திட்டச்செலவுகள் அதிகரித்துக் கொண்டே போகின்றன. அம்மாதிரி அதிகரித்துக்கொண்டு போகும்போது, திட்டச் செலவினங்களில் வீண்விரயம் ஆகாமல் இருக்கிறதா என்பதை நாம்

[திரு. ரா. சுப்பிரமணியன்] [2nd July 1962

கவனிக்க வேண்டும். வீண்விரயம் ஆகிறது என்று பரவலாக ஒரு எண்ணம் இருந்துகொண்டு வருகிறது. ஆகவே சிக்கன முறைகளைக் கையாண்டு, கிடைக்கக் கூடிய பணம் நல்ல முறையில் செலவு செய்யப்படுகிறதா என்பதைப் பரிசீலனை செய்ய ஒரு கமிட்டியை நியமித்து, இன்வெஸ்டிகேட் பண்ணச் சொன்னால் நலமாக இருக்கும் என்பதை தெரிவித்துக் கொள்கிறேன்.

அப்படி பல வரிகள் போடப்பட்டிருப்பதில் நஞ்சை நிலத் தீர்வையும் தண்ணீர்த் தீர்வையும் விதிக்கப்பட்டிருக்கிறது. இந்த வரிகளை நான் எதிர்க்கவில்லை. இவர்களுக்கு எந்தவிதமான வரியும் இதுவரையிலும் போடவில்லை என்று கனம் நிதியமைச்சர் அவர்கள் சொல்லி இருக்கிறார்கள். நிலத்தீர்வை, தண்ணீர்த்தீர்வை போடவில்லையே தவிர, வேறுவிதத்தில் வருமானம் வரக்கூடிய அளவில் நாம் விவசாய வருமான வரியை விதித்து இருக்கிறோம். அந்த வரி மூலமாக நிலச்சுவான்தார்களிடமிருந்து வருமானத்தைப் பெற்று வருகிறோம். செட்டில்மெண்ட் ஆகாததால் நிலத்தீர்வையை உயர்த்தவில்லை என்று சொன்னார்கள். மீண்டும் செட்டில்மெண்ட் செய்யட்டும். தண்ணீர் தீர்வையையும் உயர்த்தட்டும். அதே நேரத்தில், உச்சவரம்பு கொண்டுவந்து ஒரு விவசாயி ஐந்து எக்கருக்கு மேல் உழக்கூடாது என்று சட்டம் கொண்டு வரக்கூடிய நேரத்தில், இந்த விவசாய வருமான வரி தொடர்ந்து நீடிக்க வேண்டுமா என்பதைப் பரிசீலிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். விவசாயிகள் கணக்கு வைக்கும் பழக்கம் கிடையாது. சென்ற இரண்டு மூன்று ஆண்டுகளாக, கணக்குப் பார்த்து தீர்வை கட்ட முடியாத நிலையில் இருக்கிறார்கள். விவசாயிகளுக்கு அதிக தொந்திரவு கொடுப்பது நல்லதல்ல. ஆகவே விவசாய வருமானவரி மேலும் இருக்க
10.30 a.m. வேண்டுமா என்பதை நன்கு ஆலோசித்து அதை நீக்கி விட்டால் நலமாக இருக்கும் என்று கூறிக்கொள்ள ஆசைப்படுகிறேன். அதற்கு அடுத்தபடியாக விலைவாசி உயர்வைப்பற்றி இங்கும் பேசுகிறார்கள், வெளியிலும் பேசுகிறார்கள். உணவு தானியங்களில் விலைவாசிகள் கடந்த ஒரு வருஷ காலமாக ஒரே நிலையில் தான் இருந்து வருகின்றன. ஒரு வருஷத்திற்கு முன்னால் எந்த அளவில் இருந்ததோ அந்த அளவில்தான் இப்பொழுதும் இருக்கிறது. அப்படிப்பட்ட நிலைமையில் அதைப்பற்றி இப்பொழுது கிளர்ச்சி செய்ய வேண்டிய அவசியம் என்ன என்பது தெரியவில்லை. அதற்கு என்ன காரணம் என்பதைப்பற்றியும் நாம் யோசிக்க வேண்டியதாக இருக்கிறது. திடீரென்று இப்பொழுது கிளர்ச்சி செய்ய வேண்டிய அவசியம் என்ன என்பதை யோசிக்க வேண்டும். தேர்தல் காலத்தில் தான் மூன்று படி அரிசி கொடுக்கிறோம் என்று சொல்லி வந்தார்கள். அதன் பிறகு கிளர்ச்சி செய்ய ஆரம்பித்தார்கள். விலைவாசிகள் இறங்கவில்லை. இப்பொழுது கிளர்ச்சி செய்ய வேண்டியதன் காரணம் ஒருக்கால் வரப்போகிற முனிசிபல் எலெக்ஷனில் இதை ஒரு காரணமாகக் கொண்டு வெற்றி பெறலாம் என்று நினைத்துக்கொண்டு கிளர்ச்சி செய்கிறார்கள் போல் தோன்றுகிறது. இப்பொழுதுதான் ஏழை விவசாயிகள் இந்த விலைவாசியின் உயர்வால் பலனடைந்து

2nd July 1962] [திரு. ரா. சுப்பிரமணியன்]

வருகிறார்கள். இந்த சமயத்தில் சர்க்கார் அதில் தலையிட்டு விலைவாசிகளைக் குறைக்க முற்பட்டால் அதனால் பாதிக்கப்படக்கூடியவர்கள் ஏழை விவசாயிகளே தவிர பெரிய முதலாளிகள் அல்ல என்பதை மட்டும் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். தற்போதுள்ள விலைவாசியின் உயர்வால் மூன்று அல்லது நான்கு ஏக்கர் நிலம் வைத்திருக்கக்கூடியவர்கள் இப்பொழுதுள்ள நிலைமையை பயன்படுத்திக்கொண்டு ஏதோ கடன் வாங்கி முன்னேற்றமடைந்து வருகிறார்கள். அதிகமாக அவர்கள் கடன் வாங்கி இருக்கிறார்கள். இப்பொழுது விலைவாசியைக் குறைத்தால் அவர்கள் வாங்கிய கடனைக் கொடுக்க முடியாமல் பாதிக்கப்படுவார்கள். தற்போதுள்ள விலையை அடிப்படையாகக் கொண்டுதான் அவர்கள் கடன் வாங்கி இருக்கிறார்கள். இந்த நிலைமையில் விலைவாசிகளை குறைத்தால் அவர்கள் ரொம்பவும் பாதிக்கப்படுவார்கள். இந்த நிலைமையில் சர்க்கார் தலையிட்டு குறைப்பது என்பது சரியல்ல. உற்பத்தி பெருகி அதனால் விலை தன்னாலே குறையலாமேயொழிய சர்க்கார் தலையிட்டு குறைக்க வேண்டிய அவசியமே இல்லை.

அதற்கு அடுத்தபடியாக விலைவாசி உயர்வுப்படி கொடுத்திருக்கிறார்கள். அதாவது 150 ரூபாய் சம்பளம் வாங்குகிறவர்களுக்கும் அதற்குக் குறைவாக சம்பளம் வாங்குகிறவர்களுக்கும் கொடுத்திருக்கிறார்கள். அத்துடன் வருட வருமானம் 1,500 ரூபாய் வரக்கூடியவர்களுக்கு கல்விச் சலுகை கொடுத்திருக்கிறார்கள். இதற்கு முன்னதாக 1,200 ரூபாய் அளவில் இருந்தது. இதனால் ரூ. 1,500 க்குக் குறைந்த வருமானம் உள்ளவர்களுக்கு ஓரளவு உதவியாக இருக்கிறது. அதற்கு மேல் வருமானம் உள்ளவர்களுக்கு எந்தவிதமான பிரயோசனம் இல்லை. ஆகவே விலைவாசி உயர்வு படியை மாதம் ஒன்றுக்கு ரூ. 250 சம்பளம் வாங்குகிறவர்களுக்கும் நீடித்துக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக தஞ்சை ஜில்லாவைப் பொறுத்த வரையில் அங்கேயெல்லாம் கிராமங்கள் எல்லாம் சாதாரணமாக ஆற்றோரங்களில் தான் இருக்கின்றன. எங்கு பார்த்தாலும் ஆறுகளும் வாய்க்கால்களும் தான் ஓடிக்கொண்டிருக்கின்றன. எங்கு போனாலும் ஆறுகளையும் கால்வாய்களையும் தான் காணலாம். என்னுடைய தொகுதியை எடுத்துக்கொண்டால் எல்லா கிராமங்களும் ஆற்றோரங்களில் தான் இருக்கின்றன. என்னுடைய தொகுதியில் சுமார் 85 ஆயிரம் மக்கள் 65 கிராமங்களில் சுமார் 67 மைல்களை உபயோகிக்கிறார்கள். அவர்களுக்கு எல்லாம் நல்ல ரோடுகள் போட வேண்டியதாக இருக்கிறது. அந்த ரோடுகளைக் கொடுக்க வேண்டும் என்று பி.டபிள்யூ.டி. யைக் கேட்டால் அவர்கள் கொடுக்க மறுக்கிறார்கள். அதனால் அங்குள்ள ரோடுகள் நல்ல முறையில் இல்லாமல் இருக்கின்றன. அவைகளை ஹைவேஸ் டிபார்ட்மெண்ட்டுக்குக் கொடுத்தால் நலமாக இருக்கும். அந்த ரோடுகளை நல்ல முறையில் வைத்துக்கொண்டு அவைகளை செப்பனிட வேண்டியதாக இருக்கிறது. அவைகளை செப்பனிடுவதாக இருந்தால் தஞ்சை மாவட்ட பஞ்சாயத்து யூனியனிடம் போதிய நிதி இல்லை. ஆனால் அந்த ரோடுகளை செப்பனிடுவதற்கு போதிய நிதி தேவையாக இருக்கிறது.

[திரு. ரா. சுப்பிரமணியன்] [2nd July 1962

தஞ்சை ஜில்லா சம்பந்தப்பட்ட வரையில் அங்கே ரயில்வே செஸ் வரி சுமார் 1½ கோடி ரூபாய் இருக்கிறது. அதை வைத்துக் கொண்டு அந்த ரோடுகளை செப்பனிடலாம் என்று தோன்றுகிறது.

அதற்கு அடுத்தபடியாக தஞ்சை மாவட்டம் பூராவும் வெள்ளாண்மைதான் நடந்து வருகிறது. வேளாண்மையைத்தான் அங்குள்ளவர்கள் நம்பிக்கொண்டிருக்கிறார்கள். அங்கு பல தொழில்களை ஆரம்பிக்க வேண்டும் என்று இப்பொழுது திட்டமிட்டிருப்பதைக் கண்டு நான் சந்தோஷப்படுகிறேன். மகிழ்ச்சி அடைகிறேன். நான் ஏற்கெனவே இதைப்பற்றி சொல்லியிருக்கிறேன். அதாவது வேதாரண்யத்தில் உப்பு பாக்டரியை ஆரம்பிக்க வேண்டும் என்று. அதற்கு வேண்டிய வசதி அங்கு இருக்கிறது என்றும் குறிப்பிட்டிருக்கிறேன். அதே மாதிரி கனம் அமைச்சர் அவர்களும் அங்கே உப்பு பாக்டரி ஒன்றை ஆரம்பிக்கப் போவதாகச் சொல்லி இருப்பதைக் கண்டு நான் சந்தோஷப்படுகிறேன். அப்படி அங்கு ஒரு பாக்டரியை ஆரம்பிக்கப்படும் என்று சொல்லும்போது உண்மையிலேயே அதைக் கண்டு இந்த அமைச்சர் அவையையும் கனம் அமைச்சர் அவர்களையும் நான் பாராட்டுகிறேன்.

அடுத்தபடியாக கனம் அமைச்சர் கக்கன் அவர்கள் தஞ்சை ஜில்லாவில் சுற்றுப் பிரயாணம் செய்யும்போது கூட சொல்லிக் கொண்டு வந்திருக்கிறார். அங்கு ஆற்றோரங்கரைகள் அதிகமாக இருப்பதால் அங்கு மூங்கில் அதிகமாக இருக்கிறது. அத்துடன் அங்கு கரும்புச் சக்கையும் கிடைக்கிறது. ஆரூரான் சர்க்கரை ஆலை இருப்பதால் அங்கு கரும்புச் சக்கை கூட அதிகமாக கிடைக்கிறது. மற்றும் வைக்கோல் கூட அங்கு அதிகமாக கிடைக்கிறது. அவைகளை வைத்துக்கொண்டு காகிதம் தயாரிக்கலாம். அதனால் அங்கு பேப்பர் பாக்டரி ஒன்றை ஆரம்பிக்க நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அத்துடன் அங்கு இஞ்சினியரிங் கல்லூரியையும், விவசாயக் கல்லூரியையும் ஆரம்பிக்க வேண்டும் என்றும் கேட்டுக்கொள்ளுகிறேன். ரயில்வே நிதியை அதற்கு என்று ஓரளவு பயன்படுத்திக் கொள்ளலாம். ஆகவே இஞ்சினியரிங் கல்லூரியை ஆரம்பிப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். விவசாயக் கல்லூரியை அமைப்பதற்கு வேண்டிய வசதிகளும் அங்கு இருக்கிறது. தனியார் ஒருவர் கூட அதை அங்கு ஆரம்பிக்க முன்வந்திருக்கிறார். ஆகவே அதை பயன்படுத்திக்கொண்டு ஆரம்பிக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

* **திரு. ஆ. தங்கவேலு :** கனம் சட்ட மன்றத் தலைவர் அவர்களே, 1962-63க்கான ஆண்டு நிதி நிலை அறிக்கையின் மீது எனது கருத்துக்களை இங்கே கூற விரும்புகிறேன். கனம் நிதி அமைச்சர் அவர்கள் தன்னுடைய அறிக்கையில் விலைவாசி உயர்ந்திருப்பதைப் பற்றியும் அதைக் குறைக்க என்ன நடவடிக்கை எடுக்கப் போகிறார்கள் .என்பதைப்பற்றியும் குறிப்பிடவில்லை. அப்படி குறிப்பிடாதது மிகவும் வருந்தத்தக்கதாகும். ஏழு கோடியே பதினைந்து லட்சம் ரூபாய்க்கு புதிய வரி போட்டிருக்கிறார்கள்.

2nd July 1962] [திரு. ஆ. தங்கவேலு]

அதை ஆளும் கட்சியிலுள்ளவர்களும் எதிர்க் கட்சியிலுள்ளவர்களும் ஆதரித்ததாகத் தெரியவில்லை. உள்ளபடியே அவர்கள் அதைக் கண்டு திருப்தி அடைந்ததாகவே தெரியவில்லை. இப்பொழுது வரி விதிப்பு முறை இருப்பதைப் பார்த்தால் அது ஏழை மக்களை பாதிக்கக்கூடியதாகத்தான் இருக்கிறது. அந்த முறையில் தான் இந்த ஏழு கோடி பதினைந்து லட்சம் ரூபாய் வரியும் அமைந்திருக்கிறது. சாதாரணமாக ஒருவர் தாக்கினுல் அதை தாங்கிக் கொள்ளக்கூடியவனை நாலைந்து பேர் தாக்கினுல் அவனுல் எப்படி தாங்கிக்கொள்ள முடியாமல் இருக்குமோ அந்த அளவில் இருக்கிறது இப்பொழுது விதிக்கப்பட்ட வரியானது. சென்ற ஏப்ரல் மாதத்தில் மத்திய சர்க்கார் வரி விதித்திருப்பதின் மூலம் ரயில்வே கட்டணத்தை உயர்த்தி இருக்கிருர்கள். இந்த சர்க்காரும் ஏழு கோடி பதினைந்து லட்சம் ரூபாய் அளவில் வரி விதித்திருக்கிருர்கள். பஞ்சாயத்து யூனியன்களும் வரி விதித்திருக்கிருர்கள். அதற்கு வேண்டிய அதிகாரமும் அவர்களுக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. இப்படி பல வழிகளில் ஏழைகளுக்கு வரி விதிக்கப்பட்டிருக்கிறது. அதன் மூலம் ஏழை மக்கள் நசுக்கப்படுகிருர்கள். கசக்கிப் பிழியப்படுகிருர்கள். இதிலிருந்து அவர்கள் மீளுவதற்கு எந்த விதமான வழியும் இல்லை.

இப்பொழுது பஸ்ஸுக்குப் புதியதாக வரி போட்டிருக்கிருர்கள். மைலுக்கு ஏற்ற விதமாக வரியை உயர்த்தியிருக்கிறேம் என்று சொல்கிருர்கள். மைலுக்குத் தக்கபடி வரி விதிப்பது ஒரு வகையில் நியாயம் என்ருலும்கூட, இன்னும் பல வகைகளிலே விதித்திருக்கக்கூடிய நில வரி, தண்ணீர் வரி, மின்சார வரி இவைகளையெல்லாம் எடுத்துவிட்டு, நான் கூறப்போகின்ற யோசனையில் அரசாங்கம் தங்களுடைய கவனத்தைச் செலுத்துமேயானுல், உள்ளபடியே நல்லதொரு நிலையை ஏற்படுத்த முடியும் என்று நான் கருதுகிறேன்.

பன்னிரண்டரை ரூபாய் வீதம் வரி செலுத்தினுல் ஒரு பஸ் ரூட் கொடுக்கப்படுகிறது. அப்படி பஸ் ரூட் வாங்குபவர்கள், ஓராண்டுக் காலத்தில், அல்லது ஐந்தாண்டுக் காலத்தில் பல ஆயிரம், பல லட்சம் ரூபாய்க்கு அதிபர்களாகிருர்கள். இப்பொழுது நகராட்சி மன்றங்களிலும் மற்ற பல இடங்களிலும் ஏலம் விடும் முறை இருப்பது எல்லோருக்கும் தெரியும். ஏற்கனவே கூட, கள்ளுக் கடை, சாராயக் கடை இவைகளை ஏலம் விட்டு, அதன் மூலமாகப் பல கோடி ரூபாய் வருமானம் வந்தது. அதைப்போல, பஸ் ரூட்களையும் சர்க்கார் ஏலம் விடுமானுல், அதன் மூலமாகப் பல பேர்கள் போட்டி போட்டு, பஸ் ரூட்களை எடுத்துக் கொள்வார்கள். இந்த வகையில் சர்க்காருக்குப் பல கோடி ரூபாய் வருமானம் வரும். சிலருக்கு இது ஆச்சரியமாக இருக்கலாம். ஓராண்டு ஒரு பஸ் ரூட்டை எடுத்து நடத்தி விட்டு, அடுத்த ஆண்டு என்ன செய்வது என்று கேட்கலாம். ஆனுல் நான் கூறுகின்றேன்—ஐந்து வருஷங்களுக்கு, பத்து வருஷங்களுக்கு என்று ஒரு பஸ் ரூட்டை ஏலத்திற்கு விட்டோமானுல், என்னுடைய மதிப்புப்படி சர்க்காருக்கு 15 கோடி ரூபாய்க்குக் குறையாமல் ஆண்டு வருமானம் வரக்கூடிய நிலை இருக்கிறது. அந்த அளவில்

[திரு. ஆ. தங்கவேலு] [2nd July 1962

வருமானத்தைப் பெருக்கினால், ஏழைகளைப் பாதிக்கக்கூடிய இந்த வரிகளை எடுத்து விட்டு, பல திட்டங்களை நிறைவேற்றுவதற்கு வசதியாக இருக்கும்.

குறிப்பாக, லாரி மீது வரி விதிக்கப்பட்டிருக்கிறது. எனக்கு முன்னால் பேசியவர்கள் இதுபற்றி கருத்து தெரிவித்திருக்கிறார்கள். சாதாரணமாக, ஒரு லாரி, இரண்டு லாரிகள் வைத்திருப்பவர்கள் தான் நம்முடைய மாநிலத்தில் அதிகம். அவர்கள் அதை வைத்துக்கொண்டு, ஏதோ அன்றாடம் வயிற்றுப் பிழைப்பு நடத்திக் காலம் தள்ள முடிகிறதே தவிர, அதனால் பல லட்சம் ரூபாய் சம்பாதித்து முன்னேற்றம் அடைந்துவிட்டார்கள் என்று சொல்ல முடியாது. பொதுவாக ஒரு பஸ் ரூட்டை 12½ ரூபாய்க்கு வாங்கி ஒரு வருஷத்திற்குப் பிறகு அதே பஸ் ரூட்டை இன்னொருவருக்கு விற்கப்படுவது இந்த அரசாங்கத்திற்கும் தெரியும். 12½ ரூபாய்க்கு பஸ் ரூட் வாங்கி, நாற்பதாயிரம் ரூபாய் செலவு செய்து பஸ் போட்டுவிட்டால், ஓராண்டுக் காலத்தில் வருமானம் சரிப்படுவதோடு, அவர்கள் அந்த பஸ் ரூட்டை ஒன்றரை அல்லது இரண்டு லட்சம் ரூபாய்க்கு விற்கிறார்கள். ஆனால், லாரி வைத்திருப்பவர்கள் ஒரு லாரியை 35 ஆயிரம் ரூபாய்க்கு வாங்கி, இரண்டு ஆண்டுகள் ஓட்டிய பிறகு, அந்த லாரியை 20 ஆயிரம் ரூபாய்க்குத்தான் குறைந்த விலையில் விற்க முடியுமே தவிர, உயர்ந்த விலை விற்றுப் பணக்காரனாக முடியாது. பஸ் நடத்துபவர்களுடைய நிலையை மனதில் கொண்டு, லாரி வைத்து நடத்துகிறவர்களும் உயர்ந்த அளவு வருமானம் பெறுகிறார்கள் என்று நினைத்து லாரிக்கும் வரி விதித்திருப்பது மிகவும் வருந்தத் தக்கதாகும். லாரிகளுக்கு விதித்திருக்கும் வரியை எடுத்து விடுவதுதான் நல்லது என்று நான் தெரிவித்துக் கொள்கின்றேன். லாரிக்கு வரி போடப்படுமானால், அதன் காரணமாக விலைவாசி மேலும் உயருவதற்கான நிலை ஏற்படக்கூடும். கிராமத்தில் இருக்கக்கூடியவர்கள் மிகவும் தொல்லைப்பட வேண்டிவரும். ஆகவே லாரிக்கு இருக்கும் வரியை எடுத்துவிட்டு, எனக்கு முன்னால் பேசிய காங்கிரஸ் கட்சியைச் சார்ந்த கனம் அங்கத்தினர் கூறியதைப் போல, பணக்காரர்கள் வைத்திருக்கக்கூடிய கார்களுக்கு பத்து, பதினைந்து ரூபாய் அதிகமான வரி போட்டு, அதன் மூலமாக நிதி நிலைமையைப் பெருக்கிக்கொள்ளலாம். லாரி மீது வரி போடவேண்டிய அவசியமில்லை. அந்த வகையிலே என்னுடைய யோசனையை ஏற்றுக்கொள்ளவேண்டும் என்று கேட்டுக் கொள்கின்றேன். பஸ் ரூட்டை ஏலம் விடுவதால் நல்ல வருவாய் கிடைக்கும். அதைக்கொண்டு நல்ல பல திட்டங்களை நிறைவேற்ற வசதி ஏற்படும் என்பதை மீண்டும் வற்புறுத்திக் கூற விரும்புகிறேன்.

நிலங்களுக்கு வரி விதிக்கப்படுகிறது. நில வரி விதிப்பினால் பொதுவாக விவசாயிகள் பாதிக்கப்படுகிறார்கள். திண்டிவனம் போன்ற எங்கள் பகுதிகளில் விவசாயத்திற்குத் தேவையான தண்ணீர் வசதி கிடையாது. வானம் பார்த்த பூமியாதலால் மழை பெய்தால்தான் ஏரிகள் நிரம்பும். மழை இல்லாவிட்டால் அங்கேயுள்ள ஏரிகள் நிரம்ப எந்தவிதமான வசதியும் கிடையாது.

2nd July 1962] [திரு. ஆ. தங்கவேலு]

மழை இல்லாத காரணத்தால் ஏராளமாக சாவி ஏற்பட்டு, அங்குள்ள மக்கள் அவதிப்படுகிருர்கள். முப்பது ஆண்டுக் காலமாக எங்கள் பகுதியில் உள்ள ஏரிகள் மராமத்து செய்யப் படவில்லை. அவைகள் மராமத்து செய்யப்படவேண்டுமென்று பல தடவை அமைச்சர் அவர்களிடம் எங்கள் பகுதியில் உள்ளவர்கள் கேட்டுங்கூட, அவைகள் கவனிக்கப்படவில்லை. குறிப்பாக, திண்டி வனம் வட்டத்திலே கிடங்கல் ஏரி இருக்கிறது. அது ஒரு பெரிய ஏரி. அது மராமத்து செய்யப்பட்டு நாற்பது, ஐம்பது ஆண்டுகள் ஆகிறது. முதல் போகத்திற்கே தண்ணீர் இல்லாத நிலை ஏற்பட்டிருக்கிறது. காரணம், அந்த ஏரி ஆழப்படுத்தப்பட வில்லை. கரைகளும் மோசமான நிலையில் இருக்கிறது. மழை பெய்து தண்ணீர் வந்தால், கரைகள் எந்த நேரத்தில் உடைந்து விடுமோ என்ற பயங்கரமான நிலையில் இருந்துகொண்டிருக் கிறது. அதைப்பற்றி கனம் அமைச்சர் அவர்களிடத்தில் பல தடவை மகஜர் கொடுத்துங்கூட, இதுவரையிலும் கவனித்ததாகத் தெரியவில்லை.

அடுத்தபடியாக, ஆலக்கிராமம் ஏரி பெரியதொரு ஏரியாகும். தொண்டியாற்றிலிருந்து கால்வாய் மூலமாகத் தண்ணீர் வந்து அந்த ஏரி நிரம்பவேண்டும். அந்த ஏரி தற்போது நிரம்பினால், ஐம்பது நாட்கள் தான் பாசனத்திற்குப் போதுமானதாக இருக்கும். முதல் போகத்துப் பயிர் கதிர் வருகின்ற நேரத்தில் கழுத்தைப் பிடிக்கும் நிலையில் சாவி ஏற்பட்டுக்கொண்டு வருகிறது. பம்ப் செட் வைத்திருக்கும் காரணத்தால் கடைசி நேரத்தில் தப்பிக்க முடிகிறதே தவிர, இரண்டு ஆண்டுகளுக்கு முன்னுல் அங்கு பெரும் பகுதியில் சாவி ஏற்பட்டு, மக்கள் மிகவும் தொல்லைப்பட்டுக் கொண்டிருந்தார்கள். அதற்காக, அந்த ஏரியை ஆழப்படுத்தி, கரைகளைச் செப்பனிடவேண்டும் என்று 30—5—1961 அன்று கனம் மராமத்து அமைச்சரிடமும், 8—4—1961 அன்று கனம் ரெவின்யூ அமைச்சரிடமும் மனுக்கள் கொடுத்திருக்கிருர் கள். அதைப்பற்றி இதுவரையிலும் எந்த விதமான நடவடிக்கை யும் எடுத்து, ஏரிகளுக்குத் தண்ணீர் நிரம்புவதற்கான வசதி செய்து கொடுக்கப்படவில்லை.

குறுமாப்பேட்டை ஏரி என்பது ஒரு சிறிய ஏரியாகும். அந்தப் பகுதியில் இருபது ஆண்டுகளுக்கு முன்பாக குறைந்த அளவு மக்கள் வசித்து வந்தார்கள். அப்பொழுது ஏரியின் குறுக்கே கரை போட்டுவிட்டார்கள். இப்பொழுது மக்கள் அதிக மாகப் போய்விட்ட காரணத்தால், தண்ணீர் அதிகமாகத் தேவைப்படுவதன் காரணமாக, கரையைத் தள்ளிப் போட்டு ஏரியைக் கொஞ்சம் நீளமாக்கவேண்டும் என்று கனம் முதல் அமைச்சர் அவர்கள் 31—8—1961 அன்று அந்தப் பக்கத்தில் சுற்றுப் பிரயாணம் வந்த போது அவரிடம் மகஜர் ஒன்று கொடுத்தும், இதுவரை அது சம்பந்தமாக எந்த விதமான நடவடிக்கையும் எடுக்கப்பட்டதாகத் தெரியவில்லை. விவசாயிகளுக்குப் பல நன்மைகள் செய்யவேண்டியிருக்கிறது. விவசாயிகள் முன்னேறு வதற்கு தண்ணீர் வசதி செய்து கொடுத்து, இன்னும் வேண்டிய பல வசதிகளையும் செய்துகொடுத்துவிட்டுப் பின்னர் நில வரியை

[திரு. ஆ. தங்கவேலு] [2nd July 1962

உயர்த்தினால், விவசாயிகள் சமாளிக்க முடியுமே தவிர, இன்றிருக் கக்கூடிய நிலையில் அவர்கள் தப்பிக்க முடியாத நிலைதான் இருந்து கொண்டிருக்கிறது. அவர்கள் நில வரியை மேற்கொண்டும் கட்ட முடியாத நிலையில் இருக்கிறார்கள்.

திண்டிவனம் வட்டத்திலே உள்ள ஆலக்கிராமம் ஏரியினுடைய கோடித் தண்ணீர் கொடிமா என்ற ஏரியிலே விழுந்து, அந்தக் கொடிமா ஏரியிலிருந்து வண்ராம்பட்டு பந்தமங்கலம் முதலிய ஏழு ஏரிகளிலே விழுந்து அவைகளுக்குத் தண்ணீர் நிரம்புவதன் மூலம் விவசாயிகள் தங்களுடைய நிலத்திற்குத் தண்ணீர் பாய்ச்ச வசதி ஏற்படும். ஆனால், ஆலக்கிராமம் ஏரியினுடைய கோடித் தண்ணீர் கொடிமா ஏரிக்கு வர முடியாத நிலையில் கரை உடைந்தும் கால்வாய் முப்பது முப்பத்தைந்து ஆண்டுகளாக செப்பனிடப்படாமலும் இருக்கிறது. அந்தக் கால்வாயைச் செப்பனிட்டு, கொடிமா ஏரிக்குத் தண்ணீர் வர வசதி செய்திருந் தால் ஏழு ஏரிகளுக்கும் நல்ல முறையில் தண்ணீர் வர வசதி ஏற்பட்டிருக்கும். அப்படி இல்லாத நிலையில், ஆலக்கிராமம் ஏரி யினுடைய கோடித் தண்ணீர் பக்கத்திலே உள்ள இரட்டணை ஆற்றில் விழுந்து வீணாகப் போகும் நிலை இருக்கிறது. ஆலக் கிராம ஏரியின் கோடித் தண்ணீர் ஏழு ஏரிகளுக்கும் பயன்பட வேண்டுமானால், உடைந்துபோன கரையைக் கட்டி, தூர்ந்து போயிருக்கும் கால்வாயைச் செப்பனிடவேண்டும். அப்பொழுது தான் ஏழு ஊர்களுக்கும் பாசன வசதி ஏற்பட்டு, விவசாயி களுக்கு நன்மை கிடைக்கும். ஆகவே, அமைச்சர் அவர்கள் இவைகளையெல்லாம் உடனடியாக கவனித்து, ஏரிகளை மராமத்து செய்துகொடுக்க ஆவன செய்யவேண்டுமென்று நான் வேண்டிக் கேட்டுக்கொள்கிறேன். கிடங்கில் ஏரியில் சிற்றேரி, பேரேரி என்று இரு பிரிவாக இருக்கிறது. சிற்றேரி மேற்குப் பகுதியில் உள்ளது. 500 ஏக்கரா நிலம் அந்தச் சிற்றேரியின் கீழ் இருக் கிறது. சிற்றேரியில் இரண்டு மதகு இருக்கிறது ஒரு அமைப்பிலே சிற்றேரியின் கரை உடைந்திருப்பதன் காரணமாக சிற்றேரித் தண்ணீர் பெரிய ஏரிக்கு வந்து விழுகிறது. இதனால் அந்த 500 ஏக்கரா நிலம் பாசன வசதியை இழந்துவிடுகிறது. ஆகவே இந்த சிற்றேரி, பேரேரிக்கு இடையில் சிமிண்டினால் கலங்கல் கட்டி ஒன்றின் நீர் இன்னொன்றோடு கலக்காமல் இருக்கும்படி செய்ய வேண்டும். இதற்கு பலதடவை மனுக்கள் கொடுத்திருக்கிறோம். உடனடியாக கனம் அமைச்சர் அவர்கள் அதற்கு வேண்டிய முயற்சியை எடுத்து சிற்றேரியையும், பேரேரியையும் இணைக்கும் கரையை சிமிண்டினால் கட்டி விவசாயிகளுக்கு வசதி செய்து கொடுக்க வேண்டுமென்று நான் கேட்டுக் கொள்கிறேன்.

மின்சார வரி உயர்வினால் எங்கள் பகுதி மிகவும் பாதிக்கப்படும். அந்தப் பகுதியில் பாசன வசதி இல்லாவிட்டாலும் கிணறு களுக்குப் பம்பு செட்டுகள் வைத்து ஏதோ ஓரளவு பயிர் செய்ய முடிகிறது. இந்த மின்சார வரி உயர்வால் விவசாயிகள் மிகவும் பாதிக்கப்படுவார்கள். ஆடம்பர காரியங்களுக்கு இந்த மின்சார வரி இருக்கலாம். விவசாயிகளுடைய பம்பு செட்டுகளுக்கு புதிதாக விதித்து இருக்கிற வரியை அவசியம் எடுத்து விட வேண்டுமென்று அமைச்சரவையைக் கேட்டுக்கொண்டு என் னுடைய உரையை முடித்துக்கொள்கிறேன்.

2nd July 1962]

* **திரு. ஏ. பி. ஸி. வீரபாகு:** கனம் சபாநாயகர் அவர்களே, 1962-63-ஆம் வருஷத்திய நிதி நிலை அறிக்கையை நமது நிதி அமைச்சர் அவர்கள் சமர்ப்பித்திருப்பதைப் பாராட்டி அதை ஆதரிக்கிறேன். வரவேற்கிறேன். மேலெழுந்தவாரியாகப் பார்த்தால் நமது நிதி நிலைமை—ரொக்க வசதிகள் பாதிக்கப்பட்டிருக்கிறது என்பது தெரியும். நம்முடைய திட்டங்களுக்கு, நம்முடைய தேவைகளுக்கு ஏற்றபடி நம்முடைய பற்றுக்குறையை நிவர்த்தி செய்வதற்கு நமது அமைச்சர் அவர்கள் ஒரு பெரு முயற்சியை மேற்கொண்டிருக்கிறார்கள். இந்த நிதி நிலை அறிக்கையின் மீது பேசுகின்றபோது யாராவது புதிய வரி இல்லாமல் இதைச் சமாளித்திருக்கமுடியும் என்று சொல்கிறார்களா என்று பார்த்தேன். யாரும் சொல்லவில்லை. திட்டங்களையாவது குறைத்துவிடலாம் என்று சொல்கிறார்களா என்று இந்தச் சபையில் எழுந்த விவாதத்தை உன்னிப் பார்க்கும்போது ஒருவரும் அதைக் கூறவில்லை. அனாவசியமான செலவுகள் மேற்கொள்ளப்பட்டிருக்கின்றன என்ற சாக்கும் சொல்லப்படவில்லை. ஆகவே அவசியமான பல திட்டங்களை மேற்கொள்வது என்று தீர்மானித்திருப்பதோடு அவற்றை நிறைவேற்றவும், பொருளாதார பற்றுக்குறையைச் சமாளிக்கவும் நிதி அமைச்சர் அவர்கள் தைரியமாக முன் வந்திருக்கிறார்கள் என்றுதான் நான் இந்தச் சந்தர்ப்பத்தில் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். இதை வெறும் வரவு செலவுத் திட்டமாக அமைக்காமல் பல்வேறுபட்ட திட்டத்தின் மதிப்பீடு என்ற முறையில் இதை அமைத்திருப்பதைப் பார்க்கிறோம். விவசாயத் துறை, தொழில் துறை என்று பிரித்து இந்த இரண்டு பிரிவுகளையும் தனித்தனியாகப் பார்ப்போமேயானால் நாம் மேற்கொண்டிருக்கும் பல்வேறு நடவடிக்கைகளையும் தெரிந்துகொள்ளலாம். விவசாயத்துறையில் அதிகமாக உற்பத்தியாகிக்கொண்டிருந்த 9 லட்சம் டன்னை இன்னும் அதிகமாக அத்துறையில் கவனம் செலுத்துவதன் மூலமாக 17 லட்சம் டன் அளவிற்கு பெருக்குவதற்கு வாய்ப்பு இருப்பதையும், அதற்கான நடவடிக்கைகள், செலவினங்கள் ஆகியவற்றையும் குறிப்பிட்டிருக்கிறார்கள். இம்மாதிரி பல்வேறு நடவடிக்கைகளை நாம் மேற்கொள்ளும்போது அரசாங்கத்திற்கு உதவியாக பல யோசனைகளைக் கூறுவதற்கு நாம் கடமைப்பட்டிருக்கிறோம்.

விவசாயத்திற்கு வேண்டிய உரத்தைப் பற்றிச் சொல்லும்போது அமோனியம் சல்பேட்டை மாத்திரம் வைத்துக்கொண்டு இந்த மதிப்பீடு சொல்கிறார்களே தவிர கம்போஸ்டு உரத்தை அங்கங்கே பெருக்குவதற்கான நடவடிக்கைகள் பற்றி ஒன்றும் இல்லை. அவ்விஷயத்திலும் சிறிது கவனம் செலுத்தவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன். கம்போஸ்டு உரத்திற்கு அதிக முக்கியத்துவம் கொடுப்பதோடு இல்லாமல் கிராமங்களில் கம்போஸ்டு உரம் தயாரிப்பதற்கு அதிக ஆதரவு காட்டவேண்டுமென்பது என் வேண்டுகோள். இந்த விஷயத்தில் கிராமங்களில் கவனக் குறைவு காணப்படுகிறது. கிராமங்களில் 6½ அடி நீளம், 5¾ அடி ஆழம் என்று குழி தோண்டவேண்டுமானால் அவ்வாறு வெட்டுவதற்கு ஆகும் செலவை பஞ்சாயத்துகளினால் சமாளிக்க சக்தி இல்லை. யாரிடமோ சொன்னால், யாரோ வெட்டிவிடுவார்கள் என்பது இல்லை. இம்மாதிரி ஒழுங்காக ஆங்காங்கே கம்போஸ்டு

[திரு. ஏ. பி. ஸி. வீரபாகு] [2nd July 1962

உரம் தயாரிப்பதற்கு குழி தோண்டுவதற்கு ஆகும் செலவை ஈடு செய்ய அரசாங்கம் உதவ முன்வந்தால் கிராமங்களில் பரவலாக இத்திட்டத்தை நல்ல முறையில் செயலாற்ற முடியும் என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

இன்னொன்று, தென்னாற்க்காடு, தஞ்சாவூர் போன்ற மாவட்டங்களில் காட்டன் எக்ஸ்டென்ஷன் ஸ்கீம்படி நெல்சாகுபடிக்குப் பிறகு இடைக்கால் பயிராக பருத்தி சாகுபடி செய்யும் திட்டத்தை உருவாக்கப்போவதாகச் சொல்லியிருக்கிறார்கள். இதுமாதிரியாக அவர்கள் இது வரையில் ஏன் சாகுபடி செய்யவில்லை, இம்மாதிரி சாகுபடி செய்யவேண்டுமென்ற முயற்சி இருந்ததா இல்லையா என்பதை அரசாங்கம் அறியவேண்டும். இம்மாதிரி சாகுபடி செய்வது நில வளத்தைப் பாதிக்கும் என்று ஏதோ சாக்குச் சொல்லலாம். நான் அந்தப் போலி சாக்குகளைக் கேட்கவில்லை. தஞ்சாவூர் மாவட்டத்தைப் பொறுத்தவரையில் 11 லட்சம் ஏக்கரா சாகுபடி நிலத்தில் எட்டு லட்சம் ஏக்கரா ஒருபோக பூமியாகத்தான் இருக்கிறது. இதுவரையில் அவர்கள் ஏன் இந்த மாதிரி இடைக்காலப் பயிர் ஒன்றைச் செய்ய முன்வரவில்லை என்று பார்த்தால் நிலச்சுவாந்தார்களுக்கும், விவசாயிகளுக்கும் இடையிலுள்ள உறவு சுமுகமாக இல்லாததுதான் என்று நினைக்கிறேன். விவசாயிகள் பயிரிடுவதற்கு முன்வந்தாலும்கூட நிலச்சுவாந்தார்கள் அதற்கு அனுமதி அளிக்கவில்லை. அதுதான் காரணம் என்று நான் நினைக்கிறேன். அறுபது நாற்பது சட்டம் அமுலுக்கு வந்தும் இன்னும் எத்தனைபேர் நம் நாட்டில் அந்தச் சட்டத்தை அப்படியே ஒப்புக்கொண்டு அமுல் நடத்தத் தயாராக இருக்கிறார்கள் என்று பார்க்க வேண்டும். இன்னமும் இரண்டு போகம் விளைவிப்பதாக இருந்தால் நில வளம் குறையும், முதல் போகத்தின் அம்சம் குறைந்துவிடும் என்பதாக எல்லாம் சொல்லித் தடங்கல் விளைவித்திருக்கிறார்கள் என்று எண்ணுகிறேன். அந்த நிலைமையையும் மாற்றி இந்தத் திட்டம் வெற்றிகரமாக நடைபெற தக்க நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

11-00 a.m. சாயில் டெஸ்டிங் லாபரடரி இரண்டை ஏற்படுத்தப் போகிறோம் என்று அமைச்சர் அவர்கள் கூறியிருக்கிறார்கள். தமிழ் நாட்டில் சாயில் லாபரடரி செய்யும் முடிவை அனுசரித்து, நிலத்தில் என்னென்ன குறைவாக இருக்கிறது, அதற்குத் தக்கபடி என்ன உரம் போடவேண்டும் என்பதை எல்லாம் தெரிந்து கொள்ளக் கூடிய விவசாயிகள் எவ்வளவு பேர் இருக்கிறார்கள்? ஜப்பானில் மொபைல் சாயில் டெஸ்டிங் என்று ஏற்படுத்தி ஒரு சிறு கருவியை உபயோகப்படுத்தி மண் வளத்தை ஆராய்கிறார்கள். அந்த மாதிரி ஒரு சிறு கருவியை நம்முடைய நாட்டில் தாலுக்காவிற்கு ஒன்று வீதம் கொடுக்க ஏற்பாடு செய்தால் மண் வளத்தைப் பற்றிச் சரியானபடி பரிசீலனை செய்து ஆலோசனை கூற உதவியாக இருக்குமென்பதையும் கூறிக் கொள்ள விரும்புகிறேன். இது பொது விவாதமாக இருக்கும் காரணத்தால் விவசாயத்தைப் பற்றியே பேசிக்கொண்டிருந்தால் விவசாய மானியத்தில் பேசுவதாக ஆகிவிடுமென்ற காரணத்தால் இதோடு இந்த விஷயத்தை நிறுத்திக் கொள்ளுகிறேன்.

2nd July 1962] [திரு. ஏ. பி. ஸி. வீரபாகு]

'பிஷரிஸ்'-க்காக நைலான் நூலும், விசைப்படகும் மீனவர்களுக்குக் கொடுப்பதற்காக ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது என்று சொல்லியிருக்கிறார்கள். விசைப்படகுகளை மட்டும் வைத்துக் கொண்டு இந்த நாட்டு மீன் வளத்தைப் பெருக்கி விட முடியாது. 'இந்தியன் ஓஷனை'ப் பற்றி எல்லா நாடுகளும் சேர்ந்து ஒரு ஆராய்ச்சி நடத்துகிறார்கள். முக்கியமாக 'இந்தியன் ஓஷனில்' ஏராளமான அளவுக்கு மீன் வளம் இருக்கிறது. ஆழ்கடலில் இருக்கும் மீன் வளத்தை நாம் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். அதற்கு விசைப்படகுகளால் பயன் இல்லை. 10 ட்ராய்லருக்கு ஒரு பாக்டரி ஷிப் வைத்துக் கொண்டு ஜப்பான் முறைப்படி ஆழ் கடலில் மீன்பிடிப்பை மேற்கொண்டால்தான் நிச்சயமாக நாம் மீன் வளத்தைப் பெருக்க முடியும். இதை நீண்ட காலத் திட்டமாக வேண்டுமானாலும் வைத்துக் கொள்ளலாம். இதைச் சர்க்கார் துறையில் செய்ய முடியவில்லை என்றால் 'ப்ரைவேட் கார்பரேஷனில்' செய்யலாம். பம்பாயில் இதன் மூலம் சென்ற வருஷத்தில் மாத்திரம் இரண்டு மூன்று கோடி ரூபாய் அளவுக்கு லாபம் சம்பாதித்திருக்கிறார்கள். நம்முடைய தமிழ் நாட்டில் கடற்கரை ஓரப்பகுதி நிறைய இருப்பதால் இதனைச் சர்க்கார் ஏற்றுச் செய்யலாம். முடியாவிட்டால் தனியார் துறையில் செய்யலாம். அந்நியச் செலாவணி குறைவாக இருப்பதால் நைலானுக்கு முக்கியத்துவம் இல்லாமல் போனாலும் போகலாம். நைலான் நூலைக் கொடுக்க முடியாத நிலைமைக்குச் சர்க்கார் வந்தாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை. இதற்கு முன் ஜாக்கிரதையாக நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டும். நைலான் நூலை நாமே உற்பத்தி செய்வதற்கு வேண்டிய தொழிற்சாலையை ஏற்படுத்தவேண்டும்.

தேசியமயமாக்கினால் அரசாங்கத்தின் வருமானமானது தற்போது திட்டமிட்டிருக்கும் அளவை விட அதிகமாக இருக்கும் என்ற ஆலோசனையை முதல் முதலாகப் பேசிய எதிர்க்கட்சி நண்பர் கூறினார். தொழில்களை எல்லாம் தேசிய மயமாக்குவதன் மூலமாக வரிப் பளுவே இல்லாமல் நிர்வாகத்தை நடத்த முடியும். அம்மாதிரி பல தேசங்களில் நடைபெற்று வருகிறது. தேசிய மயமாக்கினால் அதன் மூலம் ஏராளமான லாபத்தை நாம் அடைய வேண்டும். அவ்வாறு லாபம் அடையவேண்டுமானால் அதிக அளவுக்கு விலைகளை நிர்ணயம் செய்ய வேண்டியிருக்கும். ஒரு பக்கம் விலைவாசிகளைக் குறைக்கச் சர்க்கார் நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டுமென்று சொல்லிவிட்டு இன்னொரு பக்கம் தேசிய மயமாக்க வேண்டுமென்று சொல்வது வளர்ந்து வரும் பொருளாதாரத்தை மேற்கொள்ளும் போது போதிக்க வேண்டிய பிரச்சனையாகும். தேசியமயமாக்குவதனால் ஒரு பெரிய விலைவாசி ஏற்றம் ஏற்படுவதைத் தவிர்க்க முடியாது. தனியார் துறைக்கு தொழில்களை ஒதுக்கிக் கொடுத்து விட்டால் அந்தத் தொழிலின் மூலம் கிடைக்கும் லாபம் பூராவும் தனியார் துறைக்கே கிடைக்கிறது என்ற அபிப்பிராயம் தவறானதாகும். சமீபத்தில் ஒரு விளம்பரத்தைப் பார்த்தேன். சினிமாக்காரர்களுக்கு எவ்வளவு வரி விதிக்கப்படுகிறது என்ற விவரத்தைக் காட்டும் விளம்பரம். வருவாயில் 15 சதவிகிதம்தான் அவர்களுக்குக் கிடைப்பதாகவும், 75 சதவிகிதம் தீர்வையாகப் போய்விடுகிறது என்றும் கூறியிருக்

கிறார்கள். ஆகவே, பெரும் லாபத்தை கட்டுப்படுத்த ஆலோசனை சொல்லும்போது, அதன் மூலம் சர்க்காருக்கு எவ்வளவு தூரம் வருவாய் கிடைக்கிறது என்பதை எண்ணிப் பார்த்துச் சொல்ல வேண்டும். நாம் எவ்வளவு வேகமாக தொழில் வளத்தில் முன்னேற வேண்டுமென்று ஆசைப்பட்டாலும், நம்முடைய லட்சியத்தை அடையவேண்டுமென்று முற்பட்டாலும் நாம் வெகு குறைவாக முன்னேறி இருப்பது தெரிகிறது. நம்முடைய அபிலாஷைகள் முழுதும் பூர்த்தி செய்யப்படவில்லை. ஏக்கத்தோடு இருக்கிறோம். பொதுத் துறையோ, தனியார் துறையோ, நாட்டிலே பெரிய தொழில் வளம் ஏற்பட்டால்தான் நாம் நினைக்கிற சோஷலிச சமுதாயத்தை நிறுவ முடியும். இந்தக் குறைபாடுகளையெல்லாம் யோசித்துப் பார்த்து தேசிய மயமாக்குவதன் குறைகளை எடுத்துக் கூறினால் நல்லது. அவ்வாறு இந்த இரண்டு கண்ணோட்டத்தோடு மீண்டும் அவர்கள் பரிசீலனை செய்து ஆலோசனை சொல்வார்களானால் நாமும் அது பற்றிப் பரிசீலிக்க வேண்டியது அவசியந்தான். நாம் பலவகைத் தொழில்களை நிறுவுவதற்கு முயற்சி எடுத்து வருகிறோம். ஆனால் அதற்கேற்ற அளவு தொழில்கள் ஏற்படவில்லை. ஒரு தொழிலை ஆரம்பிக்க லைசென்ஸ் கொடுத்தால் 7, 8 வருஷங்களுக்குக்கூட அதை ஆரம்பிக்காமல் இருக்கிறார்கள். திருச்சிராப்பள்ளியில் 'மூலாசிஸ் ஸ்பிரிட்' தயாரிப்பதற்கான தொழிற்சாலைக்கு லைசென்ஸ் வழங்கப்பட்டு இரண்டு வருஷம் ஆகிறது. ஸ்பிரிட் தயாரிப்பதற்காக முதலில் லைசென்ஸ் வழங்கப்பட்ட பிறகு அவர்கள் அதைத் தயாரிக்கும்போது மேலும் இரண்டு பொருள்களை அதன் மூலம் உற்பத்தி செய்வதற்கான ஆலோசனைகளில் ஈடுபடுகிறார்கள். முதலிலே ஸ்பிரிட் தயாரிப்பதற்காக ஆரம்பித்து, பிறகு இன்னொரு துணைப் பொருளை உண்டாக்கினால் தயாரிப்புச் செலவு குறையும் என்ற ஆலோசனையில் இறங்கி விடுவதால் தொழிலை ஆரம்பிப்பதில் தாமதம் ஏற்படுகிறது. ஆகவே, இந்த மாதிரி லைசென்ஸ் கொடுக்கும் போது ஒரு வருஷத்திற்குள்ளாகவோ, இரண்டு வருஷத்திற்குள்ளாகவோ தொழிலை ஆரம்பிக்காவிட்டால் வழங்கப்பட்ட லைசன்ஸ் ரத்து செய்யப்பட்டு விடுமென்று செய்வது நல்லது. இவ்வாறு செய்வதால் தொழில் வாய்ப்புகள் பெருக வழி ஏற்படும்.

அடுத்தபடியாக, கல்விக்காக ஒரு பெரும் தொகையை நம்முடைய அமைச்சரவர்கள் ஒதுக்கியிருக்கிறார்கள். 'வீதி தோறும் பல பல பள்ளிகள்' என்று பாரதி சொன்னான். பல பல ஆரம்பப் பள்ளிகளை நாம் ஏற்படுத்தி விட்டோம். 'ஊருக்கு ஓர் உயர்நிலைப் பள்ளி' என்ற விதத்தில் நம்முடைய கல்வியமைச்சர் அவர்கள் செயலாற்றி வருகிறார்கள். கல்விக்காக 25 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. அதில் மருத்துவக் கல்லூரி, அக்ரிகல்சுரல் கல்லூரி, வெடரினரி கல்லூரி சேர்க்கப்படவில்லை. தொழில் நுட்ப கல்வி சேர்க்கப்படவில்லை. இவற்றைச் சேர்த்துக் கொள்ளாமல் 25 கோடி ரூபாய் ஒதுக்கி இருப்பதை பார்க்கும்போது, கல்வியிலே ஆர்வமுள்ளவர்கள், இந்தத் தேசத்திலே அறியாமை இருளைப் போக்க வேண்டுமென்றால் கல்வியினால் தான் முடியும் என்ற நம்பிக்கையுள்ளவர்கள் நிச்சயமாகச் சந்தோஷப்படுவார்கள் என்பதை இந்தச் சந்தர்ப்பத்தில் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

2nd July 1962] [திரு. ஏ. பி. ஸி. வீரபாகு]

இந்த நேரத்தில் வரி விதிப்பு அத்தனையையும் நான் ஆதரித்தாலும் நில வரி விதித்திருப்பதை என்னுல் ஆதரிக்க முடியவில்லை. தண்ணீர் தீர்வையை அதிகரித்திருப்பதனுல் கிடைக்கக் கூடிய வருமானம் ஒரு கோடி ரூபாய். 'மார்ஜினல் அண்டு சப் மார்ஜினல் கல்டிவேட்டர்ஸ்' இந்த நாட்டில் ஏராளமாக இருக்கிருர்கள் என்பதை நாம் சிந்தித்துப் பார்க்கவேண்டும். இது அவர்களைப் பாதிக்கக்கூடிய வரியாகும். வசதி பெற்றவர்களுக்கு வரி போடுவது என்ருல், அக்ரிகல்சுரல் இன்கம்டாக்ஸை அதிகப்படுத்தலாம். ஆனுல் மார்ஜினல் அண்டு சப் மார்ஜினல் கல்டிவேட்டர்ஸ் என்று ஒத்துக் கொண்டு அவர்களுக்குப் பலவகை வசதிகளையும் செய்து கொண்டு நஞ்சையானுல் 100-க்கு 60 சதவிகிதமும், புஞ்சையானுல் 100-க்கு 100 சதவிகிதமும் வரியை உயர்த்தினுல் விவசாய உற்பத்தி தடைப்படும், விவசாயிகளுடைய உற்சாகத்திற்கு இடுக்கண் ஏற்படும் என்பதைத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். இந்தச் சந்தர்ப்பத்தில் நெல்லை ஜில்லாவில் இருக்கும்படியான அவல நிலையைச் சொல்ல விரும்புகிறேன்.

அதிலும் பெனல்ட்டி வேறு போடுகிருர்கள். ஒன்றுக்கு மூன்று தண்டத் தீர்வை போடுகிருர்கள். இப்போது இரண்டு மடங்கு தண்டத் தீர்வை இருக்கிறது, இனி போடமாட்டோம் என்று சொல்கிருர்கள். சென்ட் பெர்ஸன்ட்டானுல் புஞ்சை பாதிக்கப்படும். இப்போது 20-ல் இருந்து 40-ஆகி ஏக்கர் ஒன்றுக்கு 80 ரூபாய் தீர்வை வருகிறது. இது பொதுஜன எதிர்ப்பாக மாறினுலும் ஆச்சரியப்படுவதற்கில்லை. ஆகவே இதை நன்கு பரிசீலனை செய்யவேண்டுமென கேட்டுக் கொள்கிறேன். பெரிய நிலச்சுவாந்தாரர்களின் வருவாயை பயன்படுத்திக் கொள்ள விவசாய வருமான வரி மூலம் ஏற்பாடு செய்து கொள்ளலாம். இதை மந்திரி சபை பரிசீலனை செய்யவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். மாச்வுட்டை அதிகமாகப் பயிரிட காட்டு இலாக்கா அமைச்சர் அவர்களைக் கேட்டுக் கொள்கிறேன். ஸ்மால் ஸ்கேல் இண்டஸ்ட்ரீஸ் ஜாஸ்தியாகயிருக்கிறது. . . (குறுக்கீடு) காட்டு அமைச்சர் என்ருல் காட்டுக்குப் போகிற அமைச்சர் அல்ல. அந்த இலாகாவை வகிக்கும் அமைச்சர் அவர்களைச் சொல்கிறேன். தெள்ளத் தெளிவாகப் பேசினுல் பாயின்ட்ஸ்களைச் சொல்ல முடியவில்லை. மாச்வுட்டை அதிகமாக உற்பத்தி செய்வதற்கு வேண்டிய நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளவேண்டுமென்று அமைச்சர் அவர்களைக் கேட்டுக் கொண்டு இந்த ஜெனரல் டிபேட்டில் எனக்கு பேச வாய்ப்பளித்தமைக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

*** திரு. பி. முருகையன்:** தலைவர் அவர்களே, 1962-63-ம் ஆண்டு நிதிநிலை அறிக்கைமீது எனக்கு பேசுவதற்கு வாய்ப்பளித்தமைக்கு நான் எனது தொகுதி மக்கள் சார்பாக முதற்கண் எனது வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன். 1962-63-ம் ஆண்டு நிதிநிலை அறிக்கையை வரவேற்க முடியாத நிலை குறித்து வருந்துகிறேன். காரணம், புதுக்கோட்டைப் பகுதி மிகவும் பின்தங்கிய பகுதியாயிருப்பதால் அங்கு காவேரித் தண்ணீரைக் கொண்டு வருவதற்கு வேண்டிய திட்டத்தை மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்க்கப்படாமல் இருப்பது குறித்து நான் வருந்து

[திரு. பி. முருகையன்] [2nd July 1962

கிறேன். புதுக்கோட்டைப் பகுதிக்கு காவேரித் தண்ணீரைக் கொண்டு வருவதற்கு வேண்டிய வேலைகளை புதுக்கோட்டை மன்னர் காலத்திலேயே துவக்கப்பட்டு, தொண்டைமான் வாய்க் கால் என்ற ஒன்றை வெட்டி அது அப்பொழுதே வராதது குறித்து வேதனைப் பட்டுக்கொண்டிருக்கும்போது மூன்றாவது திட்டத்தில் அதற்கு வழிவகை செய்திருக்கிறார்களா என்று பார்க்கும்போது உள்ளபடியே நான் வருந்துகிறேன். புதுக்கோட்டையில் இரண்டு பெரிய காட்டாறுகள் ஓடிக்கொண்டிருக்கின்றன. வெள்ளாறு, அக்னி ஆறு. அக்னி ஆறு ஆலங்குடி வட்டத்திலுள்ளது. அணை கட்டினால் கரம்பக்குடி, மழையூர் பிர்க்கா விவசாயிகளுக்கு நன்கு பயன்படுகிறது. அங்குள்ள பிச்சனேயை பலமானதொரு அணை யாக ஆக்கித் தந்தால் அங்கு விவசாயம் செழிக்க உதவியாயிருக் கும். ஆலங்குடிப் பகுதியிலும், தஞ்சை மாவட்டத்திலுள்ள பட்டுக்கோட்டையிலும் வேர்கடலை அதிகமாக விளைகிறது. இதைச் சேர்த்து, ஆலங்குடி பகுதியில் ஒரு மார்கட்டிங் சொஸைட்டியை ஏற்படுத்தி, அங்கு வேர்கடலையைச் சேகரிக்க ஒரு சொஸைட்டியை யும் ஏற்படுத்தித் தரவேண்டுமென்று இந்த மன்றத்தின் சார்பாக அமைச்சர் அவையைக் கேட்டுக்கொள்கிறேன். பின்னர், ஆலங் குடிக்கு அருகாமையில் சில குளங்கள் இருக்கின்றன. அங்கு இது வரையிலே எந்தவித மராமத்தும் செய்யப்படவில்லை. ஆகவே அதற்கு வேண்டிய ஏற்பாடுகளை மராமத்து இலாகா அமைச்சர் அவர்கள் செய்து தரவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அடுத்து, தேர்தல் காலத்தில் அமைச்சர்கள் அங்கு பேசுகிற நேரத்தில், எங்களுக்கு வாக்களிப்பீர்களானால் உள்ளபடியே காவேரித் தண்ணீரைக் கொண்டு வருகிறோம், அது முடியவில்லை யென்றால் குழாய் மூலம் புதுக்கோட்டைப் பகுதிக்கு தண்ணீர் கொண்டு வருகிறோம் என்று சொன்னதை நிறைவேற்றுவார்களா என்று கேட்க விரும்புகிறேன். புதுக்கோட்டைப் பகுதியில் காட்டு வளம் அதிகமாக இருக்கிறது. அந்த காடுகளால் எந்தவிதமான நன்மையும் அரசாங்கத்திற்கு இல்லை என்பதை எடுத்துச் சொல்ல விரும்புகிறேன். அந்தக் காட்டை அழித்து அங்கு முந்திரி பயிரிட வேண்டிய நடவடிக்கை எடுத்துக் கொள்ளவேண்டுமென்று இந்த மன்றத்தின் சார்பாக கேட்டுக்கொள்கிறேன். அதற்கு வேண்டிய வசதிகள் அங்கு இருக்கிறது.

பின்னர், எங்கள் பகுதியில் கரம்பக்குடி, ஆலங்குடியில் வேலை பார்க்கும் உயர்நிலைப் பள்ளி ஆசிரியர்களுக்கு மூன்று மாத கால மாக சம்பளம் கொடுக்கப்படாதது குறித்து ஆசிரியர்கள் வருந்து கிறார்கள். ஆகவே, அமைச்சர் அவர்கள் உடனடியாக நடவடிக்கை கள் எடுத்து ஆசிரியர்களுக்கு ஒரு குறித்த காலத்திற்குள்ளாக சம்பளம் வழங்கப்படவேண்டுமென்று உத்தரவு பிறப்பிக்க வேண்டு மென்று அமைச்சர் அவர்களைக் கேட்டுக் கொள்கிறேன். அடுத்து, பஞ்சாயத்து ஆட்சி முறை சிறப்பான முறையில் நடந்து வருகிறது என்று ஆண்டு நிதிநிலை அறிக்கையில் தெரிவித்திருக்கிறார்கள். இதில், ஆணையர் அவருக்கு பிடித்தமான ஆட்களை வேலையில் அமர்த்திக் கொள்கிறார்கள். தங்களுக்கு பிடிக்காத ஆட்களை நீங்கள் உதயசூரியனுக்கு ஓட்டு போட்டீர்கள், ஆகவே உங்களுக்கு

2nd July 1962] [திரு. பி. முருகையன்]

வேலையில்லை என்று கரம்பக்குடி ஆணையர் சுட்டிக் காட்டுவது குறித்து உள்ளபடியே வேதனைப்படுகிறோம். ஜனநாயக முறைப் படி ஆணையர் நேர்மையாக ஆட்சி நடத்தவேண்டுமேயல்லாது ஒரு தலைப்பட்சமாக அவர்கள் ஆட்சி நடத்துவது எங்களுக்கு வேதனை அளிக்கிறது. இது குறித்து அமைச்சர் அவர்கள் வேண்டிய நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். அடுத்தபடியாக பின்தங்கிய வகுப்பினருக்கு 3.56 லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. அது போதாது. அதிகப் படியான தொகை அவர்களுக்கு ஒதுக்கப்படவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். அடுத்து, புதுக்கோட்டைப் பகுதியில் அன்னவாசல், கரம்பக்குடி உயர்நிலைப்பள்ளியில் மாணவர்கள் படிக்க விடுதி வசதியற்று இருப்பதால், அங்கு மாணவர் விடுதி அமைத்துத்தர வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். புதுக் கோட்டையில் ஒரு தொழில் நிறுவ நிதி ஒதுக்கியிருப்பது குறித்து மகிழ்ச்சியடைகிறேன். அங்கு கல்லூரியில் தங்கிப் படிக்க மாணவர் விடுதி ஒன்று அமைக்க ஒரு லட்சம் ரூபாய் ஒதுக்கியிருப்பது கண்டு மகிழ்கிறேன். புதுக்கோட்டைப் பகுதிக்கு காவேரித் தண்ணீரைக் கொண்டு வரவும், அது முடியாதென்றால் சிறிய நீர்ப் பாசனத் திட்டத்தின் கீழ் சிறு கிணறுகள் வெட்டி, அல்லது அமைச்சர் அவர்கள் கூறியபடி குழாய்த் திட்டத்தையாவது நிறைவேற்ற வேண்டுமென்று கேட்டுக் கொண்டு என் உரையை முடித்துக் கொள்கிறேன்.

* **திரு. நா. மகாலிங்கம்:** கனம் சபா நாயகர் அவர்களே, 1962-63-ம் ஆண்டு பட்ஜெட் அறிக்கையை ஆதரிக்கும் முறையில் சில வார்த்தைகள் கூறுவதற்கு முன்பாக, இன்றையதினம் நமது தேசத்தின் இரண்டு மாபெரும் தலைவர்கள் உயிர்நீத்தது குறித்து அவர்களுக்கு அஞ்சலி செலுத்த விரும்புகிறேன். மேற்கு வங்கத்தில், தேசம் சுதந்திரம் அடைந்த பிறகு, பிரிவினை ஏற்பட்ட காலத்திலிருந்து இதுவரை அந்த மாநிலத்தின் நிர்வாகப் பொறுப்பை சிறப்பாக நிறைவேற்றியவரும் சுதந்திரப் போராட்ட காலத்தில் மிகச் சிறந்த பணி புரிந்தவருமான டாக்டர் பி. ஸி. ராய் அவர்கள் நேற்றையதினம் மரணம் அடைந்திருக்கிறார்கள். உத்தரப் பிரதேசத்தில் சுதந்திரப் போராட்ட காலத்தில் சிறந்த பணி புரிந்தவரும் இந்திய தேசிய காங்கிரஸின் சிறந்த தலைவராக இருந்தவருமான பாபு புருஷோத்தம்தாஸ் டாண்டன் அவர்களும் மறைந்து விட்டார்கள். அவர்களது மறைவு நமது தேசத்திற்கு ஒரு பெரிய நஷ்டம் என்பதில் ஐயமில்லை. அப்பெரியார்களின் ஆவி அமைதி பெற இறைவனை இறைஞ்சி, மேற்கொண்டு எனது வார்த்தைகளை சொல்ல விரும்புகிறேன்.

இந்த வருத்தமான சூழ்நிலையில், நமது மாநிலத்தில் வருத்த மான சூழ்நிலை என்னவென்றால் மின்சார வெட்டு அதிகமாகி யிருக்கும் நிலை, மழை பெய்யவில்லை. பருவ மழை பெய்யாத காரணத்தினால் மின்சார வெட்டு 66% என்றிருப்பது இன்னும் மேலே உயருமோ என்று அஞ்ச வேண்டிய நிலை இருப்பது கண்டு வருத்தமடைகிறோம். இந்த நிலை மாற வேண்டுமென்று சொன்னால்

[திரு. நா. மகாலிங்கம்] [2nd July 1962

மனிதன் யுக்தியால் ஒன்றும் முடியாது. அனைவரும் இறைவனைப் பிரார்த்தித்து பருவ மழை வெகு சீக்கிரமாக வரவேண்டுமென்று விரும்புவது தவிர வேறு ஒரு வழியும் இல்லை. இந்த மன்றத்தில் உள்ளவர்கள் மட்டுமல்ல, மாநிலத்தில் இருக்கக்கூடிய எல்லோருமே இறைவனைப் பிரார்த்தித்து அவரது கருணை காரணமாக சீக்கிரம் பருவ மழை பெய்து மின்சார வெட்டு நீங்க வேண்டுமென்று விரும்புகிறேன்.

மின்சார இலாகாவானது நம்முடைய மாநிலத்தில் துவக்கப் பட்ட தொழில்களுக்கு வேண்டிய மின்சாரத்தை கொடுத்து வந்திருக்கிறது. பக்கத்தில் இருக்கின்ற மாநிலங்களில் எல்லாம் தொழிற்சாலைகளுக்கு மின்சாரம் இல்லை என்று கஷ்டப்படுகிற நிலைமையில் நம்முடைய மாநிலத்தில் எல்லாத் தொழில்துறை களுக்கும் மின்சாரம் கொடுத்துக்கொண்டிருந்தார்கள், என்பதைப் பார்க்கும்பொழுது மின்சாரத் துறைத் தலைவர் அவர்களை பாராட்டத்தான் வேண்டும். மின்சார போர்டு இன்சினியராக இருந்தவரை இப்போது போர்டின் தலைவராக நியமித்திருப்பது, அவர்கள் செய்திருக்கக்கூடிய வேலையை பாராட்டுவதாக அமைந் திருக்கிறது. அதற்காக நான் சர்க்காரையும் பாராட்ட விரும்புகிறேன். நம்முடைய மாநிலத்தைப் பொறுத்தவரை இன்னும் நாம் மின்சாரம் உற்பத்தி செய்தாக வேண்டியிருக்கிறது. அதற்கான முறையில் ஹோகனேக்கல் என்ற இடத்தில் ஓர் அணையைக்கட்டி அதன் மூலமாக சுமார் 7 அல்லது 8 கிலோவாட்ஸ் மின்சாரம் உற்பத்தி செய்ய முடியும் என்று சொல்லப்பட்டிருக் கிறது. அதற்கான நடவடிக்கைகளை உடனடியாக எடுத்துக் கொள்ளவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அதோடு நம்முடைய மாநிலத்தில் இன்னும் அதிகமாக தெர்மல் பவர் மின்சாரத்தை உற்பத்திச்செய்ய முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டும். பருவ மழை பெய்யாத காலத்தில் மின்சார வெட்டு கொண்டு வரவேண்டியதாக இருக்கிறது. ஆகவே 40 அல்லது 50 சதமானம் மொத்தத்தில் தெர்மல் பவராக இருப்பதற்கு வேண்டிய நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். அதோடு கேரளாவில் மின்சார உற்பத்திக்காக ஐந்தாண்டுத் திட்டத்தில் பெரிய திட்டங்கள் ஒன்றும் போட்டிருப் பதாக தெரியவில்லை. ஆகவே அந்த அரசாங்கத்தோடு பேச்சு வார்த்தை நடத்தி, இன்னும் அதிகமான அளவில் மின்சார உற்பத்தி செய்வதற்காக நடவடிக்கை எடுக்கவேண்டும். இதற்காக அந்த மாநில அரசாங்கத்தோடு பேச்சுவார்த்தை நடத்துவதற்கு முன்னால் மத்திய அரசாங்கத்தோடு பேச்சு வார்த்தை நடத்தி மின்சார உற்பத்தி இன்னும் பத்து ஆண்டு காலத்திற்குள் எந்தவிதமான குறைவும் இல்லாமல் கிடைக்கின்ற வகையில் ஒரு நீண்டகாலத்திட்டம் வகுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, விவசாய இலாகாவிலிருந்து விவசாயி களுக்காக புல்டோஸர்களும், டிராக்டர்களும் அமெரிக்கா, ரஷ்யா போன்ற இடங்களிலிருந்து வரவழைத்துக்கொடுப்பதற்காக திட்ட மிடப்பட்டிருக்கிறது. ஏற்கனவே வாங்கப்பட்ட இயந்திரங்கள்

2nd July 1962] [திரு. நா. மகாலிங்கம்]

பல 'ஸ்பேர் பார்ட்ஸ்' இல்லாமல் எந்தவிதமான வேலையும் இல்லாமல் நிற்கின்றன. அவைகளை ரிப்பேர் செய்வதற்கு ஸ்தலத்திலுள்ள அதிகாரிகளுக்கு அதிகாரம் இல்லை. மார்க்கட்டில் போய் வாங்கிப் போடலாம் என்று சொன்னால் அந்தந்த இடங்களிலுள்ள அதிகாரிகளுக்கு அதிகாரம் இல்லை என்று சொல்லி, அதற்காக ஒவ்வொரு சமயத்திலும் விவசாய இலாகா டயரக்டர் அவர்களுக்கு எழுதுகிறார்கள். இது மிகவும் வருந்தத்தக்க விஷயம். இந்த நிலைமையை ஓரளவு மாற்றி விவசாய இலாகாவிலுள்ள எல்லா இயந்திரங்களும் நல்ல முறையில் வருஷம் முழுதும் வேலை செய்யக்கூடிய முறையில் இருப்பதற்கு வேண்டிய நடவடிக்கை எடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

இப்போது கொண்டுவரப்பட்டிருக்கும் புதிய பட்ஜெட் அறிக்கையில் பல ஜில்லாக்களிலும் புதிய நீர்ப்பாசனத்திட்டங்கள் வேலைக்கு எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கின்றன என்றிருப்பது மிகவும் மகிழ்ச்சிக்குரிய விஷயமாகும். ஆனால் இந்தச் செய்தியானது இந்த சபைக்குத்தான் முதன்முதலாக தெரிய வேண்டும். ஆனால் இந்த சபையில் பட்ஜெட் சமர்ப்பிக்கப்படுவதற்கு முன்பே 3 நாட்களுக்கு முன்னால் பத்திரிகையில் இந்தச் செய்தி வெளிவந்திருக்கிறது. சட்டசபைக்கு வருவதற்கு முன்னால் இவ்வாறு பத்திரிகையில் இந்தச் செய்தி வந்தது என்பது ஆச்சரியத்தைக் கொடுக்கின்றது. இதுபற்றி அமைச்சர் அவர்கள் பரிசீலனை செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

கோவை ஜில்லாவைப் பொறுத்தவரையில், அவனாசி, ஈரோடு போன்ற இடங்களில் மழை இல்லாமல் அங்குள்ள மக்கள் மிகவும் கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கிறார்கள். அவர்களுடைய கஷ்டங்களை நிவர்த்தி செய்கின்ற முறையில் மேல் பவானித் திட்டம் ஒன்றை கொண்டுவரவேண்டும் என்று கேட்டுக்கொண்டிருந்தோம். ஆனால் அதைப்பற்றி இதில் ஒன்றும் சொல்லப்படவில்லை. ஆகவே இந்தத் திட்டத்தை விட்டுவிடாமல், கண்டிப்பாக மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்த்துக்கொள்ள முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

பரம்பிக்குளம்—ஆளியாறு திட்ட வேலை வேகமாக நல்ல முறையில் நடந்து வருகிறது. இந்தத் திட்டத்தை உருவாக்கிய பிரதம இன்ஜினியர் அவர்களுக்கு மீண்டும் பதவியை நீடித்துக்கொடுத்ததற்காக பொள்ளாச்சி பகுதி மக்கள் சார்பாக அரசாங்கத்திற்கு என் பாராட்டுதலை தெரிவித்துக்கொள்கிறேன். பரம்பிக்குளத் திட்டத்தை யொட்டி, ஆனமலையாறு என்ற நதி நம்முடைய ராஜ்யத்தினுடைய எல்லைக்கும் கேரள நாட்டின் எல்லைக்கும் மத்தியில் இருக்கிறது. இந்த நதியில் நமக்கு உரிமை இருக்கிறது. இதையும் பயன்படுத்திக்கொள்ள நாம் முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டும். இதற்கு இன்னும் கேரள அரசாங்கம் இணங்க முன்வரவில்லை. ஆகவே இதைப்பற்றி மத்திய சர்க்காரோடு கலந்து பேசி இந்தத்திட்டத்தை நிறைவேற்றினால் நமக்கு அதிகமான அளவு மின்சாரம் கிடைப்பதற்கு வாய்ப்பும் ஏற்படும். ஆகவே இந்த முயற்சியை உடன்டியாக எடுத்துக்கொள்ளவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

[திரு. நா. மகாலிங்கம்] [2nd July 1962

நம்முடைய மாநிலத்தில் கால் நடை அபிவிருத்திக்காக மிகுந்த முயற்சி எடுத்துக்கொண்டிருக்கிறார்கள். பல்வேறு இடங்களில் இதற்காக வேண்டிய நடவடிக்கைகள் எடுக்கப்போவதாகவும் பட்ஜெட் உரையில் சொல்லப்பட்டிருக்கிறது. இதில் முக்கியமாக வால்பாறை பிராந்தியத்தில்தான் சிந்தி வகுப்பு கால்நடைகளுக்கு ஏற்ற இடமாக அமைந்திருக்கிறது. இந்தியாவில் வேறு எந்த இடத்திலும் இந்த இனம் அபிவிருத்தி அடைந்திருப்பதாகத் தெரியவில்லை. ஆகவே சிந்தி இனத்தை பெருக்குவதில் நாம் ஐந்தாண்டுத் திட்டத்தில் முயற்சி எடுத்துக் கொள்ளவேண்டும். ஆனால் வால்பாறை கீழ் பகுதியிலிருந்து மேல் பகுதிக்கு இறைச்சியாக உபயோகிப்பதற்காக வேறு இன கால்நடைகளை கொண்டு போகிறார்கள். இதன் காரணமாக சிந்தி வகுப்பானது மேல் பகுதியில் நல்ல முறையில் அபிவிருத்தி ஏற்பட முடிவதில்லை. ஆகவே வால்பாறையின் அடிவாரத்திலேயே இறைச்சி அடிப்பதற்கு வசதியாக ஒரு தொழிற்சாலையை அமைத்து, இறைச்சியை தான் மேலே கொண்டு போக வேண்டும், மாடுகளை கொண்டு போகக்கூடாது என்கின்ற ஒரு முறையை கொண்டு வரவேண்டும். இல்லாவிட்டால் வேறு இனங்களிலுள்ள மாடுகள் மேலே போய் நல்ல இனத்திலுள்ள சிந்தி மாடுகள் அபிவிருத்தி அடையாமல் போய்விடக்கூடிய நிலைமை ஏற்படும். இதைப்பற்றி இந்த இலாகா அதிகாரிகளுக்கும் எழுதியிருக்கிறேன். ஆகவே இதைப் பற்றி பரிசீலனை செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

நம்முடைய மாநிலத்தில் சென்ற ஐந்தாறு வருஷத்திற்குள் தொழில் அபிவிருத்தியில் நல்ல முன்னேற்றத்தை நாம் அடைந்திருக்கிறோம். தொழில் அமைச்சர் அவர்களும் அந்த இலாகா அதிகாரிகளும் நல்லமுறையில் இதற்காக பணிபுரிந்திருக்கிறார்கள். மத்திய சர்க்கார் தகுந்த நேரங்களில் எல்லாம் தக்க நடவடிக்கை எடுத்து தொழில் துறையில் நல்ல முன்னேற்றத்தை ஏற்படுத்தியிருக்கிறார்கள். தனியார் துறையிலும் நல்ல முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது. இதற்கெல்லாம் காரணம், அரசாங்கம் கொடுத்த ஒத்துழைப்புதான் என்பதை தெரிவித்துக்கொள்கிறேன். தொழில்கள் நல்ல முறையில் சிறப்பாக நடக்கவேண்டும் என்றால் மின்சாரம் போதிய அளவுக்கு கிடைக்கவேண்டும். அதற்காக நான் முன்பு சொன்னது போல், கேரளம், மைசூர் போன்ற ராஜ்யங்களோடு பேசி இன்னும் பல திட்டங்களை நிறைவேற்றினால் இன்னும் அதிகமான அளவில் மின்சாரத்தை உற்பத்தி செய்ய முடியும் என்பதை தெரிவித்துக்கொள்கிறேன்.

இதுவரை ஏற்பட்டுவந்த தொழில்களில், மருந்துக்களை உற்பத்தி செய்கின்ற தொழிலை நாம் இதுவரை பெரிய அளவில் எந்த இடத்திலும் ஆரம்பிக்கவில்லை. ஆகவே உடனடியாக ஒரு ரசாயனத் தொழிற்சாலை ஆரம்பிக்கவேண்டும். அதற்கான முயற்சிகள் எடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அதோடு இந்தத் தொழிற்சாலை ஆரம்பிக்கவேண்டும் என்றால் சுத்தமான தண்ணீர் தேவை. சென்னையைப் பொறுத்தவரை குடிதண்ணீர் கிடைப்பது கஷ்டமாக இருக்கிறது. ஆகவே இந்தக் கஷ்டத்திற்கு நிவாரணம் அளிக்கின்ற முறையிலும், ரசாயனத்

2nd July 1962] [திரு. நா. மகாலிங்கம்]

தொழிற்சாலே ஏற்படுத்துவதற்கு உதவுகின்ற முறையிலும் காவேரி நதியிலிருந்து அல்லது கிருஷ்ணு நதியிலிருந்து தண்ணீர் கொண்டு வருவதற்கு அரசாங்கம் நடவடிக்கை எடுக்கவேண்டும் என்று 11-30 a.m. கேட்டுக்கொள்கிறேன். இப்போது தொழில்கள் சிறப்பாக நடக்க பல என்சினியரிங் கல்லூரிகளும், பாலிடெக்னிக்குகளும் அமைந்திருக்கின்றன. இப்போது அதற்காக தனியாக ஒரு டைரக்டர் அதாவது 'டைரக்டர் ஆப் டெக்னிகல் எஜுகேஷன்' நியமித்து இருப்பது பாராட்டத் தகுந்தது. இப்படி தனியாக ஒரு துறை ஏற்படுத்தி இருப்பது, நமது ராஜ்யத்திலே மேலும் தொழில் நுட்ப வசதி பரவலாக, சிறப்பாக அமைவதற்கு வசதியாக இருக்கும். இதோடு, நமது நாஜ்யத்தில் சுரங்க சம்பந்தமாக, மெட்டலர்ஜி—இரும்பு, இதர உலோகங்கள் சம்பந்தமான கல்வியையும் அபிவிருத்தி செய்ய வேண்டியது அவசியம். இப்போது இவைகள் நம் ராஜ்யத்தில் இல்லே. அந்தக் கல்வித் துறைகளே அபிவிருத்தி செய்யவேண்டியதற்கு முயற்சி எடுத்துக் கொள்ளவேண்டும். என்சினியரிங் கல்லூரி சம்பந்தமாக, கல்லூரி யில் இடம்பெற வேண்டுமென்று சொன்னல், அதற்கு நிறைய தேவை இருக்கிறது. இன்றையதினம் 800 ஸ்தாபனங்கள் இருக்கின்றன. மூவாயிரம் மாணவர்கள் அதற்கு விண்ணப்பிக் கிருர்கள். இப்போது குறைந்தபட்சம் 'ஏ', 'பி', மார்க்குகள் தகுதி பெற்றவர்கள்தான் விண்ணப்பிக்கலாம் என்று குறிப்பிட் டிருக்கிருர்கள். சாதாரணமாக பி.யு.சி. பாஸ் செய்தவர்கள் எல்லோரும் விண்ணப்பிக்க முடியாது. அதைவிட இன்னும் உயர்தர அதாவது இரண்டு 'ஏ' தகுதி பெற்றவர்கள்தான் என்சினியரிங் கல்லூரிக்கு விண்ணப்பிக்கலாம் என்று நாம் சொன்னல், இந்த மாணவர்கள் விண்ணப்பிக்கும் தொகை ஓரளவு குறையும். கல்லூரிகளில் சேர்த்துக்கொள்ளப்பட்ட என்சினியரிங் மாணவர்களும் தவருமல் ஒவ்வொரு ஆண்டும் தேர்ச்சி பெற்று, அதன் காரணமாக தகுதியுள்ளவர்கள் நிறைய வருவதற்கு ஒரு சந்தர்ப்பம் ஏற்படும் என்பதை நான் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

இப்போது ராஜ்யத்திலே எல்லாத் துறைகளும் சிறப்பாக முன்னேறிக்கொண்டு வருகின்றன. அப்படி இருக்கும்போது, இன்னும் பிற்போக்கு இனத்திற்காக என்று சில ஸ்தானங்கள் ஒதுக்கிக் கொண்டிருக்கிருேம். அதற்காக பணம் வேறு ஒதுக்கு கிருர்கள். இன்னும் சமுதாயத்தில் முற்போக்கு, பிற்போக்கு என்று சொல்லப்பட்டு வருகிறது. தேசத்தில் ஏழ்மை காரணமாக கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிருர்கள். அதன் காரணமாக படிக்க முடியாமல் இருக்கிருர்கள். சிலர் தங்களுடைய பெற்ருேர்கள், தங்களுடைய குடும்பத்தின் தொழில் காரணமாக கிராமப் புறங்களில் கல்வி வசதி பெற முடியாமல் இருக்கிருர்கள். ஆக இந்த மாதிரியாக தொழில் காரணமாக, இந்த முற்போக்கு, பிற்போக்கு நிலேமையை மாற்றியமைக்கும் கொள்கையை பரி சீலித்துக் கொண்டிருப்பதாகச் சொல்லப்பட்டது. அந்தப் பரி சீலனே இன்னும் எந்த நிலேமையில் உள்ளது என்று தெரியவில்லே. ஒரு சோஷலிச சமுதாய நாட்டிலே, இந்த ஜாதி மனப்பான்மை யில் எவ்வளவு நாட்களுக்கு அரசாங்கம் நடக்கிறதோ, ஜாதி,

[திரு. நா. மகாலிங்கம்] [2nd July 1962

அடிப்படையில் உத்தியோகங்கள் தரப்படுகிறதோ அதுவரை யிலும் இந்த ஜாதி என்பது இந்த நாட்டிலே மறையாது என்பதை நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். நன்கு படித்து திறமை உள்ளவர்கள் வருவதற்கான முயற்சிகளையும் நடவடிக்கைகளையும் சர்க்கார் சீக்கிரமாக எடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அப்போதுதான் இந்த மாகாணத்திலே—ஏன், நாட்டிலேயே—ஜாதி மனப்பான்மை குறையும். அவசியமானால், சட்டசபையிலே ஒரு குழுவை அமைத்து, எந்தவிதமாக இன்றையதினம் இப்படி இருக்கக்கூடியதை மாற்றியமைக்க முடியும் என்று பரிசீலிக்க வேண்டுமென்று நான் அரசாங்கத்தை கேட்டுக் கொள்ள விரும்பு கிறேன்.

கல்வித் துறையிலே 25 கோடி ரூபாய் செலவு செய்கிறோம். ஆரம்ப கல்விக்காக மட்டும் 13 கோடி ரூபாய் செலவு செய்கிறோம். பல உயர்தரக்கல்வி, கல்லூரி இதுபோன்ற பல்வேறு துறைகளில் நாம் செலவிடக்கூடிய பணம், அதிகமாக இருந்துகொண்டிருக் கிறது. இவை அனைத்தையும் கவனித்துக் கொள்வதற்கு கல்வி இலாகாவிலே இன்றையத்தினம் ஒரே ஒரு டைரக்டரை தான் வைத்திருக்கிறோம். மின்சார இலாகாவிலும் சரி, பி.டபிள்யூ.டி. இலாகாவிலும் சரி, ரூ. 5 கோடி, ரூ. 6 கோடி வரை செலவு செய் வதற்கு ஒரு பிரதம என்ஜினியர் இருக்கிறார். அதற்கு மேற் கொண்டு செலவு செய்வதாக இருந்தால், அவைகளை நல்லமுறை யிலே செலவிடுவதற்காக வேறு அதிகாரிகள் நியமிக்கப்பட்டிருக் கிறார்கள். ஆக, இந்தமாதிரி இருக்கும் போது கல்வி இலாகாவிலே ஒரே ஒரு பிரதம டைரக்டர் இருந்து இந்த இலாகாவின் நடவடிக்கைகள் பூராவையும் சரியான முறையில் கவனிக்க முடியும் என்று அரசாங்கம் எண்ணுவது சரியானதா என்று கேட்க விரும்புகிறேன். இந்த இலாகாவிலே முன்பு ஒரு டிபுடி டைரக்டர் இருந்தார். இப்போது நான்கைந்து டிபுடி டைரக் டர்கள் இருக்கிறார்கள். இப்படி பல டிபுடி டைரக்டர்களை வைத்துக்கொண்டு, பரிபாலிப்பதானது பொருத்தமாக இல்லை. அதிகமான அதிகாரம் உள்ள டைரக்டர் நிலையிலே உத்தியோகஸ் தர்கள் நியமிக்கப்பட்டு, நல்லமுறையிலே நம்முடைய கல்வி இலாகா நிர்வாகமும், அந்த இலாகாவிலே ஏற்படும் செலவினங் களும் பரிசிலனை செய்யப்படவேண்டுமென்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். கனம் கல்வி அமைச்சர் அவர்கள்கூட இது சம்பந்தமாக யோசித்துக் கொண்டிருப்பதாகச் சொல்லப்பட்டது. ஜூன் மாதத்திலேயே அதற்கான நடவடிக்கை எடுக்கப்படும் என்று சொல்லப்பட்டது. ஆனால் இன்னும் எடுக்கப்படவில்லை. ஆகவே, அது சம்பந்தமாகவும் நடவடிக்கை எடுக்க வேண்டு மென்று கேட்டுக்கொள்கிறேன்.

(கனம் உதவி சபாநாயகர் தலைமை)

இது தவிர, வைத்திய சம்பந்தமாக இப்போது சென்னையிலே யும் சரி, வெளியிலேயும் சரி சர்க்கார் ஆஸ்பத்திரிகளிலே இருக்கக் கூடிய சர்க்கார் டாக்டர்கள் தனிப்பட்ட முறையிலே பிராக்டிஸ் செய்வதற்கு அனுமதிக்கப்படுகிறார்கள். அதன் காரணமாக

2nd July 1962] [திரு. நா. மகாலிங்கம்]

ஏற்படும் நிலைமை என்னவென்றால், டாக்டர்களுடைய வீட்டிற்குச் சென்று தனிப்பட்ட முறையிலே பீஸ் கொடுத்தால் தான் ஆஸ்பத்திரியில் இடம் கிடைக்கிறது. மற்றவர்களுக்கு இடம் கிடைப்பதில்லை. இதிலே பெரிய கஷ்டம் ஏற்படுகிறது. சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் சம்பளம் வாங்குகிறார்கள். இன்னும் வேண்டுமானால், அதிகமாக சம்பளம் கொடுக்கலாம். ஆனால் அவர்கள் தனிப்பட்ட முறையிலே பிராக்டிஸ் செய்யக்கூடாது என்று சர்க்கார் உத்திரவு போட வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இது தவிர, ஆனரரி டாக்டர்கள் என்று வேறு வைத்துக் கொண்டிருக்கிறார்கள். இந்த முறையானது மக்களுக்கு வசதியாக இல்லை. அந்தமாதிரியாக உள்ள ஆனரரி டாக்டர்கள் காலா காலத்திற்கு ஆஸ்பத்திரிக்குப் போகிறார்கள் என்று சொல்வதற்கில்லை. அவர்கள் ஆனரரியாக வைத்தியம் செய்கிறார்கள் என்று சொல்வது அந்த அளவில்தான் இருக்கிறது. அந்த மாதிரியான நிலைமை சமூகத்திற்கு ஏற்றதல்ல. ஆகவே, இதிலே தீவிரமாக அக்கறை எடுத்துக்கொண்டு, இந்த முறையை மாற்றியமைப்பதில் கவனம் செலுத்தி, மக்கள் எல்லோருக்கும் நல்ல முறையிலே வைத்திய வசதி சவுகரியமாக, சிரமம் இல்லாமல் கிடைப்பதற்கு வழி செய்யவேண்டும். வேண்டுமானால் மக்களிடத்திலே இருந்து ஓரளவு பணம் வாங்கிக் கொள்ளட்டும், ஆட்சேபனை இல்லை. வசதி உள்ளவர்கள் பணம் கொடுக்கலாம். ஆகவே, இதையெல்லாம் பரிசீலனை செய்து ஆவன செய்யவேண்டுமென்று கேட்டுக்கொண்டு, என்னுடைய வார்த்தைகளை முடித்துக்கொள்கிறேன்.

* **திரு. அ. பெ. தர்மலிங்கம்:** மதிப்பிற்குரிய சட்டமன்றத் துணைத் தலைவர் அவர்களே, இந்த நிதி நிலை அறிக்கை விவாதத்தின் பேரிலே பேச வந்த கனம் அங்கத்தினர் மாதா கவுடர் அவர்கள் நாங்கள் எல்லாம் மண்வெட்டி மேழி பிடிக்காதவர்கள் போலவும், அவர்கள்தான் பரம்பரையாக இதிலே ஈடுபட்டிருப்பது போலவும் பேசினார்கள். நான் தங்கள் மூலமாக அவர்களுக்குச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். மேழி பிடித்து, காப்பு காய்த்த கைகள் தான் எங்கள் கைகளும், கனம் அங்கத்தினர் வேண்டுமானால் பார்த்துக் கொள்ளலாம் (என்று கையைக்காட்டினார்) என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். கடந்த 30-ஆம் தேதி கோட்டை முன்பு திராவிட முன்னேற்றக் கழகத்தினர் நடத்திய பேரணியைப் பற்றி குறிப்பிட்ட சில நண்பர்கள் அது வெறும் கூச்சல் என்றும், முழுக்க முழுக்க அர்த்தமற்ற கூச்சல் என்றும் பேசினார்கள். நான் அவர்களுக்கு தங்கள் மூலமாகச் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். இப்படித்தான் பிரஞ்சுக் கவர்னர் பவுலான் என்பவர் பிரஞ்சு தேச மக்களைப் பார்த்து வேலையற்றவர்கள் சும்மா கூச்சல் போடுகிறார்கள் என்று கூறினார்கள். நான் தங்கள் மூலமாகச் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். இந்த வேலை அற்றவர் உள்ளத்திலே விபரீத எண்ணங்களைப் புகுத்த வேண்டாமென்று கேட்டுக் கொள்கிறேன். நிதி நிலை அறிக்கை மீது பேச வந்த நண்பர்கள் ஏதோ இப்படி யெல்லாம் பேசினால் எங்கள் செல்வாக்கு குறைந்துவிடும் என்று பேசினார்கள். நான் அவர்களுக்குத் தங்கள் மூலமாகச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்

[திரு. அ. பெ. தர்மலிங்கம்] [2nd July 1962

உலகப் பெரியார் காந்தியடிகள் உப்புச் சத்தியாகிரகத்திற்காக நடத்திய போராட்டத்தில், உப்பைக் காய்ச்சுவதால் வெள்ளையன் வெளியேறி விடுவானா, என்று கேலி பேசினார்கள். அப்படித்தான் சில பேர் எங்களையும் பேசுகிறார்கள் என்று நம்புகிறேன்.

இந்த நிதி நிலை அறிக்கையில் 7.15 கோடி ரூபாய்க்கு வரி போட்டிருக்கிறோம் என்று சொல்லி இருக்கிறார்கள். ஆனால் நம்முடைய நிதி அமைச்சர் அவர்களுடைய அறிக்கையைப் பார்க்கின்றபோது, இன்னும் வரி அதிகமாக இருக்கிறது. ஆனால் அதிகம் என்று சொல்லிவிடாமல் இந்த அளவில் நிதி அமைச்சர் அவர்கள் சாமர்த்தியமாக குறைத்துச் சொல்லி இருக்கிறார்கள். அதாவது 49-வது பக்கத்திலே, "ரெவின்யூ கணக்கில் 286 லட்சம் பற்றுக்குறையிருந்தாலும் வருகிற ஆண்டுகளில் நம்முடைய வரிகளிலிருந்து கூடுதலான தொகை கிடைப்பதன்மூலம் நிதி நிலை அபிவிருத்தியுறுமென்று நம்புகிறேன்" என்று சொல்லியிருக்கிறார்கள். ஆகவே இன்னும் வரி இருக்கிறது. கொஞ்சம் அதிகமென்று இப்படிச் சொல்லியிருக்கிறார். இதைப்போல 46-ம் பக்கத்திலே "நிலச் சொந்தக்காரர்களின் பளுவை எவ்வளவு குறைக்க வேண்டுமோ, அவ்வளவு குறைக்க வேண்டுமென்ற நோக்கத்துடன் இப்பொழுது விதித்துள்ள நஞ்சை நிலவரி உயர்வு, தண்ணீர் தீர்வை உயர்வு . . . இவைகளின் மேல் பஞ்சாயத்து யூனியன்களின் ஸ்தல செஸ், ஸ்தல செஸ் உபரி வரி விதிக்கப்படக்கூடாது என்று முடிவு செய்துள்ளோம்" என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். ஏற்கனவே 90 சத விகிதம் வரையிலே பஞ்சாயத்து யூனியன்களால் இந்த வரி போட்டாகி விட்டது. இந்த செஸ் வரி 40, 50, 80, 90 சத விகிதம் என்று போட்டாகி விட்டது. அப்படி போட்டுவிட்ட பிறகு இனியும் செஸ் வரி விதிக்காமல் பார்த்துக் கொள்கிறோம் என்று உத்தரவாதம் அளிப்பது என்ன என்பது எனக்குப் புரியவில்லை. அது மாத்திரமல்ல. பஞ்சாயத்து யூனியனின் திறமையைப் பாராட்டிக்கூட நிதி அமைச்சர் அவர்கள் குறிப்பிட்டிருக்கிறார்கள். பஞ்சாயத்து யூனியனிலே நடைபெறுகின்ற பல குறைகளைப் பார்க்கின்றபோது எப்படி அதைப் பாராட்டுகின்றார்கள் என்பது எனக்குப் புரியவில்லை. பல ஆண்டுகாலமாக வசூல் செய்யாமல் தேங்கிக் கிடந்த பாக்கிகளை கிராம முன்சிப்புகளும், கணக்குப் பிள்ளைகளும் போய் ரெவின்யூ இன்ஸ்பெக்டர், தாசில்தார் உதவியோடு வசூல் செய்தார்களே தவிர, இந்த பஞ்சாயத்து யூனியன் சேர்மனோ, கமிஷனரோ வசூல் செய்ததாகத் தெரியவில்லை. கணக்குப்பிள்ளைகள், முன்சீப்களுக்கு சம்பளம் அதிகமாகக் கொடுக்காவிட்டாலும், அவர்களைப் பாராட்டி இருந்தால் நல்லதாக இருக்கும் என்று கருதுகிறேன்.

அதுபோலவே, கால்நடை அபிவிருத்தி, மருத்துவ நிலையங்கள் அபிவிருத்தி ஆகியவைப்பற்றியெல்லாம் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால், அதே நேரத்தில் கால்நடைகளுக்கான மருத்துவ சாலைகளில் வேலை செய்யும் சில ஊழியர்கள் பல ஆண்டுகள் ஆகியும் நிரந்தரமாக்கப்படவில்லை. டாக்டர், கம்பவுண்டர் மட்டும் தான் தொழிலாளி என்று கருதப்படுகிறார்கள். மாடுகளை கவனிப்பதற்காக உள்ள ஆட்கள் வருடங்கள் பல ஆகியும் அன்றாடக் கூலி

2nd July 1962] [திரு. அ. பெ. தர்மலிங்கம்]

யாகவே இருக்கிறார்கள். பதினைந்து வருஷங்கள், 20 வருஷங்கள் ஆகியும் அவர்கள் நிரந்திரமாக்கப்படவில்லை. அதுபோலவேதான் பஞ்சாயத்து யூனியன்களில் வேலை செய்கின்ற கணக்கர்கள் நேரிடையாக குரூப் கிளார்க்குகளாக வேலை பார்த்து வந்தவர்கள் சம்பள உயர்வு முதலிய எல்லாவிதமான சலுகைகளையும் பெறு கிறார்கள். மாவட்ட மன்றங்களிலிருந்து பஞ்சாயத்து யூனியன் களுக்கு வந்தவர்களுக்கு எந்தவிதமான ஊதிய உயர்வும் கிடையாது. அமைச்சர் அவர்களிடத்தில் பல முறை இதுபற்றி மனுக்கள் தரப்பட்டிருக்கின்றன. இனிமேலாவது அந்த ஊழியர்களை நிச்சயமாக நிரந்தரமாக்க வேண்டுமென்று தங்கள் மூலமாக அமைச்சர் அவர்களுக்கு சொல்லிக்கொள்ள விரும்பு கிறேன்.

13-வது பக்கத்தில், 'ஆக்க வேலைகளுக்காக மக்களிடமிருந்து நன்கொடைகளைப் பெறுவதில் அவர்கள் தங்களுடைய தீர்க்க தரி சனத்தைக் காட்டியிருக்கிறார்கள்' என்று சொல்லப்பட்டிருக் கிறது. பிரசிடெண்டு போன்ற யாரும் பணம் கொடுத்ததாகத் தெரியவில்லை இதுவரையில். இனி இப்பொழுது வர இருக்கிறதோ என்னவோ? மற்றவர்களிடமிருந்து தான் நன்கொடை பெற்றிருக் கிறார்கள். அவர்கள் கொடுப்பதற்கு தீர்க்க தரிசனம் இல்லை. ஏதோ திட்டங்கள் நிறைவேற்றுவதற்கு நாங்கள் தடை செய்வதாகச் சொல்லுகிறார்கள். நாங்கள் திட்டங்கள் வேண்டாம் என்று சொல்லவில்லை. திட்டங்கள் தேவை தான். எண்ணெய் செல வழிந்ததேதவிர பிள்ளை பிழைக்கவில்லை என்று கிராமங்களில் சொல்லுவது வழக்கம். அதுபோல பணம் செலவாகியும், தகுந்த பலன் இருப்பதாகத் தெரியவில்லை. உண்மையில் அப்படிப்பட்ட காரியங்களில் கவனம் செலுத்தவேண்டும். அடுத்தபடியாக, மத்திய உணவுத் திட்டம் நாம் கல்வித் துறையில் ஏற்படுத்திய பெரிய முன்னேற்றம் என்று கவர்னர் உரையில் கூறப்பட்டிருந் தது. அமைச்சர் அவர்களுடைய உரையிலும் கூறப்பட்டிருக் கிறது. என்னவென்று பார்த்தால், அவரே சொல்லுகிறார். 'கேர்' உதவியினாலே செய்கிறோம் என்று. கடைத்தேங்காயை எடுத்து வழிப்பிள்ளையாருக்கு உடைப்பது மாதிரி தான் இருக்கிறது. கல்விக்காக அதிக நிதி ஒதுக்கியிருப்பதாகச் சொல்லப்படுகிறது. முதலில் கல்லூரியில் இடம் இல்லை என்ற நிலைமை இருந்தது இப்பொழுது உயர்நிலைப்பள்ளிகளில் மூன்றாவது பாரம், நான்கா வது பாரத்திற்கே இடமில்லை என்ற அளவிற்கு நிலைமை இருந்து கொண்டிருக்கிறது. இதில் இன்னும் அதிக கவனம் செலுத்த வேண்டுமென்று நான் அமைச்சர் அவர்களை தங்கள் மூலம் கேட்டுக்கொள்ளுகிறேன்.

அதேமாதிரி பஞ்சாயத்து யூனியன்களில் இருக்கிற ஆசிரியர் கள் மாற்றுதல்பற்றி எங்கள் கட்சி அங்கத்தினர்கள் இங்கே குறிப் பிட்டார்கள். உண்மையிலேயே ஆசிரியர்களை மாற்றுவதில் ஒரு வரைமுறையே இல்லாமல் போய்விட்டது. மந்திரிகளும் ஜாடை மாடையாகச் சொல்லுகிறார்கள். அந்த வாடை வீசுகிறது, பார்த்தால் அப்படி இருக்கிறது, இப்படி இருக்கிறது என்றெல்லாம் சொல்லப்படுகிறது. கேள்வி முறை இல்லாமல் அவர்கள் மாறுதல்

[திரு. அ. பெ. தர்மலிங்கம்] [2nd July 1962

செய்யப்படுகிறார்கள். அவர்கள் 'அட்மினிஷ்டிரேடிவ் ஸைடில்' வேலை சரியாக செய்யவில்லை என்றாலும்கூட, மாவட்ட மன்றங்களாக இருந்த காலத்தில், அவர்கள் பேரில் நடவடிக்கை எடுப்பதற்கு டெப்யூடி இன்ஸ்பெக்டர், ஜில்லா கல்வி அதிகாரி போன்ற கல்வி அதிகாரிகளின் அனுமதி பெறவேண்டும் என்ற நிலைமை இருந்தது. இப்பொழுது அதிக அதிகாரம் கொடுத்திருக்கிறோம் என்ற காரணத்தைக் காட்டி, அதிக அதிகாரம் பெற்றிருப்பதால் இம்மாதிரியெல்லாம் கேள்வி முறை இல்லாமல் மாற்றம் செய்கிறார்கள் பல பஞ்சாயத்து யூனியன்களில். சில யூனியன்களில் நல்ல முறையில் நடக்கலாம். நான் எல்லாவற்றிலும் அப்படி இருக்கிறது நிலைமை என்று சொல்லவில்லை. அம்மாதிரி நடைபெறும் இடங்களில் அதிக கவனம் செலுத்தவேண்டுமென்று தங்கள் மூலமாகக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

திட்டங்கள் நிறைவேற்றுவதில் எங்கள் ஒத்துழைப்பை அமைச்சர் அவர்கள் கோருகிறார்கள். ஆனால், ஒன்றில் மட்டும் அவர்கள் எங்கள் ஒத்துழைப்பை நாடுவது கிடையாது. எங்கேயாவது ஒரு கமிட்டி என்று போட்டால், அங்கே திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்த அங்கத்தினர்களுக்கு இடம் கொடுப்பதில்லை. ஒரு வேடிக்கை. பெரம்பலூர் வட்டாரத்தில் ஹாஸ்டல் கமிட்டியில் தேர்தலில் ஜெயித்த எம்.எல்.ஏ. இடம் பெறவில்லை. எலெக்ஷனில் நின்று தோற்றவர்கள், தேர்தலுக்கே நிற்காதவர்கள் கமிட்டியின் அங்கத்தினர்கள். அதேமாதிரி கோயில்களுக்கு தர்மகர்த்தாக்கள் நியமிப்பதிலும் எங்களுக்கு இடம் கிடையாது. அதெல்லாம் ஸ்தாபனங்கள் பிடிக்க வழி என்றெல்லாம் சொல்லப்படுகிறது. அந்த இடங்களிலே நாங்களும் இருந்தால்தான் எல்லாம் தெரியவரும். இல்லாவிட்டால் எங்களுக்கு ஒன்றும் தெரிவது கிடையாது. என்ன கலர், எப்படி ஆள் என்றெல்லாம் கேட்கப்படுகிறது. தயவு செய்து அம்மாதிரி நிலைமை இல்லாமல் கமிட்டிகளுக்கு அங்கத்தினர்கள் நியமனம் செய்வதிலும், அமைச்சர் அவர்கள் எங்களுக்கு ஒத்துழைப்பு தரவேண்டும் என்று தங்கள் மூலமாகக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

திட்டங்களைப்பற்றிச் சொல்லியிருக்கிறார்கள். மான்ய விவாதத்தின் போது அவைகள் பற்றி பேசலாம் என்று இருக்கிறோம். ஒரே சர்க்கார், ஒருமைப்பாடு, என்றெல்லாம் சொல்லப்படுகிறது. அதே நேரத்தில், மத்திய சர்க்காருக்கு மட்டும் இந்த வருஷம் வட்டிக்காக வேண்டி கொடுக்க வேண்டியது ரூ. 5 கோடி 17 லட்சம். மார்வாரிக்கு வட்டி கொடுப்பதுபோல் இந்த சர்க்கார் வட்டி கொடுக்கிறது. இதெல்லாம் கேட்டால், திட்டம் நிறைவேறியிருக்கிறது என்று சொல்லுவார்கள். ஒருமைப்பாடு, ஒரே நாடாக இருக்கிறோம் என்று சொல்லப்படுகிறது. அப்படியிருக்கும் பொழுது இங்கே தொழில் வளம் இல்லை, அதிக வட்டி கொடுக்க முடியாது, வட்டி குறைந்தால் நல்லது என்று வற்புறுத்திக் கேட்டிருந்தால், ரொம்ப நன்றாக இருக்கும். அதைப்பற்றி மற்ற விவரங்கள் பின்னால் சொல்லுவதற்கு தயாராக இருக்கிறோம் என்பதை இந்த நேரத்தில் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

2nd July 1962] [திரு. அ. பெ. தர்மலிங்கம்]

விவசாயிகளுக்குப் போட்டிருக்கிற வரியைப்பற்றி கனம் வீரபாகு அவர்கள் உண்மையில் ரொம்பப் பாராட்டத்தக்க வகையிலே பேசினார்கள். ரொம்பவும் துணிவோடு பேசினார்கள். ஏனென்றால், அவர்களுக்கு நிலைமை தெரியும். புஞ்சை நிலங்களுக்கு நஞ்சை தீர்வை விதிக்கப்பட்டிருக்கிறது. ஏரிப் பாசனம் இருந்து மழைத் தண்ணீர் தேங்கி அதன் மூலம் பாசனம் செய்தாலும், அவர்களுக்கும் நஞ்சைத் தீர்வை விதிக்கப்படுகிறது. வரி கொடுக்காவிட்டால் மாட்டையும், நிலக்கதவையும் பிடுங்கிக் கொண்டு போகிறார்கள். ஆனால் பாராட்டத்தக்க வகையில் வரி வசூலிக்கப்பட்டிருக்கிறது என்று சொல்லப்படுகிறது. தேங்கியிருக்கும் தண்ணீரை சிறு கால்வாய் மூலம் வெட்டிக்கொண்டு வந்து சால் வைத்து இரைத்தால் கூட, 20 மடங்கு வரையில் தண்டத் தீர்வை விதிக்கலாம் என்று சர்க்கார் உத்தரவு இருக்கிறது. 4, 5 மடங்கு கணக்குப்பிள்ளைகள் விதிக்கிறார்கள். தீர்வையை நிச்சயம் நிறுத்திவைக்க வேண்டும். இம்மாதிரி நிறுத்தியும் வைத்திருக்கிறார்கள். 'சமீப காலத்தில், அரசாங்கத்தின் பல அபிவிருத்தி வேலை திட்டங்களின் காரணமாக நகரங்களில் நில விலைகள் வெகுவாக உயர்ந்திருப்பதும் நிலச் சொந்தக்காரர்களுக்கு பெருமளவில் இலாபம் கிட்டியிருப்பதும், கனம் அங்கத்தினர்களுக்குத் தெரியும்' என்று கூறப்பட்டிருக்கிறது. அதை குறிப்பாக ஒரு சர்வே செய்து, ஒரு நிர்ணயம் செய்வதற்கு ஒரு குழு நியமனம் செய்வதுபற்றி அமைச்சர் அவர்கள் கவனம் செலுத்தவேண்டுமென்று தங்கள் மூலம் கேட்டுக் கொள்ளுகிறேன். உழுதவன் கணக்குப்பார்த்தால், உழக்குக்கூட மிஞ்சாது, என்று சொல்லுவதுபோல் உழவன் மிகவும் வேதனைப்பட்டுக்கொண்டிருக்கிறான். நஞ்சைத் தீர்வை விதிப்பதை தயவு செய்து தள்ளி வைத்து, ஒரு குழுவை நியமித்து, தரத்தைப் பார்த்து, இதற்கு போடவேண்டிய தீர்வை இவ்வளவுதான், இது மானம் பார்த்த பூமி இது கிணற்றுப் பாசனம் உள்ள பூமி கால்வாய் பாசனம் உள்ள பூமி என்று நிர்ணயம் செய்து, மண் வளத்தையும் பரிசோதிப்பதற்கு ஏற்பாடு செய்து பிறகு தீர்வை விதிக்கவேண்டும். இந்தத் தீர்வையை அவசரப்பட்டு போடவேண்டாம், தயவுசெய்து அதை நிறுத்திவைக்கவேண்டுமென்று தங்கள் மூலமாக அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

இறுதியாக நான் சொல்லிக்கொள்ள விரும்புவது என்னவென்றால், விவசாயம் தெரியாதவர்கள் உழவர்களைப்பற்றி பேசுகிறார்கள் என்றெல்லாம் சொல்லுகிறார்கள். தயவு செய்து அம்மாதிரி சொல்லவேண்டாம் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். சென்ற தடவை விவசாய அமைச்சராக இருந்தவர் பெருமைக்குரிய அமைச்சர் பக்தவத்சலம் எந்தக் கையால் உழுதிருக்கிறார்கள் என்ன விவசாயம் செய்திருக்கிறார்கள்? ஆகையினால், விவசாயம் செய்யாதவர்கள் விவசாயிகளைப்பற்றி பேசவேண்டாம் என்று இனிமேலாவது சொல்லவேண்டாம். உழவர்களுடைய நிலைமை இப்படியிருக்கிற காரணத்தினால் தான், யாரோ இப்படிப் பேச ஆரம்பித்த காரணத்தினால் தான் உண்மையான விவசாயி யார் என்று கண்டுபிடிக்க முடியாமல் விவசாயி வேதனைப்படவேண்டிய

நிலைமை ஏற்பட்டிருக்கிறது. எரிகிற நெருப்பில் எண்ணெயை காய்ச்சி ஊற்றுவதுபோல், ஏற்கனவே மோசமான நிலைமையில் உள்ள விவசாயின் நிலைமையை இன்னும் மோசமாக்கவேண்டாம் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். விவசாயிகளுக்கு நன்மை செய்வதற்காக 60-40 சட்டம் கொண்டுவரப்பட்டது. ஆனால், இன்றைக்கு எங்கள் பகுதியிலே என்ன நிலைமை என்று பார்த்தால், நம்முடைய நாட்டு முறைப்படி "முச்சலிக்கா" சீட்டு எழுதப்பட்டிருந்தாலும் முச்சலிக்கா என்பது குத்தகை சீட்டு அல்ல என்று உயர்நீதி மன்றத்தால் முடிவு செய்யப்பட்டு, அதன் விளைவாக, நிலத்தை பயிரிட்டு உழுத விவசாயி அறுக்கப் போகிற நேரத்திலே ரிசர்வ் போலீஸ் வைத்து மறித்து, நெல்லை அறுத்துக்கொண்டு போகக்கூடிய நிலைமையும், உழுதவனுக்கு இரண்டு கட்டு வைக்கோல் கூட கிடைக்கக்கூடாத நிலைமையும் ஏற்பட்டிருக்கிறது. குரிச்சி, பனியூர் போன்ற கிராமங்களில் விவசாயிகள் பெரிதும் வேதனைப்படுகிறார்கள். உழவர்களுக்குச் சாதகமான முறையிலே, உழவர் குடி உயர்கிற முறையிலே, சட்டங்கள் அமைய வேண்டுமென்று கேட்டுக்கொண்டு, இந்த அளவிலே முடிக்கிறேன். வணக்கம்.

* **திரு. கோ. வெங்கட்ராமன்:** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இன்றைய தினம் 1962-63-ம் ஆண்டு நிதிநிலை அறிக்கையைப் பற்றிய விவாதத் துவக்கத்தில் இருந்து நாம் கேட்கின்ற பல்வேறு பேச்சுக்களையும் செய்திகளையும் துருவிப்பார்க்கின்ற பொழுது, இந்த நிதி நிலை அறிக்கையை நமது நிதியமைச்சர் அவர்கள் தெளிவாக சமர்ப்பித்து இருக்கிறார்கள் என்பது புலனாகும். இந்த ஆண்டு நிதிநிலை அறிக்கையிலே வரவு இனங்கள் என்ன, செலவு இனங்கள் என்ன, துண்டு விழுகிற தொகை என்ன என்பதை எடுத்துக்கூறி பல்வேறு தொழில் திட்டங்கள், பல்வேறு அபிவிருத்தி திட்டங்கள் இவைகளுக்காக பணம் செலவழிக்கப்படுகிற காரணத்தால் துண்டு விழுகிறது என்பதையும் குறிப்பிட்டிருக்கிறார்கள். இந்த ஆண்டு, வழக்கத்திற்கு அதிகமாக, எல்லாப் புள்ளிவிவரங்களும் அளிக்கப்பட்டு இருக்கின்றன என்றால், ஐந்தாண்டு திட்ட ரீதியாக ஒவ்வொரு ஆண்டும் செலவழிக்கப்பட்ட தொகை என்ன, செலவழிக்கப்படவேண்டிய தொகை என்ன, என்று திட்டவட்டமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இன்றைய தினம் விவாதத்தை துவக்கி வைத்த எதிர்க்கட்சி அங்கத்தினர் பேசும் பொழுது, கனம் நிதியமைச்சர் புள்ளிவிவரங்களை அள்ளிக் கொட்டியிருக்கிறார்கள் என்று குறிப்பிட்டார். புள்ளிவிவரங்களைப் பற்றி புரியாத காரணத்தினாலோ என்னமோ, உரையிலே குறிப்பிட்டுள்ள "நாம்" என்பது யார் என்று சொல்ல முடியவில்லை என்று சொன்னார்கள். அரசாங்கம் பட்ஜெட் உரையிலே "நாம்" என்று சொல்லும்போது, இந்திய அரசியல் அமைப்பு சட்டத்திற்கு உட்பட்டு தமிழ் நாட்டின் வரவு செலவு திட்டத்தை இந்த மன்றத்திலே சமர்ப்பிக்கின்ற அரசாங்கம் தான் என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும். "நாம்" என்று தெரியாத நிலையில் தான், அம்மாதிரி புள்ளிவிவரங்களை அள்ளிக் கொட்டியிருக்கிறார் என்று எதிர்க்கட்சி அங்கத்தினர் சொல்லியிருக்கிறார். வரவினங்

2nd July 1962] [திரு. கோ. வெங்கட்ராமன்]

கள் என்ன, செலவினங்கள் என்ன, ஏன் அதிகமாக திட்டங்களை ஏற்றுக்கொள்ள வேண்டியிருந்தது என்பதை எடுத்துச் சொல்லி, துண்டு விழுகிற தொகையைச் சரிகட்டுவதற்கு, நம்முடைய வழி வகை நிலையைச் சமாளிப்பதற்கு என்ன வரித் திட்டங்களை மேற் கொள்ள வேண்டியிருக்கிறது என்பதையும் கனம் அமைச்சர் அவர்கள் பட்ஜெட் உரையிலே எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள். இந்த நிலையில், எதிர்க்கட்சி அங்கத்தினர்களின் பேச்சு "கூழுக் கும் ஆசை, மீசைக்கும் ஆசை" என்ற முறையிலே இருக்கிறது என்பதை நான் குறிப்பிட விரும்புகிறேன். ஏனென்றால் ஒரு புறத்திலே வரிகளை ஏராளமாக விதித்திருக்கிறார்கள் என்று சொல் கிறார்கள், மறுபுறத்திலே திட்டங்கள் சரியான முறையிலே நிறை வேற்றப்படவில்லை என்று சொல்லுகிறார்கள். இந்திய அரசியல் அமைப்பு சட்டத்தின்படி, ஸாவெரன் டெமாக்ராடிக் ரிபப்ளிக் என்பதை ஏற்றுக்கொண்டு, இந்த நாட்டிலே ஒரு ஜனநாயக சமுதாயத்தை அமைப்பதற்கு முடிவு செய்து, இந்திய அரசியல் அமைப்பில் கண்டுள்ள டைரக்டிவ் பிரின்ஸிபிள்ஸின் கீழ் இருக்கிற பல்வேறு சலுகைகளை நமது நாட்டு மக்களுக்கு அளித்து, ஒரு க்ஷேமநல அரசாங்கத்தை ஏற்படுத்துவதற்கு நாம் முடிவு எடுத் திருக்கிறோம். பல்வேறு திட்டங்களை நிறைவேற்றுவதன் மூல மாகவும், பொருளாதார நிலையை சீராக அமைப்பதன் மூலமாகவும் தான் நம் நாட்டு மக்கள் முன்னேற முடியும் என்பதை நாம் ஒப்புக்கொண்டிருக்கிறோம். ஒவ்வொரு ஆண்டும் வரவு செலவு திட்டத்தை இங்கே சமர்ப்பிக்கின்றபொழுது, திட்டங்களைப் பற்றி தெளிவான கருத்துக்கள் சொல்லப்படுகின்றன. கல்வித்துறையில் என்ன செய்திருக்கிறோம், மருத்துவத்துறையில் என்ன முன்னேற் றம் கண்டிருக்கிறோம், பொதுப்பணித்துறையில் என்னென்ன திட் டங்களை நிறைவேற்றியிருக்கிறோம் என்றெல்லாம் சொல்லப்பட் டிருக்கிறது. குறிப்பாக, கல்வியைப் பொறுத்த வரையில், இந்த ஆண்டு மிகவும் சிறந்த முறையிலே 25 கோடி ரூபாய் ஒதுக்கப் பட்டிருக்கிறது. நமது கல்வி அமைச்சர் அவர்கள், இந்த ஆண்டில் நூற்றுக்கு மேற்பட்ட உயர் நிலைப் பள்ளிகளைத் துவக்கி இருக்கிறார்கள். மற்றொரு அங்கத்தினர் பேசும்பொழுது, இவ் வளவு அதிகமான பள்ளிகளை துவக்கியும் கூட, மூன்றாவது, நான் காவது படிவங்களில் இடம் கிடைக்கவில்லை, எட்டாவது ஒன்பதா வது வகுப்புகளில் இடம் கிடைக்கவில்லை என்று கூறி வருத்தப் பட்டார். இது எதைக் குறிக்கிறது என்று நான் கேட்கிறேன். நாட்டிலே ஏற்பட்டுள்ள கல்வி உணர்ச்சியைத்தான் இது குறிக் கிறது. புதிய உயர்நிலைப் பள்ளிகளைத் துவக்கியும், புதிய கல்லூரிகளைத் துவக்கியும், புதிய தொழில் கல்லூரிகளைத் துவக்கி யும், மாணவர்களுக்கு இடம் கிடைக்கவில்லை என்று சொன்னால், உண்மையிலேயே அது கல்வி வளம் பெற்று வருகிறது, மாணவர் கள் ஓங்குகிறார்கள் என்பதைத்தான் குறிக்கிறது. இப்பொழுது கல்விக்காக 25 கோடி ரூபாய் இந்த பட்ஜெட்டிலே ஒதுக்கப்பட் டுள்ளது. அதேமாதிரி பல்வேறு டெவலப்மெண்ட் துறைகளை எடுத்துக் கொண்டால், சென்ற இடைக்கால பட்ஜெட்டில் ஒதுக் கப்பட்ட தொகைக்கு அதிகமாக கல்வித்துறைக்கு 2.17 கோடி

[திரு. கோ. வெங்கட்ராமன்] [2nd July 1962

ரூபாயும், மருத்துவத்துறைக்கு 19 லட்ச ரூபாயும், விவசாயத் துறைக்கு 50 லட்ச ரூபாயும், கால்நடை அபிவிருத்திக்கு 23½ லட்ச ரூபாயும், தாழ்த்தப்பட்டோர் நலனுக்காக 46 லட்ச ரூபாயும், பொதுப்பணி வேலைகளுக்காக 53 லட்ச ரூபாயும், மற்ற இனங்களுக்காக ரூபாய் 1.27 கோடியும் அதிகமாக ஒதுக்கி, இடைக்கால பட்ஜெட்டுக்குப் பிறகு புதிய திட்டங்களை நாம் ஏற்றுக்கொண்டு இருக்கிறோம். பட்ஜெட்டில் ஏற்படுகின்ற பற்றாக் குறையைப் பூர்த்தி செய்வதற்கு வரித்திட்டங்களை ஏற்றுக் கொள்ளவேண்டியிருக்கிறது. அதற்காக நம்முடைய பொருளாதார வளர்ச்சியை நாம் தடைப்படுத்திக்கொள்ள முடியாது. வரிகளை விதிக்கவேண்டியிருக்கிறதே என்பதற்காக நம்முடைய முன்னேற்றத்தை தடைப்படுத்திக்கொள்ள முடியாது என்கிற அடிப்படையிலேதான், எல்லா திட்டங்களையும் நல்ல முறையில் நிறைவேற்றவேண்டும் என்பதற்காகத்தான் வரித் திட்டங்களை சர்க்கார் சமர்ப்பித்திருக்கிறார்கள் என்பதை அமைச்சர் அவர்கள் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார்கள். இந்த பட்ஜெட் விவாதத்திலே எதிர்க்கட்சி அங்கத்தினர்களுக்கு கவர்ச்சிகரமான கட்டம் என்னவென்றால், வரித்திட்டங்களை எதிர்த்துப் பேசுவது தான். விவசாயத்தில் அக்கறை கொண்டுள்ளதாக சொல்பவர்கள், விவசாயிகளுக்காக வாழ்வதாகச் சொல்கிறவர்கள், "விலை ஏற்றத்தைத் தடுங்கள்" என்று அட்டை தாங்கி ஆர்பாட்டம் செய்கிறார்கள். ஒரு அங்கத்தினர் "வாள் கொண்டு வந்தார்கள்" என்று சொன்னார். மற்றொரு அங்கத்தினர் "தடி கொண்டு வந்தார்கள்" என்று தான் சொல்லவில்லை. இந்த போராட்டத்தின் லட்சியம் என்ன? விவசாயிகள் உற்பத்தி செய்யும் தானியங்களின் விலையை குறைத்தாக வேண்டுமென்று சொன்னால், விவசாயம் அழிந்துவிட வேண்டும் என்று சொல்கிறார்களா? அல்லது விவசாயிகள் வாழமுடியாத ஒரு நிலைமையை ஏற்படுத்த வேண்டுமென்று எதிர்க்கட்சி அங்கத்தினர்கள் விரும்புகிறார்களா? இன்றைய தினம் உள்ள பிரச்னை என்ன? விவசாய அபிவிருத்திக்காக பல்வேறு அணைகட்டு திட்டங்களை உருவாக்கியதோடு மட்டுமல்லாமல், ஏராளமான விதைப்பண்ணைகளை ஏற்படுத்தி விவசாயிகளுக்கு நல்ல விதைகளை வழங்குவதாக பட்ஜெட் உரையிலே குறிப்பிட்டிருக்கிறார்கள். புள்ளிவிவரங்களும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. மருத்துவத்துறையில் பல புதிய ஆஸ்பத்திரிகளை ஏற்படுத்தியிருக்கிறோம். பஞ்சாயத்து யூனியன்களுக்கு அதிகமான அதிகாரம் அளிக்கும் வகையிலே ஒவ்வொரு கிராமத்துக்கும் எல்லா வசதிகளையும் அளித்திருக்கிறோம் என்கிற அடிப்படையிலே விவசாயத்தைப் பற்றிய பிரிவு கூறுகிறது, தொழில்களைப் பற்றிய பிரிவு கூறுகிறது. தனியார் துறைதான் வளம் பெற்று வருகிறது என்று எதிர்க்கட்சி அங்கத்தினர்கள் குறிப்பிட்டார்கள். இது "கூழுக்கும் ஆசை, மீசைக்கும் ஆசை" என்ற முறையிலேதான் இருக்கிறது என்பதை மீண்டும் சொல்லுகிறேன். ஒரு பக்கத்திலே வரியே கூடாது என்று சொல்லுகிறார்கள். மற்றொரு புறத்திலே வளர்ச்சித் திட்டங்கள் வேண்டும் என்று சொல்லுகிறார்கள். அதேமாதிரி ஒரு புறத்தில் தனியார் துறையே இருக்கக்கூடாது

2nd July 1962] [திரு. கோ. வெங்கட்ராமன்]

என்று சொல்லுகிறார்கள், மற்றொரு புறத்தில் தனிப்பட்டவர்களின் சுதந்திரத்திலே கை வைக்கக்கூடாது என்று சொல்லுகிறார்கள். பொதுநல வாதிகளோடு நட்பும் கொள்ளுகிறார்கள். இன்றைக்கு இருக்கக்கூடிய நிலைமை என்ன? "மிக்ஸட் எக்கானமி" யை நாம் ஏற்றுக்கொண்டு இருக்கிறோம். அந்த அடிப்படையிலே தொழிற் திட்டங்கள் முன்னேற்றமடையவேண்டும் என்று சொன்னால், தனியார்த் துறைக்கும் அரசாங்கம் உதவியளிக்கிறது. அப்படி தொழிற் திட்டங்களை நிறைவேற்றுகிற பொழுது, நாடு பூராவிலும் உள்ள இயற்கை வளங்களைப் பயன்படுத்தி கனரக தொழில்களை இந்திய அரசாங்கமும், தமிழ் நாட்டு அரசாங்கமும் ஏற்றுக்கொண்டு இருக்கிறது. தனியார் துறை கூடாது, பஸ்களை தேசியமயமாக்க வேண்டும் என்று கூறினார்கள். அப்படிச்சொல்லுகிறவர்கள், பஸ்கள் மீது வரிவிதிப்பதற்கு ஏன் தயங்கவேண்டும்? நடக்கமுடியாத திட்டங்களைச் சொல்லும் பொழுது பெருமகிழ்ச்சி கொள்வது, பல நல்ல திட்டங்களை கொண்டு வருகிறபொழுது அதற்கு எதிர்ப்புச் சொல்வது, இது போன்றவைகளை நாம் ஒவ்வொன்றிலும் பார்க்கிறோம். கடந்த முப்பது ஆண்டுகளாக நிலவரி விகிதம் உயர்த்தப்படவில்லை. இன்றைய தினம் நிலவரியை உயர்த்தியிருக்கிறார்கள்.

எதிர்க்கட்சி அங்கத்தினர்கள் ஒன்றை மட்டும் பேச விட்டு விட்டார்கள். நகர்ப்புறங்களிலே நிலத்தின் விலை உயர்ந்திருக்கிறது. ஆகவே, அதிகரித்த விலை விக்கத்தின் அடிப்படையிலே வரிவிதிப்பதற்கு திட்டம் போடுகிறோம் என்று சொல்லும்பொழுது அது ஏழை மக்களைப் பாதிக்கும் என்று சொல்லுவதற்கு வழி இல்லை. பஸ்களின் மீது போடப்போகும் வரி மறைமுகமாக பஸ் பிரயாணிகளைப் பாதிக்கும் என்று சொல்லுகிறார்கள். ஆனால் இந்த நகர்ப்புற வரி ஏழை மனிதனை வாட்டி வதைக்கிறது என்று கூறவில்லை. திட்டங்களின் அடிப்படையில் நம்முடைய பொருளாதாரம் வளரவேண்டும் என்று சொன்னால், தொழில் முன்னேற்றம், விவசாய அபிவிருத்தி ஆகிய எல்லாவற்றிலும் நாம் அக்கறை எடுத்துக் கொள்ளவேண்டும்.

அடுத்தபடியாக சேலம் கல்லூரி ஹாஸ்டலுக்கு என்று நான்கு லட்சம் ரூபாய் ஒதுக்கி இருப்பதை நான் வரவேற்கிறேன். 12-00 noon. சேலத்தில் இருக்கிற அரசினர் கல்லூரி பல ஆண்டுகளாகவே நகரசபையினரால் நிர்வகிக்கப்பட்டு இப்பொழுது அரசினரால் எடுத்துக்கொள்ளப்பட்டு அதை முன்னேற்றமடையச் செய்வதற்கு என்று அரசினர் எடுத்துக்கொண்டுள்ள நடவடிக்கையைக் கண்டு நான் பாராட்டுகிறேன். இப்படி புதிய கல்வி திட்டங்களைக் கொண்டு வருவதானது கல்வி திட்டங்களின் அபிவிருத்திற்கு அறிகுறியாக இருக்கிறது என்பது தெரிய வருகிறது. இது போன்று பல திட்டங்களை ஏற்படுத்தியிருப்பது வரவேற்கத்தக்கதாக இருக்கிறது.

அடுத்தபடியாக சேலம் இரும்பைப்பற்றி சொல்லப்படுகிறது. அதைப்பற்றி குறிப்பிடும்போது கனம் அமைச்சர் அவர்கள் மனம் போல மாங்கல்யம் என்று குறிப்பிட்டார். அகில இந்தியாவில்

[திரு. கோ. வெங்கட்ராமன்] [2nd July 1962

தேன் இரும்பு என்று சொல்லாமல் சேலம் இரும்பு என்று சொல்லுகிறார்கள் என்றும் அதனால் சேலத்திலே அதை அமைக்க வேண்டும் என்று திட்டமிட்டிருப்பதை நான் வரவேற்கிறேன். எல்லோருமே சேலம் இரும்பைப்பற்றிதான் பேசி வருகிறார்கள். அதனால் அந்த மாவட்டத்திலேயே அந்த தொழிற்சாலை ஏற்பட வேண்டும் என்று முடிவு செய்தது வரவேற்கத்தக்கது. அது எதிர்பாராதது ஆகிவிடக்கூடாது. அங்கு இஞ்சினியரிங் கல்லூரி வைக்கவேண்டுமென்று இடைகால பட்ஜெட்டில் சொல்லப்பட்டு இருக்கிறது. சேலத்தில் ஒரு தொழில் பேட்டையை அமைப்பதாக சொல்லப்பட்டிருக்கிறது. ஏதோ சில நில ஆர்ஜித தகராறுகளின் காரணமாக தொழில்பேட்டை அமைப்பது தடைபட்டது போல் அல்லாமல் கால தாமதம் ஆகாமல் அங்கு இஞ்சினிரிங் கல்லூரியை இந்த ஆண்டு இல்லையென்றாலும் அடுத்த ஆண்டாவது ஆரம்பிக்கும்படியாக கேட்டுக்கொள்ளுகிறேன். ஆகவே இந்தத்திட்டத்தின் கீழ் கூடிய சீக்கிரத்தில் அங்கு ஆரம்பிக்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டு என்னுடைய பேச்சை இத்துடன் முடித்துக்கொள்ளுகிறேன்.

* **திரு. அ. பெ. தர்மலிங்கம்:** ஆன் பாயின்ட் ஆஃப் இன்ஃபர்மேஷன் சார், **விலைவாசிகளை குறைக்க வேண்டும் என்று** சொன்னபோது விவசாயக் கருவிகளின் விலைகளையும் குறைக்க வேண்டும் என்றுதான் சொன்னோம். விவசாயிகளுக்கு கருவிகளை குறைந்த விலைக்குக் கிடைக்கும்படியாக ஏற்பாடு செய்ய வேண்டும் என்றுதான் சொன்னேன். நாங்களும் விவசாயம் செய்யத் தெரிந்தவர்கள்தான். அவர்களுக்குக் குறைந்த விலையில் கொடுக்க வேண்டும் என்றுதான் சொன்னேன்.

* **திரு. மு. சண்முகம்:** கனம் துணைத்தலைவர் அவர்களே, இன்று சபையில் அரசாங்கத்தின் 1962-63 ஆவது ஆண்டின் வரவு செலவு திட்டத்தைக் குறிக்கும் நிதி நிலை அறிக்கையை கனம் நிதி அமைச்சர் அவர்கள் சமர்ப்பித்து அதைப்பற்றி பொது விவாதம் நடந்துகொண்டிருக்கிறது. அந்த நிதி நிலை அறிக்கையில் இந்த ஆண்டிற்கு மொத்த வருவாய் 116 கோடி என்று குறிப்பிட்டும் செலவினத்திற்கு 99 கோடி ரூபாய் என்று குறிப்பிட்டும் பொதுவாக 9½ கோடி ரூபாய் துண்டு விழுகிறது என்றும் அதை சரிக்கட்டுவதற்கு மக்கள் மீது வரி விதித்து அதை வசூல் செய்து சரிகட்ட வேண்டும் என்றும் சொல்லப்படுகிறது. நாட்டின் பொருளாதாரத் துறையையும் மக்களின் வாழ்க்கைத்தரத்தையும் உயர்த்துவதற்கு நாம் ஐந்தாண்டு திட்டங்களை எடுத்து அந்த திட்டங்களின் மூலம் பல வகைகளில் உற்பத்தியைப் பெருக்கி அதன் மூலம் மக்களுக்கு வருவாயைத் தேடி அவர்களுடைய வாழ்க்கைத்தரத்தை உயர்த்துவதற்கு வழி வகை செய்து வருகிறோம். இப்படி 9½ கோடி ரூபாய் துண்டு விழுவதைப் பார்த்தால் நமக்கு வரக்கூடிய வருவாயில் அதன் கணக்கு சற்றேறக் குறைய 12 சத விகிதம் தான் ஆகிறது. ஆகவே வருவாயில் 12 சத விகிதம் தான் துண்டு விழுகிறது. இவ்வளவு பெரிய வருவாயை மேற்கொள்ளக்கூடிய வரவு செலவு திட்டத்தில் இந்த 12 சத விகித பற்றாக்குறையை சரிக்கட்டுவதற்கு மக்கள் மீது

2nd July 1962] [திரு. மு. சண்முகம்]

வரிச்சுமையை சுமத்த வேண்டுமா என்பதைப் பார்க்க வேண்டும். அப்படி சுமத்த வேண்டியது அவசியமா என்பதையும் நாம் சிந்திக்க கடமைப்பட்டிருக்கிறோம். நாம் இவ்வளவு பெரிய திட்டங்களை கையாண்டு இவ்வளவு பெரிய திட்டங்களை வகுத்து, பெரும் தொழிற்சாலைகளை அமைத்து திட்டமிட்டு வருவதைப் பார்த்தால் இந்த 12 சத விகித பற்றுக்குறையை சரிக்கட்டுவதற்காக மக்கள் மீது வரிச் சுமையை சுமத்துவது என்பது சரியல்ல. அதிலிருந்து மக்களுக்கு விடுதலை கொடுத்து வேறு வகைகளில் அந்த வருவாயை தேடிக்கொள்வதற்கு வழிவகை செய்யக்கூடாதா வேறு வழிகளில் அந்த வருவாயைக் கண்டு பிடிக்க வழி செய்யக் கூடாதா . எபைதை சிந்தித்துப் பார்க்க நாம் கடமைபட்டிருக்கிறோம். அதைப்பற்றி பரிசிலனை செய்யவும் நாம் கடமைப் பட்டிருக்கிறோம். வெளியில் கூட பொது மக்கள் இதைப்பற்றி கவனித்துக்கொண்டிருக்கிறார்கள் என்பதை இந்தச் சந்தர்ப்பத்தில் சபையின் கவனத்திற்குக் கொண்டு வர விரும்புகிறேன். இந்த சிறிய தொகையை சரிக்கட்டுவதற்கு வரி விதிப்பதுதான் முறையா, வேறு வழிகளில் அதனைப் பெறுவதற்கு வழியில்லையா? குறிப்பாகச் சொல்லப் போனால் சென்ற சில ஆண்டுகளின் அனுபவத்திலிருந்து இந்தப் பற்றுக்குறையை எந்த விதத்தில் ஏற்பட்டது என்று தெரிந்து கொண்டிருக்கலாம். எந்தந்த செலவினங்களை குறைத்துக்கொள்ளலாம் என்றும் எந்தந்த வழிகளில் அதிக வருவாயைத் தேடிக்கொள்ளலாம் என்பதையும் தெரிந்து கொண்டிருக்கலாம். இதுவரையிலும் ஏற்பட்டுள்ள அனுபவத்திலிருந்து இதைத் தெரிந்து கொண்டிருக்கலாம். பல செலவினங்களை குறைத்துக் கொண்டும் சில இனங்களில் வருவாயைத் தேடிக் கொண்டும் இருக்கலாம். பொதுவாக மக்களிடமும் இதுதான் பேசப்பட்டு வருகிறது. வரி விதிக்கப்பட்ட சில இனங்களில் சரியானபடி வரியை வசூலிக்கப்படவில்லை என்பதும் தெரிய வருகிறது. இப்படி சரியானபடி வசூலிக்கப்படவில்லை என்பதை பொறுப்புள்ள நாம் சிந்தித்துப் பார்க்க கடமைப்பட்டிருக்கிறோம். இதை சரிவர கண்காணித்து அந்த வகையில் அதிக வருவாயை தேடிக்கொள்ளலாம். அதற்கு வேண்டிய முயற்சிகளையும் எடுத்துக்கொள்ள வேண்டும் என்றும் கேட்டுக்கொள்ளுகிறேன்.

இரண்டாவது நாம் மத்திய அரசாங்கத்தினிடமிருந்து சில இனங்களில் பணத்தை பெற்று வருகிறோம். அவர்களுடைய ஆலோசனையின் பேரில் பல காரியங்களை செய்வதற்கு என்று பணம் வாங்கி வருகிறோம். அவைகளை மானியங்கள் மூலமாக வாங்கி வருகிறோம். அவர்களிடமிருந்து தொகை நமக்கு சரிவர வரவில்லை என்று தெரிய வருகிறது. ஆகவே அப்படி வரக்கூடிய தொகையையும் நாம் கட்டாயமாக பெறுவதற்கு வழிவகை செய்ய கடமைப்பட்டிருக்கிறோம். நமக்குக் கிடைக்க வேண்டிய மானியத் தொகை உண்மையிலேயே சரியானபடி கிடைக்க ஏற்பாடு செய்ய வேண்டும். அதற்கு வேண்டிய கவனமும் செலுத்த வேண்டும். அவற்றை நாம் உரிமையுடன் கேட்க கடமைப்பட்டிருக்கிறோம். அவற்றைப் பெறுவதற்கு துணிச்ச

[திரு. மு. சண்முகம்] [2nd July 1962

லாக அவர்களை நாம் கேட்க வேண்டும் அந்த வகையிலும் நமது வருவாயை அதிகப்படுத்திக்கொள்ளலாம். அதற்கு இந்த மந்திரி சபை நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும். மத்திய அரசினிடமிருந்து நாம் எதிர்பார்த்த அளவு தொகை கிடைக்கவில்லை என்று அறிக்கையில் சொல்லப்பட்டிருக்கிறது. அதைக் கட்டாயப் படுத்தி வாங்குவதற்கு நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும். அதன் மூலம் நமது வருவாயை அதிகரித்துக்கொள்ள வேண்டும். மேலும் நாம் அதிகமாக பெறுவதற்கு வேண்டிய நடவடிக்கைகளையும் எடுத்துக்கொள்ள வேண்டும். அந்த வகையிலும் நமது வருவாயை அதிகரித்துக் கொள்வதற்கு வேண்டிய முயற்சியையும் எடுத்துக்கொள்ளலாம். அந்த முறையில் இப்பொழுது ஏற்பட்டுள்ள பற்றுக்குறையை சமாளித்துக்கொண்டு சரிப்படுத்திக்கொள்ளலாம். இப்படி நாம் பல துறைகளிலே முயற்சித்தும் பற்றுக்குறை மேலும் இருக்கக்கூடுமானால், செலவினங்களைக் குறைப்பது பற்றி நாம் யோசிக்கவேண்டும். நிர்வாகத் துறையில் அனேக இலாக்காக்கள் உண்மையிலேயே பொது மக்களுடைய நலனுக்கும் சேவைக்கும் பயன்படாத வகையில் இருக்கின்றன என்பதை எனக்கு முன்பு பேசிய கனம் உறுப்பினர்களில் ஒருவர் ஜாடையாகக் குறிப்பிட்டார்கள். பொது மக்கள் மத்தியிலும் இத்தகைய கருத்து பரவலாக இருந்துவருகிறது என்பதும் பெரும்பாலான கனம் உறுப்பினர்களுக்குத் தெரிந்திருக்கும். அப்படி உண்மையிலே சில இலாக்காக்கள் மக்களுடைய நலன்களுக்கும் சேவைக்கும் பயன்படாத நிலையில் இருக்குமானால், அமைச்சர் அவர்கள் அதைப் பரிசீலித்து, அப்படிப் பயன்படாத இலாக்காக்களை எடுத்துவிட்டு, அதன்மூலம் செலவைக் குறைத்து வரவு செலவைச் சரிகட்டிக் கொள்ளலாம் என்று நான் குறிப்பிட ஆசைப்படுகிறேன்.

குறிப்பாகச் சொல்லவேண்டுமானால், உரம் தயாரிப்பதற்கு என்று திட்டமிடப்பட்டு, அனேக ஊர்களில் உரத் தயாரிப்புத் திட்டத்திற்காக ஒரு இலாகா வேலை செய்வதாகவும், அது வேகமாக விருத்தி அடைந்து, பயன்பட்டு வருவதாகவும் நிதி நிலை அறிக்கையில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. 'விவசாயம் என்றாலே என்ன என்பது திராவிட முன்னேற்றக் கழக உறுப்பினர்களுக்குத் தெரியாது' என்று குறைப்பட்டுச் சொல்லிக்கொண்ட எனது நண்பரை நான் கேட்டுக்கொள்கிறேன், இதைப் பற்றி அவர்கள் சிந்தித்து இருப்பார்களா என்று. உரம் தயாரிப்பதற்கு குழி வெட்டவும், அதிலே எருவைப் போட்டு மூடி வைக்கவும் மக்களுக்குச் சொல்லிக்கொடுக்க ஒரு இலாகா ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. பள்ளிக்கூடத்திலே படித்து வந்த ஒரு சிறுவன் நீடித்த காலமாக பரம்பரையாக விவசாயத் தொழிலிலே பழக்கப்பட்ட ஒரு விவசாயிக்குப் பள்ளிக்கூட மாணவனுக்குச் சொல்லிக் கொடுப்பதுபோல, குழி வெட்டவும், அதிலே பெருக்கியெடுத்த குப்பைகளைப் போட்டு மூடவும், இந்த விதமாக உரத்தைத் தயாரிப்பதற்கும் சொல்லித்தர வேண்டுமா என்று நான் கேட்கின்றேன். இதையெல்லாம் இலாகாவினர் சொல்லித்தான் விவசாயி கற்றுக் கொள்ளவேண்டுமா? நம்முடைய நாட்டிலுள்ள விவசாயிகளைக்

2nd July 1962] [திரு. மு. சண்முகம்]

குறித்து அந்த விதத்தில்தானு நம்முடைய நண்பர் கருதுகிருர் என்று நான் கேட்கின்றேன். உண்மையிலேயே அந்த இலாகா வானது விவசாய மக்களுக்கு உரம் தயாரிப்பதில் பயன்படு கிறதா என்பதைச் சிந்தித்துப் பார்த்திருப்பாரானுல், அது பய னற்ற இலாகா என்ற முடிவுக்கு அவர் வரலாம். இப்படி நான் கூறும்போது, அந்த நிர்வாகத் துறையின் முக்கியத்துவத்தைக் குறைத்துப் பேசுவதற்காகப் பேசவில்லை. உண்மையிலேயே, பயன்படாத சில இலாகாக்கள் நிர்வாகத்தில் இருக்கின்றன என்பதற்காகத்தான் சொல்கின்றேன். எந்த நிர்வாகத்திலும் தேவைப்படாத இலாக்காக்கள் இருக்கத்தான் செய்யும் என்ரு லும், இதைப் பரிசீலனை செய்து, தேவையில்லாதவற்றை அகற்றத் தைரியமாக முன்வரவேண்டுமென்று நான் அமைச்சரவையைக் கேட்டுக்கொள்கின்றேன்.

உள்ளூர் எருப் பொருள்களைப் (லோகல் மன்யூர்ஸ்) பெருக்கு வது பற்றிக் குறிப்பிட்டிருக்கிருர்கள். மொத்தம் 375 வட்டாரங் களில் 202 வட்டாரங்களில் இந்தத் திட்டம் அமுலில் இருந்து வருவதாகக் குறிப்பிட்டிருக்கிறது. இந்த வட்டாரங்களில் இத் தகைய உர உற்பத்திக்கு உத்தியோகஸ்தர்களை அரசாங்கம் நிய மித்திருக்குமானுல், அதற்கான செலவினங்கள் எவ்வளவு ஏற்பட் டிருக்கலாம் என்பதைச் சிந்திக்க வேண்டுமென்று நான் கேட் கின்றேன்.

இப்படி அவசியமற்ற நிலைமையில் உள்ள செலவினங்களைக் கூடுமானவரையில் குறைத்துக் கொள்வதற்கு முயற்சி செய்ய வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கின்றேன். இந்த வகையி லெல்லாம் நாம் செலவினங்களைக் குறைத்தும், நிதி நிலையைச் சரிகட்ட முடியவில்லையென்ருல், கடைசியில் வரி விதிப்பைத் தவிர வேறு வழியில்லையென்ருல், அப்பொழுதுதான் வரி விதிக்க வேண்டும். அப்படிச் செய்ய முன்வரும் ஆட்சியைத்தான் மக்களைப் பாதுகாப்பதற்கு உள்ள ஆட்சி என்று மக்கள் கருது வார்கள். மக்களுடைய கருத்தை உணர்ந்து செய்யக்கூடிய சர்க்காராக இருந்தால், அப்படித்தான் செய்யவேண்டும்.

மின்சாரத்தின் மீது உள்ள வரியை உயர்த்துவது பற்றி நிதி நிலை அறிக்கையிலே குறிப்பிடப்பட்டிருக்கிறது. 'லோ டென் ஷன்' மின்சாரம் முக்கியமாக விவசாயத் துறைக்கு உபயோகப் படுத்தப்படுகிறது. இதன்மீது மேற்கொண்டு அதிகக் கட்ட ணங்கள் விதித்து விவசாயிகளிடமிருந்து பெறுவது நீதியற்ற முறையாகும். விவசாயிகளிடத்திலிருந்து பல துறைகளிலே வரி வசூலிக்கப்படுகிறது. அவர்களை மேலும் பல கஷ்டங்களுக்கு உட்படுத்துவது நியாயமல்ல. லோ டென்ஷன் மின்சாரத்தை உபயோகிக்கும் விவசாயிகளிடமிருந்து அதிகக் கட்டணத்தை வாங்குவது முறையற்ற செயலாகும் என்று நான் தெரிவித்துக் கொள்கிறேன். அந்த வரி கைவிடப்பட்டுவிடும் என்று நான் நினைக்கின்றேன்.

பஸ்கள் மீது வரி உயர்த்தியிருப்பது ஓரளவு நாம் விரும்பக் கூடியதாக இருந்தாலும், அந்த உயர்த்தப்பட்ட வரியானது பிரயாணம் செய்யும் பொது மக்களிடமிருந்து வசூலிக்கப்படாம

[திரு. மு. சண்முகம்] [2nd July 1962

விருக்கும் வகையில் அவர்களுக்கு ஒரு பாதுகாப்பு கொடுக்க வேண்டும். பஸ் மீது அதிக வரியை நாம் உயர்த்துவதற்கு பொதுப் படையாகக் கொண்டிருக்கும் காரணம், பஸ் முதலாளிகள் அதிக லாபத்தை அடைந்து வருகிறார்கள் என்பது. அவர்களிடமிருந்து வரி வசூலிப்பது நியாயமானது என்ற பொதுக் கருத்தைக்கொண்டு தான் வரி உயர்வு ஏற்படுத்தப்பட்டிருக்கலாம் என்று நான் கருதுகிறேன். பஸ் முதலாளிகள் அந்தத் தொகையை பஸ்களில் பிரயாணம் செய்யும் பிரயாணிகளிடமிருந்து வசூலிக்க வழி இல்லாத வகையில் அவர்களுக்கு ஒரு பாதுகாப்பு இருக்கவேண்டுமென்று நான் தெரிவித்துக்கொண்டு, இதோடு என்னுடைய உரையை முடிக்கின்றேன். வணக்கம்.

* திரு. கே. டி. கோசல்ராம் : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த நிதி நிலை அறிக்கையைத் தயாரித்த நிதி அமைச்சர் கனம் திரு. பக்தவத்சலம் அவர்கள், மிகுந்த சிரமம் எடுத்துக் கொண்டு அதைத் தயாரித்திருக்கிறார். நிதி நிலை அறிக்கையைப்பற்றிப் பேசும்போது, நிதி அமைச்சர் எப்போதுமே அங்கத்தினர்களால் தாக்கிப் பேசப்படுவது இயற்கை. அது புதிது அல்ல. இந்த நிதி நிலை அறிக்கையைச் சீர்தூக்கிப் பார்ப்போமானால், ஆறு கோடி ரூபாய் 'பட்ஜெட் டெபிஸிட்' இருக்கக்கூடும் என்று முதன் முதலில் கூறப்பட்டது. அதன் பின்னால், இப்பொழுது 'பட்ஜெட் டெபிஸிட்' பத்து கோடி ரூபாயாக ஆக்கப்பட்டிருக்கிறது. மத்திய அரசாங்கத்திலுள்ள நிதிக் கமிஷனிலிருந்து நமக்குக் கொடுக்கப்பட்ட அந்த நான்கு கோடி ரூபாயும் இதில் சேர்க்கப்பட்டிருக்கிறது. ஆக, பதினான்கு கோடி ரூபாய் 'பட்ஜெட் டெபிஸிட்' இருக்கிறது. அதைச் சரிக்கட்ட வரி போட்டுத்தான் ஆக வேண்டும். திட்டங்களுக்காகப் போடப்படும் எந்த வரியையும் எதிர்த்துப் பேசுவது என்றால், அது பொறுப்பற்ற தன்மையில் பேசப்பட்டதாகத்தான் அர்த்தமாகும். 'என் ஊருக்கு அதைப் போடுங்கள், இதைப் போடுங்கள், அதைக் கொண்டு வாருங்கள், இதைக் கொண்டுவாருங்கள்' என்று எந்த அங்கத்தினரும் சொல்லாமல் இருக்க முடியாது. இங்கு சொல்லாமல், வெறுமனே சர்க்காரை மாத்திரம் தாக்கிப் பேசிவிட்டுப் போய் விட்டால், ஊரிலே மக்கள் நம்மைத் தாக்கக் கட்டாயம் ஆரம்பித்து விடுவார்கள். ஆகவே, மிகத் திறமையாகத்தான் எதிர்க் கட்சி நண்பர்களும் பேசுகிறார்கள்.

புதுக்கோட்டையிலிருந்து வந்திருக்கும் கனம் அங்கத்தினர், பேசும்போது, தங்களுடைய ஊருக்குப் பல திட்டங்கள் வந்திருப்பதாக ஒன்றன் பின் ஒன்றாகக் கூறிவிட்டு, இன்னும் திட்டங்கள் வரவேண்டுமென்று சொன்னார்கள். அது இயற்கை. கட்டாயம் வரத்தான் வேண்டும்.

இன்னொரு கனம் அங்கத்தினர், 'எங்காவது வகை கண்டு பிடித்துக்கொள்ளுங்கள்' என்று பேசினார். அட்டையைத் தூக்கிக்கொண்டு போய்ப் பணம் கேட்டால் கொடுத்துவிடுவார்களா என்ன? கனம் திரு. பக்தவத்சலம் அவர்கள் அட்டையைத் தூக்கிக்கொண்டு தெருவிலே போய், 'பணம் கொடு' என்று

2nd July 1962] [திரு. கே. டி. கோசல்ராம்]

சொன்னால் யாராவது பணம் கொடுப்பாரா? கொடுக்கமாட்டார்கள். அட்டையைத் தூக்கிக்கொண்டுதான் போகமுடியுமா? ஆகவேதான் வரி போடுகிறார்கள். ஆனால், அந்த வரி, திட்டங்களுக்குச் செலவழிகிற மாதிரி இருக்கவேண்டும். அது ஊதாறித்தனமாக எங்கோ போவதாக இருக்கக்கூடாது. திட்டத்திற்காகவே இந்த வரிகள் எல்லாம் செலவழிக்கப்படுகின்றன என்பதை எடுத்துக் காட்டியிருப்பார்களேயானால் இதை சாங்ஷன் செய்வதற்கு ஆட்சேபணை இல்லை. ஏராளமாகச் செலவினங்கள் அதிகரித்துக்கொண்டே போகின்றன. செலவினங்களுக்கு பல கோடி ரூபாய் என்று வரி போட்டு திட்டத்திற்குச் செலவிடாமல் ஊதாரித்தனமாகச் செலவிடப்படுமேயானால் இந்த பட்ஜட்டை நானும் வரவேற்க முடியாத நிலைமையில் இருக்கிறேன் என்று வருத்தத்தோடு தெரிவித்துக்கொள்கிறேன். இது தவிர வேறு எது வேண்டுமானாலும் பேசலாம். அங்கத்தினர்கள் மக்களிடத்தில் இருந்து வோட்டு வாங்கி வந்திருக்கிறார்கள் என்றால், அமைச்சர்களும் கூடச் சொல்லிக்கொள்ளலாம். "நாங்களும் வோட்டு வாங்கித்தான் வந்திருக்கிறோம்" என்று. கவர்னர் விஷயம் வேறாக இருக்கலாம். யாரோ நியமனம் செய்தார்கள், யாரோ நியமனம் செய்யப்பட்டார்கள் என்று எண்ணலாம். அப்படி அமைச்சர்கள் இல்லை. இவர்களும் மக்களுடைய வோட்டைப் பெற்றுத்தான் வந்திருக்கிறார்கள்.

ஆனால் ஒரு விஷயத்தை கனம் நிதி அமைச்சர் அவர்களுடைய கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். எத்தனை கோடி ரூபாய் வரி கட்டாமல் இந்த நாட்டில் இந்த தேசத்தில் ஏமாற்றுகின்றவர்கள் இருக்கிறார்கள். இதை ஒத்துக்கொள்ளத்தான் வேண்டும். ஒன்றிரண்டு கோடி ரூபாய் அல்ல. முன்னூறு, நானூறு கோடி ரூபாய் வரியை ஏமாற்றுகின்ற 'திமிங்கிலங்கள்' இருக்கிறார்கள். அந்தக் கணக்குப்படி தமிழ்நாட்டிலும் அத்தகைய 'திமிங்கிலங்கள்' இருக்கிறார்கள். வரியே கொடுக்காமல் ஏமாற்றுகின்ற பெரும்பெரும் பூதங்கள் இந்த நாட்டில் இருக்கின்றன. திரு. பக்தவத்சலமாக இருந்தாலும் சரி, திரு. பண்டித நேருவாக இருந்தாலும் சரி வரி கொடாமல் ஏமாற்றுவதற்கு அஞ்சாத பூதங்கள் இருக்கின்றன. மொத்தத்தில் முன்னூறு கோடி என்றால் தமிழ்நாட்டில் மட்டும் 30 கோடிக்கு குறையாமல் வரியை ஒளிப்பவர்கள் இருக்கிறார்கள். இப்படி வரியை யாரும் ஏமாற்றாது இருப்பதற்கு என்ன நடவடிக்கை எடுத்துக்கொண்டார்கள் என்று அறியவிரும்புகிறேன். விவசாயத்தைப்பற்றி விரிவாகச் சொல்லிவிட்டு அவர்கள் தலையிலேயே கையை வைப்பதற்கு அவசியம் இருக்கிறதா? அவ்வாறு என் வைக்கவேண்டும் என்று அறியவிரும்புகிறேன். பஸ்கள் மீது வரி போடுங்கள். குதிரைப் பந்தயத்தின் மீது வரி போடுங்கள். வரியே போடக்கூடாது என்று நான் சொல்லவில்லை. வரிபோடுகிறார்களே, வரி போடுகிறார்களே என்று கூச்சலிடுகின்றவர்கள் இருக்கிறார்கள். திரு. ராஜாஜி முதன்மந்திரியாக இருந்தபோது ஆயிரம் ரூபாய்க்குமேல் டாக்ஸ் கட்டுகிறவர்களுக்குச் சிறிது வரியை உயர்த்தியபோதுகூட கம்யூனிஸ்டுகள் உட்பட எல்லோரும்

[திரு. கே. டி. கோசல்ராம்] [2nd July 1962

அதை எதிர்த்தார்கள். ஐயோ வரி போடுகிறார்களே என்று எதற்கெடுத்தாலும் கூச்சலிடுகின்றவர்களோடு நான் சேர விரும்பவில்லை. அவர்களுடைய கூச்சலைப் பற்றியும் கவலையில்லை. நம்முடைய சர்க்காரின் கொள்கை விவசாயத்தைப் பெருக்க வேண்டும் என்பதுதான். அதற்காகத்தான் விவசாயத்துறையில் பலவிதமான திட்டங்களைப் போட்டு நிறைவேற்றிக்கொண்டிருக்கின்றோம். காங்கிரஸ் ஸ்தாபனத்தினுடைய கொள்கையே நில வரியை அடியோடு எடுத்துவிடவேண்டும் என்பது தான். நிலத்திலிருந்து புதிய வரிகள் மூலம் வரக்கூடியது ஒரு கோடி ரூபாய் சொச்சம். நிலவரியை எடுத்துவிட்டாலும் கூட நமக்கு இன்னும் எத்தனையோ புதுப்புதுத்தறைகள் இருக்கின்றன வரி போடுவதற்கு. காங்கிரஸ் ஸ்தாபனமும் சரி, காங்கிரஸ் அரசாங்கமும் சரி நிலவரியை எடுத்துவிடவேண்டும் என்று சவிஸ்தாரமாகப் பேசியிருக்கிறார்கள். அதேசமயத்தில் நில வரியைப் போடுகிறோம். ஏக்கருக்கு 22 ரூபாய் வரி செலுத்துகிறவர்களுக்கு வரியை இரட்டிப்பாக்குவது என்றால் 44 ரூபாய் ஆகும். இதில் 60% தண்ணீர்த் தீர்வை என்று கூட்டினால் அவன் எப்படிக் கட்டுவான்? திருநெல்வேலி, தாம்பிரபரணி பாசன நிலங்கள் இருக்கின்றன. இரண்டாந்தர பாசன ஆதாரங்களின் கீழ் 100 சதவிகிதம் உயர்த்துவது என்றால் அவனால் அந்த வரியைப் பொறுக்க முடியுமா? அதுவும் இந்த வரி ஒரு ஏக்கரா, இரண்டு ஏக்கரா என்று நிலம் வைத்துக்கொண்டிருக்கிற சிறிய விவசாயிகளுக்கும் உண்டா?

**கனம் திரு. எம். பக்தவத்சலம்:** கனம் அங்கத்தினர் திருநெல்வேலி மாவட்டத்தைப்பற்றிச் சொல்வது நாளை பத்திரிகையில் வந்தால் அங்குள்ள மக்களை வீணை பீதிக்குள்ளாக்கும். இது பற்றி நான் பதிலளிக்கும்போது என்ன குறிப்பிடுகிறேன் என்பதையும் கவனித்துக்கொண்டு, உண்மையைத் தெரிந்துகொண்டபின் பேசுவது நலம்.

**திரு. கே. டி. கோசல்ராம்:** மட்டற்ற மகிழ்ச்சி. அமைச்சர் அவர்கள் இதுபற்றி ஏதாவது சொல்ல இருக்கிறார்களா என்று அறியத்தான் விரும்பினேன். பொறுப்பற்ற தன்மையில் நான் பேசவில்லை. விஷயத்தைப் பின்னால் விளக்குவதாகச் சொன்னதற்கு மீண்டும் நன்றி. இம்மாதிரி நிலவரி போடுவதென்பது சரியான கொள்கையல்ல. செலக்ட் கமிட்டியில் இருக்கும்போதே என்னிடம் சிலர் சொன்னார்கள், "எல்லாம் கணக்குப் போட்டு வைத்துவிட்டோம்" என்று. பெரிய அளவில் இன்று நிலம் எதுவும் கிடைக்கப்போவதில்லை, நில உச்சவரம்புச் சட்டத்தினாலும். விவசாயிகளுக்கும் அந்தச் சட்டத்தினால் பெரும் அளவுக்கு எவ்வித நன்மையும் ஏற்பட்டுவிடவில்லை. ஆகவே இரண்டு ஏக்கர், ஒரு ஏக்கர் என்று வைத்துக்கொண்டிருக்கக் கூடிய விவசாயிகளின் தலையில் இந்தமாதிரியாகக் கை வைக்காமல் 30 கோடி அளவில் சர்க்காருக்குச் செலுத்தவேண்டிய வரியைச் செலுத்தாமல் ஒளித்துக்கொண்டிருக்கிற திமிங்கிலங்களைப் பிடித்து வெளியில் கொண்டுவர முடியுமா என்று பார்க்கவேண்டும்

2nd July 1962] [திரு. கே. டி. கோசல்ராம்]

என்பதாகக் கேட்டுக் கொள்கிறேன். ஸ்ரீமான் பக்தவத்சலம் அவர்கள் நமது மந்திரி சபையில் இருப்பவர்களில் நல்ல நிர்வாகத் திறமை படைத்தவர். நல்ல அநுபவம் வாய்ந்தவர். ராஜதந்திர மாக எதையும் செய்யக்கூடியவர். தமிழ்நாட்டில் மட்டும் 30 கோடிக்கும் அதிகமாக வரியை ஒளிக்கக்கூடிய பூதங்களை வெளிக் கொணர்வதற்கு அவரால் வழிகண்டுபிடிக்க முடியாது என்று என்னுல் சொல்ல முடியாது. அதை அவர்கள் உடனடியாகக் கண்டுபிடித்தால் போதும், அதற்கு சரியான யோசனை பண்ணினுல் போதும், இந்த வரிகளை உடனடியாக நிவர்த்தி பண்ணலாம். எங்கேயோ வாதிடுகிருர்கள் எத்தனை ஆயிரம் சம்பாதிக்கின்ற வக்கீல்கள் இருக்கிருர்கள் . . . இன்னும் சினிமா ஆடுகிறவர்கள் இருக்கிருர்கள் . . . ஒரு லட்சம் ஒரு படத்திற்கு ஒப்பந்தம் . . . ஆனல் ரசீது பத்தாயிரம் தான். பாக்கி 90 ஆயிரம் போகிற இடம் தெரியாமல் போய் புதைக்கப்படுகிறது. இவையெல்லாம் யாருக்கும் புரியாதா? வாங்குகிறபடி இவர்களிடத்தில் இருந்து வரிப்பணத்தை வாங்குவதற்கு ஏற்பாடு செய்தால், இப்போது ஆடுகிற ஆட்டங்களெல்லாம் ஆடமாட்டார்களில்லையா? அப்போது எங்கே ஆடுவார்கள்? இதையெல்லாம் யோசனை பண்ணிச் செய்தால் இப்போது புதிதாகக் கொண்டு வந்திருக்கிற வரிகளுக்கே இடமில்லை. ஏய்த்துப் பிழைக்கிறவன் தலையில் கை வைக்க வேண்டுமேயன்றி உழைத்துப் பிழைக்கின்றவர்களின் தலையில் கை வைப்பது நியாயமே இல்லை.

12-30 p.m.

கரும்புக்கு செஸ் வரியைக் கூட்டுகிருர்கள். போடுவதைப்பற்றி வேண்டாம் என்று சொல்லவில்லை. ஆனல் இந்தத் தொகை கரும்பு அபிவிருத்திக்கே செலவழிக்கப்பட வேண்டும். காட்டன் சம்பந்தப்பட்டவரையில் எப்படி அலாட் செய்கிறீர்களோ அப்படியே இத்தொகை முழுவதையும் கரும்பு அபிவிருத்திக்கே அலாட் பண்ணினுல் நன்ருக இருக்கும்.

கல்வி இலாகா சம்பந்தப்பட்டவரையில் தேசிய ஒருமைப் பாட்டுக்கு எதிராக எதிர்க்கட்சிக்காரர்கள் மட்டும் இருக்கிருர்கள் என்று சொல்ல முடியாது. இவ்விலாகாகாரர்களே இருக்கிருர்கள் என்பதை என்னுல் நிரூபிக்க முடியும். அவ்வாறு யார் இருக் கிருர்கள் என்பதை நானே ஆராய்ந்து இரும்புக்கரங்கொண்டு கண்டுபிடிப்பேன் என்று திரு. பக்தவத்சலம் அவர்கள் பேசியிருக் கிருர்கள். சந்தோஷம். அதேநேரத்தில் நம் நாடு தமிழ்நாடு, நம் மொழி தமிழ்மொழி, தமிழ்நாடு திராவிட நாட்டில் ஒரு பகுதி என்று புத்தகம் எழுத சொல்லக்கூடியவர்கள் கல்வி இலாகாவில் இருக்கிருர்கள். இதை ஏதோ எதிர்க்கட்சிக்காரர்கள் மட்டும் செய்வதாக எண்ணவேண்டாம். இதுபோலவே ஆசிரியர்களுடைய சங்கங்களை எடுத்துக்கொள்ளுங்கள். டீச்சர்ஸ் யூனியன், டீச்சர்ஸ் அஸோஸியேஷன் அப்புறம் டீச்சர்ஸ் பெடரேஷன் என்று படிப் படியாக மூன்று ஆசிரியர்கள் சங்கங்கள் இருக்கின்றன. அவர்கள் வாங்குவது சர்க்கார் சம்பளம். ஆனல் செய்வது முழுக்க முழுக்க அரசியல் தவிர வேறு ஒன்றும் இல்லை. அரசாங்க ஊழியர்களுக்கு, அரசாங்க அனுமதியுள்ள ஒரு சங்கம் தான் இருக்கவேண்டும்

[திரு. கே. டி. கோசல்ராம்] [2nd July 1962

என்று சொன்னால், ஏன் அந்த விதிக்கு அப்பாற்பட்டதான ஒரு சங்கம் ஆசிரியர்களுக்கு இருக்கவேண்டும்? இன்றைக்குக் கல்வி இலாகாவில் உள்ளவர்களே இந்தச் சீர்கேட்டுக்குக் காரணம். ஆகவே கல்வி இலாகாவின் நிர்வாக இயந்திரத்தை ஒழுங்கு படுத்தினால், எதிர்க்கட்சிக்காரர்களைப்பற்றிப் பேசுவதற்கே இட மிருக்காது. நிர்வாக இயந்திரம் சரியாக செயல்படவில்லை என் பதற்கு உதாரணம் மந்திரி பூவராகன் அவர்கள் கோவையில் ஒரு பஞ்சாயத்து யூனியன் ஆபிசுக்குச் சென்றபொழுது ஒரு கிளார்க்கைத் தவிர மற்றவர்கள் எல்லாம் ஆபிசில் இல்லை என்று சொல்லியிருக்கிறார்கள். இவ்விதமுள்ள நிர்வாக இயந்திரத்தைத் திருத்தி அமைக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

12-30 p.m. * திரு. சீ. ராமசாமி நாயுடு: கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இவ்வருஷத்திய நிதிநிலை அறிக்கையைப் பற்றிப் பேச ஒரு சந்தர்ப்பம் கொடுத்ததற்கு மிக்க சந்தோஷப்படுகிறேன். நம்முடைய அமைச்சரவர்கள் இந்த நிதிநிலை அறிக்கையை மிக நல்ல முறையில் தயாரித்து, நல்லதொரு திட்டமாகச் சமர்ப்பித் திருக்கிறார்கள். சமர்ப்பிக்கப்பட்ட இந்த அறிக்கையை இந்த மன்றத்திலுள்ள அரசியல் கட்சியினர் எல்லாம் தங்களுடைய அரசியல் உரைகல்லில் உரைத்துப்பார்க்க வேண்டிய ஒரு சந்தர்ப்பம் இருப்பதன் காரணமாக, ஒவ்வொருவரும் தங்களுக்குத் தோன்றியவாறு அபிப்பிராயங்களைச் சொல்வார்கள். தங்கள் தங்கள் கட்சிக் கொள்கைகளுக்கேற்ப இருக்கிறதா என்று பார்ப் பார்கள், அதற்கேற்ப அவர்கள் பேசுவார்கள். அவ்வாறு பேச வேண்டியது நியாயமும் கூட. ஜனங்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட சட்டசபைப் பிரதிநிதிகள் தங்கள் தங்களுடைய தொகுதியில் இருக்கும் குறைகளை கூற இம்மாதிரி வரவு செலவுத் திட்டம் சமர்ப்பிக்கும் நேரம் தவிர வேறு நேரம் கிடைப்பதில்லை. அங்கத் தினர்கள் பேசும் காலத்தில் "எங்களுடைய தொகுதியில் ஒரு ரூபாய்க்கு வாய்க்கால் கட்டவில்லை, 1½ ரூபாய்க்கு ரஸ்தா போடவில்லை, 2 ரூபாய்க்கு பள்ளிக்கூடம் கட்டவில்லை, 3 ரூபாய்க்கு குளம் வெட்டவில்லை, 4 ரூபாய்க்குத் தேக்கம் வெட்ட வில்லை" என்று பேசிக் கொண்டே போகிறார்கள். நமக்கு இருக்கக்கூடிய சிறு வருவாயைக் கொண்டு காரியம் செய்ய வேண்டியிருப்பதால், நாம் பேசக் கூடியதெல்லாம் சிறு திட்டங்கள் தான். அதிகமாக நினைக்க இங்கே வாய்ப்பு இல்லை. கிணற்றுத் தவளை போல் நம்முடைய மாகாண அரசாங்கத்துக்கு வரம்பு இருப்பதால் வருமானம் ஓரளவுக்குத்தான் இருக்கிறது. ஆகவே, சொற்பமாக நினைத்துத்தான் நாம் காரியங்களைச் செய்ய முடியும். இந்தச் சமயத்தில் பாராளுமன்றத்தில் பெரிய விஷயங்களைப் பற்றிப் பேசுகிறார்கள். அதைப்பற்றி இங்கே பேசுவது பொறுத்த மானது அல்லவென்றாலும் கூட நமக்குப் பேசுவதற்குச் சந்தர்ப்பம் ஏற்படும் நேரத்தில் அதைப் பற்றிப் பேசித்தான் ஆக வேண்டியிருக்கிறது. குறுகலான இந்த ராஜ்யத்தில் நாம் இருப்பதால் குறுகலான மனதுடன், குறுகலான எண்ணத்தையே எண்ணிக் கொண்டிருக்கிறோம். 'எங்கள் ஊரில் இரண்டு ஹரிஜனங்களுக்குக்கூட வீடு கட்டிக் கொடுக்கவில்லை' என்று

2nd July 1962] [திரு. சீ. ராமசாமி நாயுடு]

இங்கே கூறுகிறார்கள். பாராளுமன்றத்திலோ ஆயிரக் கணக்கான வீடுகள் கோடிக்கணக்கான ரூபாய் செலவாகக்கூடிய திட்டங்களைப் பற்றிப் பேசுகிறார்கள். நாம், இருக்கும் பணத்தைக் கொண்டு ஜனங்களுக்கு நன்மை அளிக்கும் வகையில் வரவு செலவுத் திட்டம் தயாரிக்கப்பட்டிருக்கிறதா என்ற முறையில் தான் வரவு செலவுத் திட்டத்தைப் பரிசீலனை செய்யவேண்டுமே தவிர கடிவாளம் இல்லாத குதிரை மாதிரிப் பேசிக் கொண்டிருக்கக் கூடாது. ஆகவே, பரவலாகப் பேச வேண்டிய இடம் வேறு. அங்கே சென்றவர்கள் பெரிய விஷயங்களைப் பற்றிப் பேசுகிறார்கள். நம்முடைய சம்பத் அவர்கள் குறுகிய தென் மண்டலத்திலிருந்து அங்கே சென்று, பெரிய விஷயங்கள் பரிசீலனை செய்யப்படுவதைப் பார்த்துச் சின்னதை விட்டு விட்டுப் பெரியதிலே புகுந்து விட்டார்.

இங்கே பேசுகிற மெம்பர்கள் சிலர் அரசியல் கண்ணோட்டத்தைப் புகுத்திப் பேசுகிறார்கள். சுபிட்சகாலப் பொருளாதாரத்தை மேற்கொள்ள வேண்டுமென்று சொல்கிறார்கள். வரவு செலவுத் திட்டம் இந்தச் சபையில் சமர்ப்பிக்கப்படும் நேரத்திலேயே விலைவாசியைக் குறைக்க வேண்டுமென்று ஒரு சாரார் ஆர்ப்பாட்டம் செய்ததைப் பார்த்தோம். சுபிட்ச காலப் பொருளாதாரம் என்ன என்பதைச் சிந்தித்துப் பார்க்க வேண்டும். மரக்கால் படி கொண்டு அரிசியை அளந்த அந்தக் காலத்தில் ரூபாய்க்கு 4, 5 படி அரிசி கிடைத்து வந்தது. அந்தக் காலத்தில் நம்முடைய நாட்டு மக்கள் எவ்வளவு பேர் இரவிலே நெல் சோறு சாப்பிட்டு வந்தார்கள்? வெள்ளைச்சோறு பிள்ளைகளுக்கு வாங்குவதற்கென்று ஒரு கிராமத்தில் 30, 40 பேர் பெரிய வீட்டைத்தேடி வருவார்கள். வீட்டில் விசேஷம் ஏதாவது இருந்தால் தான் புஞ்சைச் சோறுக்குப் பதிலாக நெல் சோறு சாப்பிடுவார்கள். இன்றைக்கு ரூபாய்க்கு முக்கால் படி அரிசி விற்கும் காலத்தில் எல்லோரும் நெல் சோறு சாப்பிடுகிறார்கள். முன்பு, ஜப்பானில் இருந்தும் மற்ற இடங்களில் இருந்தும் கெஜம் மூன்றணுவுக்கு ஜவுளி கிடைத்துக் கொண்டிருந்த காலத்தில் உடல் முழுவதும் மூடுவதற்குத் துணி வாங்குவதற்குக் கூடச் சக்தியற்று இருந்தார்கள். இன்றைக்குக் கெஜம் 3 ரூபாய் விற்றால் கூட, சாதாரணமாக 14 முதல் 20 கெஜம் வரையில் துணி உடுத்திக்கொள்ளக் கூடிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது. திட்டத்தை நிறைவேற்றியிருப்பதன் காரணமாக மக்களுடைய பொருளாதாரம் உயர்ந்திருப்பதை நாம் இதன் மூலம் உணர்ந்து கொள்ள முடியும். முன்பெல்லாம் நம்முடைய மக்கள் பாதரட்சை வேண்டுமென்றால் பழைய தோலில் இரண்டு அட்டை வைத்துத் தைத்துக் கொள்வார்கள். அதைக் கூட காலையில், இரவில், குளிர் காலத்தில் போட்டுக் கொள்ளமாட்டார்கள். ஆனால் இப்போது 10 ரூபாய். 15 ரூபாய் கொடுத்து பாதரட்சைகளை அலட்சியமாக வாங்குகிறார்கள். முன்பெல்லாம் ஒரு வீட்டில் பிள்ளை பிறந்து விட்டால், அந்த ஊரில் இருக்கும் பெரிய வீட்டுக்காரர் வீட்டுக்குச் சென்று மணி பார்த்துக்கொண்டு வருவார்கள். இப்போது ஒவ்வொருவரும் கையைத் திருப்பித் திருப்பி மணி பார்த்துக்கொள்

[திரு. சீ. ராமசாமி நாயுடு] [2nd July 1962

கிறார்கள். இவையெல்லாம் திட்டமிட்ட பொருளாதாரத்தின் காரணமாக வந்ததுதான். தேர்தலிலே ஒரு கட்சிக்காரர் இன்னொரு கட்சிக்காரரைப் பார்த்துப் பணம் செலவழித்து வெற்றி கொண்டுவிட்டார் என்று சொல்கிறார்கள். 'உன்னிடம் ஒரு பெட்டிப் பணம் இருந்தால் என்னிடம் 5 பெட்டிப் பணம் இருக்கிறது' என்று பேசுகிறார்கள். "என்னை ஆதரித்து நிற்பவர்கள் பணக்காரர்களாக இருக்கிறார்கள்" என்று சொல்கிறார்கள். ஐந்து லட்சம் தன் கையில் இல்லாமல் தன்னுடைய ஆதரவாளர்களின் கையிலே இருக்குமானால் பொருளாதாரத்திலே எவ்வளவு தூரம் முன்னேறியிருக்கிறோம் என்பதைப் புரிந்து கொள்ள முடியும். இப்போதெல்லாமல் கம்பு, கேழ்வரகு போன்றவற்றை வாங்குவார் இல்லை. நான் விவசாயம் செய்கிறேன். கூலி ஆட்கள் 410 ரூபாய் அளவுக்குக் கூலி பெறுகிறார்கள்.

அதனால் மாதம் ரூபாய் 60க்கு மேல் தான்யம் வாங்குபவர்கள் இல்லை. வாங்க மாட்டேன் என்கிறார்கள். நான் அர்களைக் குறை கூறவில்லை. தொழில் அதிகமாக வளர்ந்து வரும்போது, மக்கள் அதிகமாக சம்பாதிக்க வாய்ப்பு இருக்கும்போது சோளத்தையும் கம்பையும் வாங்கிக்கொண்டுபோய் குத்திப் புடைத்து கூழாக்கி நான்கு மணி நேரம் அடுப்பில் வைத்து சமைப்பதை விட்டு வேலை முடிந்து கடைக்குச் சென்று ¼ படி அரிசி வாங்கி அடுப்பில் போட்டால் அரை மணி நேரத்திற்குள்ளாக சாப்பாடு ஆகிவிடுகிறது. சாப்பிட்டு விட்டு பின் வேறு வேலை பார்க்கலாம் என்று இதை வாங்க மாட்டேன் என்கிறார்கள். வாங்கும் பொருளாதார சக்தி அவர்களுக்கு இருக்கிறது. நாட்டின் பொருளாதாரம் நன்கு இருப்பதால்தான் இன்று விலைவாசி கூடிக்கொண்டு போகிறதே தவிர வேறொன்றுமில்லை. ஆக, சுபிட்ச காலப்பொருளாதாரத்தைப் பற்றி பேசுவது என்பது பொருந்தாததொரு காரியம். சுபிட்ச காலம் வருமென்று நான் நினைக்கவில்லை, ஆனால் மாற்றுக் கட்சித் தோழர்கள் சுபிட்ச காலம் வேண்டுமென்று சொல்லி ஒரு சிலருக்கு நல்ல பிள்ளைகள் ஆக நினைக்கலாம். சுபிட்ச காலம் என்றால், அம்மோனியம் சல்பேட் மூட்டை ஒன்றுக்கு 15 ரூபாய் என்று கொடுக்கப் போகிறோமா, பழையபடி நாள் ஒன்றுக்கு கூலி 4 அணா என்று கொடுக்கப் போகிறோமா, இன்று ஒரு ஜோடி மாடு 1,000 ரூபாய்க்கு வாங்குவதை 100 ரூபாய்க்கு கொடுக்க முடியுமா? இவை நடக்காத காரியம். இப்படி நிச்சயமாக நடக்காது என்று தெரிந்தும் கூட, மக்களின் சபலபுத்தியை தட்டிக் கொடுக்கும் விதத்தில், உங்களுக்கு அதிக வாய்ப்பு கிடைக்கச் செய்கிறோம் என்று சொல்லலாமே தவிர உண்மையில் தர முடியும் என்று யாராலும் சொல்ல முடியாது. யார் கையில் அரசாங்கம் இருந்தாலும் சரி, சுபிட்சகாலம் வர ஆசைப்பட்டால் உற்பத்தி செய்பவர்களுக்கு வேறு விதமாக உதவவேண்டும். ஒரு படி அரிசி 4, 6 அணாவிற்கு வாங்க வேண்டுமென்றால் குறை பாட்டிற்கு சர்க்காரிலிருந்து ஈடு செய்யவேண்டும். அதுவும் மக்கள் வரிப் பணத்திலிருந்துதான் ஈடு செய்து வாங்கிக் கொடுக்கமுடியுமே தவிர வேறு முறையில் சுபிட்ச காலத்தை கொண்டு வர முடியும் என்று நினைப்பது தவறு. சுபிட்ச கால

2nd July 1962] [திரு. சீ. ராமசாமி நாயுடு]

பொருளாதாரத்தை மறந்து விடவேண்டும். விவசாய மக்கள், தொழிலாள மக்கள் இவர்களின் நிலை உயர்ந்திருக்கிறது. அவர்களது வாய்ப்பு அதிகரித்திருக்கிறது. கிராமங்களில் தொழில் வளர்ந்திருப்பதால் வீட்டில் இருந்த பெண்கள் இன்று வருமானத்தைப் பார்க்கிறார்கள். அவர்களது வருமானம் கூடியிருக்கிறது. கூடியிருக்கும் வருமானத்தைக் குறைப்பதென்றால் அது ஆகக்கூடிய காரியம் அல்ல. கூடியிருக்கும் வருமானத்தையும் ஏறியிருக்கும் கிரயத்தையும், 24 ஆண்டுகளுக்கு முன்னர் இருந்த பொருளாதாரத்தையும் பார்த்து, (ப்ரொப்போர்ஷனேட்டாக) விகிதாசாரப்படி அது சரியாகயிருக்கிறதா என்று பார்க்க வேண்டும். 4 அணா கூலி வாங்கி ரூபாய்க்கு ஐந்து படி அரிசி வாங்கிச் சாப்பிட முடியாதவன் இன்று மூன்று ரூபாய் கூலி வாங்கி ரூபாய்க்கு முக்கால்படி அரிசி வாங்கிச் சாப்பிடுகிறான் என்றால், அந்தக் காலப் பொருளாதார நிலையையும் இன்றைய பொருளாதார நிலையையும் ஈக்வேட் செய்து பார்த்து, சராசரி பார்த்து எது சரி என்று பார்க்க வேண்டும். அப்பொழுது செருப்பு 1½ ரூபாய்க்கு வாங்க முடியும், அது சக்கிலியன் தைத்த செருப்பாயிருக்கும். இன்று 12 ரூபாய்க்கு செருப்பு வாங்குகிறார்கள், தெருவெல்லாம் செருப்புக்கடைகளாயிருக்கின்றன. கிரயம் கூடி விட்டது என்ற மாத்திரத்தில் பொருளாதாரக் குறைவு ஏற்பட்டு விட்டது, வாங்கும் சக்தி குறைந்து விட்டது என்று சொல்வதில் அர்த்தமில்லை. வாழ்க்கைப் புள்ளி 50 ஆக இருந்தது 500 ஆக ஆகும்போது விலை உயர்ந்தால் குற்றமில்லை. விவசாய, தொழிலாள மக்களின் வருமான வாய்ப்புக்கள் அதிகமாயிருக்கும்போது இன்றைய பொருளாதார நிலை நல்ல நிலையில் இருக்கிறது என்பதை ஒப்புக்கொள்ள வேண்டும். வளர்ந்து வரும் கல்வியையும், வளரவேண்டிய விவசாயத்தையும் தொழிலையும் வளர்ப்பதற்கு இந்த அறிக்கையில் நல்ல ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன என்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். விவசாயத்திற்கு இன்னும் அதிக வசதிகள் செய்து கொடுத்தால் நன்றாக இருக்கும். (மணியடிக்கப்பட்டது) விவசாயத் துறையை மேற்கொண்டிருந்த நிதியமைச்சர் அவர்களுக்கு அது நன்றாகத் தெரியும், விவசாயிகளுக்கு பயிர் இன்ஷூரன்ஸ் திட்டம், கால்நடை இன்ஷூரன்ஸ் திட்டம், மிளகாய் வத்தல் போன்ற விளைபொருள்களை விற்பதற்கு சட்டபூர்வமான மார்க்கட்டுகள் இவைகளை எல்லாம் செய்து கொடுத்தால் விவசாயிகள் இந்த வரவு செலவுத்திட்டத்தை சந்தோஷமாக ஏற்றுக்கொள்வார்கள். பஞ்சாயத்துக்களை ஏற்படுத்திக்கொடுத்து அதனால் நன்மைகள் பல அடைந்திருக்கும், அடைய வாய்ப்பிருப்பதைக் காணும் கிராம மக்கள் அவர்கள் செஸ்ஸை நூற்றுக்கு நூறு (செண்ட் பர்ஸன்ட்) உயர்த்தியிருப்பதைப் பார்க்கும்போது நல்ல காரியத்திற்காக பயன்படும் எந்த வரியையும் மக்கள் வரவேற்பார்கள், ஏற்றுக்கொள்ளத் தயாராயிருக்கிறார்கள் என்பது நிதர்சனமாகத் தெரிகிறது. விவசாயத்திற்குள்ள மின்சாரக் கட்டணம் உயர்த்தப்பட்டிருக்கிறது, அது மக்களைப் பாதிக்கும் என்றார்கள். விவசாயத்திற்கு உபயோகப்படுவதற்கு 10 சத

[திரு. சீ. ராமசாமி நாயுடு] [2nd July 1962

விகிதம் என்றால் 7.7 பைசாவாக உயருகிறது. சுற்றுப்புற ராஜ்யங்களில் 9 முதல் 11 பைசா வரை இருக்கிறது. இது, இதோடு நின்று விடுமென்று எதிர்பார்க்கிறேன். நில வரியை முற்றிலும் ரத்து செய்துவிட வேண்டுமென்ற கொள்கையிருக்கிறது என்று திரு. கோசல்ராம் அவர்கள் சொன்னார்கள். வாஸ்தவம். இன்று வரி போட ஆரம்பித்திருக்கிறார்கள். இது எங்கு போய் நிற்குமோ என்று பேசுகிறார்கள், மக்களிடையே பிரசாரம் செய்ய ஆரம்பித்து விட்டார்கள். இன்றைய பற்றுக்குறையை சரி செய்ய தற்காலிகமாகவுள்ள வரிகளாக இது இருக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். நஞ்சை நிலங்களுக்கு, 3, 4 தர நிலங்களுக்கு இந்த வரி உயர்வு இருக்கக்கூடாது. அதை கவனிக்க வேண்டும்.

பல்வேறு துறைகளில் முன்னேறி வரும் நமது மாநிலத்தில், ரஸ்தாக்கள் போட்டு வருகிறோம், ஊர் தவறாமல் பள்ளிகள் அமைத்து வருகிறோம், பள்ளிக் கட்டிடங்கள் கட்டிக் கொடுக்கிறோம். குடிதண்ணீர் வசதிக்கு தேக்கங்கள் கட்டிக் கொடுக்கிறோம், இப்படி பல வசதிகள் செய்து கொடுக்கிறோம். ஆக பற்றுக்குறை ஏற்படும்போது மக்களின் நன்மைக்காக சில வரிகள் போட்டால் மக்கள் ஏற்றுக் கொள்வார்கள், ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள் என்ற உதாரணத்தைக் காட்டினேன். அதை ஏற்று நல்லமுறையில் ஒத்துழைப்பார்கள் என்று கூறிக் கொண்டு நமது நிதிநிலைமையை அனுசரித்து செவ்வையாக செலவிடப்பட ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறதா, மக்களுக்கு நன்மை அளிக்கிறதா என்பதை குறிக்கோளாகக்கொண்டு எல்லோரும் பரிசீலிக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டு நல்ல முறையில் திட்டத்தைத் தயாரித்துக் கொடுத்த நமது அமைச்சர் அவர்களுக்கு எனது பாராட்டுதல்களைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

* **திரு. ம. கமலநாதன்:** பெருமதிப்பிற்குரிய உதவி சபாநாயகர் அவர்களே, நேற்றைக்கு முன் தினம் 1962-63-ம் ஆண்டு நிதி நிலை அறிக்கை இந்த மன்றத்தில் படிக்கப்பட்டது. முடிந்து நாங்கள் எல்லாம் வெளியே செல்லும்போது எங்களிடம் சுமக்க முடியாத அளவிற்கு புத்தகங்கள் கொடுத்து அனுப்பப்பட்டன. வரியையும் சுமந்து கொண்டு புத்தகத்தையும் சுமந்து கொண்டு போகிறோம், இது எவ்வளவு வேதனையாகயிருக்கிறது என்று பக்கத்திலுள்ள நண்பரிடம் சொல்லிக்கொண்டிருக்கும்போது, இதெல்லாம் கடந்த பத்தாண்டு சாதனைகள், நீங்கள் எல்லாம் இதை சுமந்துதான் தீரவேண்டும் என்று காங்கிரஸ் உறுப்பினர் ஒருவர் சொன்னார்கள். சுமந்து கொண்டேயிருக்கிறோம், இன்னும் சுமப்பதற்கு எந்தளவு போட முடியுமோ அதை போட்டுக் கொண்டேயிருக்கிறீர்கள். வரியினால், மத்திய அரசாங்கம், மாநில அரசாங்கம், பஞ்சாயத்து யூனியன், பஞ்சாயத்து இப்படி நான்கு முனை தாக்குதல் என்ற அளவில் கிராம மக்கள் பெரிதாக பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். பஞ்சாயத்துக்களில் வரி அதிகமாக விதிக்கப்படுகிறது. குறிப்பாக வீட்டு வரியைப் பற்றி சொல்ல ஆசைப்படுகிறேன். எல்லா வீடுகளுக்கும் வரி விதிக்கப்

2nd July 1962] [திரு. ம. கமலநாதன்]

பட்டிருக்கிறது. கடந்த எட்டு ஆண்டுகளாக அந்த வரி விதிக்கப்பட்டு அது வசூலிக்கப்படாமல் இருந்ததை இந்த ஆண்டு, ("டைம் பார்" ஆன கேஸ்களை) 3 ஆண்டுகளுக்கு மேற்பட்டு காலாவதியான வரித் தொகையை கண்டிப்பாக வசூலிக்க வேண்டுமென உத்தரவு பிறப்பிக்கப்பட்டு கலெக்டர் அவர்கள் நடவடிக்கைகள் எடுத்ததால் பல கிராம அதிகாரிகள் சஸ்பென்ட் செய்யப்பட்டிருக்கிறார்கள். காலாவதியானதை கட்டவேண்டியதில்லை என்ற நியதி இருக்க எட்டு வருடப் பாக்கித்தொகையை கட்ட வேண்டுமென்று வற்புறுத்துவதற்கு எந்தச் சட்டம் இடம் கொடுக்கிறது என்று தெரியவில்லை.

அடுத்து, இந்த நிலவரி கடந்த 30 ஆண்டுகளாக ஏற்றப்படவில்லை என்று நிதி அமைச்சர் அவர்கள் சொல்லியிருக்கிறார்கள். ஆனால் யூனியனுக்கு யூனியன் 25 ந. பை., 35 ந. பை., 55 ந. பை., 80 ந.பை., 90 ந.பை. என்று வரி விதிக்கப்பட்டிருக்கிறது. பத்து ரூபாய் என்று முன்பு இருந்தால் இப்போது அதற்கு தகுந்த அளவில் மேலும் பத்து என்ற முறையில் வரி உயர்த்தப்பட்டிருக்கிறது. ஆகவே இவைகள் எல்லாம் போட்டிருந்தும் இப்போது முப்பது ஆண்டுகளாக வரி ஏற்படவில்லை என்று சொல்வது எந்த அர்த்தத்தில் என்று தெரியவில்லை.

அடுத்து, எஸ்டேட் கிராமங்களாக இருந்ததை எல்லாம் செட்டில்மென்ட் செய்து ரயத்வாரியாக மாற்றப்பட்ட பிறகு, அதற்கே அதிகமான அளவில் வரி கொடுத்துக்கொண்டிருக்கிறார்கள். அப்படியிருக்க இப்போது போடப்பட்டிருக்கக்கூடிய வரியையும் சேர்த்து எப்படி தாங்கப்போகிறார்களோ தெரியவில்லை.

அடுத்து, ஸ்டாம்ப் கட்டணத்தின் மீது போடப்பட்டிருக்கும் வரியில் ஐந்து சத விகிதம் ஸ்தல ஸ்தாபனங்களுக்கு கொடுக்கப்பட்டு வருகிறது. இதிலிருந்து இன்னும் அதிகப்படுத்தினால் அந்த கிராம மக்கள்தான் பாதிக்கப்படுகிறார்கள். பஞ்சாயத்து யூனியன் தலைவர் என்ற முறையில் அப்படி அதிகப்படுத்தும் வரியை பஞ்சாயத்து யூனியன்களுக்கு கொடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்து, காட்டிலாக்காவினர் கொடுக்கின்ற கொடுமைகளினால் மக்கள் பல விதத்தில் துன்பப்படுகிறார்கள். காடுகள் எல்லாம் எஸ்டேட் கிராமங்களாக இருந்த போது நல்ல முறையில் இருந்தன. நல்ல மகசூலும் இருந்தது. அரசாங்கம் எடுத்துக்கொண்ட பிறகு காடுகள் எல்லாம் மிகவும் மோசமான நிலைமையில் இருக்கின்றன. நீர் மட்டம் மிகவும் குறைந்து கொண்டே வருகிறது. ஆகவே காடுகள் இன்னும் அதிகமாக இருந்தால்தான் மழை சரியாக பெய்யும் என்று சில நிபுணர்கள் சொல்லிக்கொண்டிருக்கிறார்கள். ஆனால் இப்போதுள்ள நிலைமையை எடுத்துக்கொண்டால் காடுகள் எல்லாம் அழிந்துவிடக் கூடிய நிலைதான் இருந்து கொண்டிருக்கிறது. ஆகவே இதன் மீது அரசாங்கம் தக்க கவனம் செலுத்த வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

[திரு. ம. கமலநாதன்] [2nd July 1962

மேலும் பஞ்சாயத்து யூனியன்களுக்கு கடந்த அக்டோபரில் கொடுக்கப்பட்ட புறம்போக்குகளில் எல்லாம் ஆக்கிரமிப்புக்கள் தான் இருந்து கொண்டிருக்கின்றன. இவ்விதம் ஆக்கிரமிப்புக் கள் செய்தவர்களின் மீது எந்தவிதமான நடவடிக்கையும் எடுக் காமல் அரசாங்கம் சலுகை கொடுத்துக்கொண்டிருக்கிறது. இதை நான் எதற்காகச் சொல்லுகிறேன் என்றால், புறம்போக்குகளில் மரங்களை வைப்பதற்காக நிதி ஒதுக்கி இருக்கிறார்கள். ஆனால் அது செலவாகவே இல்லை. இப்படி ஆக்கிரமிப்பு செய்திருப்பவர் களை அப்புறப்படுத்தினால் தான் அதில் மரங்களை நட முடியும். அதற்கு அரசாங்கம் நடவடிக்கை எடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

கவர்னர் அவர்கள் உரையின் மீது நடந்த விவாதத்தில், ஆரம் பக்கல்வி நல்ல முறையில் நடந்து கொண்டு வருகிறது என்றும், உலகமே பாராட்டக்கூடிய வகையில் நடந்து கொண்டிருக்கிறது என்றும் அமைச்சர் அவர்கள் பதில் சொல்லியிருக்கிறார்கள். இதில் நான் ஒரு விஷயத்தை குறிப்பிட விரும்புகிறேன். அமைச்சர் அவர்கள் கோபித்துக்கொள்ளக் கூடாது என்றும் கேட்டுக் கொள்கிறேன். உண்மையிலேயே இந்த மதிய உணவுத் திட்டம் நல்ல முறையில் நடக்கிறதா, மாணவர்கள் எல்லாம் இதில் நல்ல முறையில் பயன்பெறுகிறார்களா என்பதை சற்று சிந்தித்துப் பார்க்க வேண்டும். ஏதோ நான் குறை சொல்லவேண்டும் என்பதற்காக இதைச் சொல்லவில்லை. இதைக்குறித்து இங்கிருந்து கொண்டு அறிக்கைகள் மூலமாக பார்த்து சொல்லிவிட்டால் போதாது. நேரில் போய் பார்ப்பவர்களுக்குத்தான் இது விளங்கும். பொதுமக்கள் கொடுக்கும் நன்கொடை மூலமாகத் தான் இந்த மதிய உணவுத் திட்டம் நடைபெறுகிறது என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் நன்கொடை வசூல் ஆவது இல்லை. ஒரு பள்ளிக்கூடம் ஆரம்பிக்கும்போது டெப்யூடி இன்ஸ்பெக்டர் வந்த உடன், இந்த இடத்தில் "மதிய உணவு கமிட்டி" (மிட் டே மீல் கமிட்டி) ஏற்படுத்தி விட்டீர்களா என்று கேட்கிறார்கள். சரியாகவோ தப்பாகவோ எப்படியாவது இந்த கமிட்டி அமைத்து விட வேண்டும் என்று இந்த இன்ஸ்பெக்டர் ஆசிரியர்களை மிரட்டு கிறார்கள். இந்த நிலையில் இன்னும் அதிகமான பள்ளிக்கூடங்களை ஆரம்பிக்கப்போகிறார்கள். அதைப் பார்த்து நாம் பெருமைப் படுகிறோம். ஆனால் பள்ளிக்கூடங்களில் இருக்கிற ஆசிரியர்களைப் பார்த்தால் பயிற்சி பெறாத ஆசிரியர்கள் தான் அதிகமாக இருக்கிறார்கள். குறிப்பாக சேலம் மாவட்டத்தை எடுத்துக் கொண்டால் அதை இரண்டாக பிரிக்கப் போவதாக அறிந்து மிக பெருமையாககூட இருக்கிறது. குறிப்பாக வடக்கு வாழ்கிறது, தெற்கு தேய்கிறது என்று சொல்லும் தாங்கள் சேலம் மாவட்டத்தைப் பொறுத்த வரையில் வடக்கு சேலம் தேய்கிறது தெற்கு சேலம் வாழ்கிறது என்று தான் சொல்ல வேண்டி யிருக்கிறது. அந்த அளவில் வடக்கு சேலம் மிகவும் பின்தங்கி யிருக்கிறது. சேலம் பிரியப் போகிறது என்றும், அதில் வடக்கு சேலத்திற்கு கிருஷ்ணகிரி தலைநகராக ஆகலாம் என்று பத்திரிகையில் பார்த்த உடனேயே தர்மபுரியில் இருப்பவர்கள்

எல்லாம் கட்சிகளாக சேர்ந்து இங்கு வந்திருக்கிறார்கள். அமைச்சர் அவர்களைகூட சந்தித்திருப்பார்கள் என்று நினைக்கிறேன். கிருஷ்ணகிரியைப் பொறுத்தவரையில், இந்த இடம் தான் தலைநகருக்கு ஏற்றதாக அமைந்திருக்கிறது. இரண்டு நாஷனல் ஹைவேஸ் சந்திக்கின்ற ஓர் இடமாக இருக்கிறது. நல்ல கட்டிட வசதியிருக்கிறது. மற்ற எல்லா வசதிகளும் அமைந்திருக்கின்றன. ஆகவே அதிகமான அளவில் "ப்ரஷர்" இருக்கிறது என்பதற்காக தர்மபுரிக்கு மாற்றினாலும் கூட, அதன் பின்னால், துக்ளக் தர்பார் போன்று திரும்பவும் கிருஷ்ணகிரிக்கு மாற்றவேண்டிய நிலைமை ஏற்படும் என்பதை இப்போதே தெரிவித்துக்கொள்கிறேன். எதிர்கட்சியிலுள்ள அங்கத்தினர் சொல்லுகிறேன் என்ற அளவில் இதை எடுத்துப் பார்க்காமல் உண்மை நிலை என்ன என்பதைப் பார்த்து முடிவு எடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

ஆரம்பக் கல்வியைப் பொறுத்தவரை, கட்டிடத்திற்காக கிராண்ட் கொடுக்கின்ற விஷயத்தில், ஒரு மாணவனுக்கு 15 ரூபாய் என்ற அளவில் ஒதுக்கியிருக்கிறார்கள். ஆனால் பருகூர் பஞ்சாயத்து யூனியன் பகுதியை எடுத்துக்கொண்டால், 3,000 மாணவர்கள் சேருவார்கள் என்று கணக்கிடப்பட்டு 15 ரூபாய் விதம் 45 ஆயிரம் ரூபாய் ஒதுக்கியிருக்கிறார்கள். ஒவ்வொரு பள்ளிக்கூடத்திற்கும் 8,000, 9,000 ரூபாய் என்று கணக்குப் போட்டுப்பார்த்தாலும் சுமார் 10 அல்லது 11 பள்ளிக்கூடங்கள் தான் கட்ட முடியும். அப்படியிருக்கும்போது இப்போது இருக்கும் 89 பள்ளிக் கூடங்கள், புதிதாக ஆரம்பிக்கப்படவிருக்கும் 10 பள்ளிக்கூடங்கள், முன்னால் இருப்பது எல்லாம் சேர்த்து பார்க்கும்போது 100 பள்ளிக்கூடங்களுக்கு கட்டிடம் கட்டுவதற்கு நிதி எங்கே யிருக்கிறது? ஆகவே கட்டிடங்களுக்கு தகுந்தவாறு கட்டிட கிராண்ட் வழங்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். குறிப்பாக வடக்கு சேலத்தில் பயிற்சி பெறாத ஆசிரியர்கள்தான் அதிகமாக, இருக்கிறார்கள். அவர்கள் ஆசிரியர் பயிற்சி பெறுவதற்கு எந்தவிதமான வசதியும் பக்கத்தில் இல்லை. ஆகவே அங்கேயே ஒரு ஆசிரியர் பயிற்சி பள்ளி அமைக்கவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். ஹைஸ்கூல்களை பொறுத்தவரை, 4,400 ரூபாய் பொதுமக்கள் கட்டவேண்டும் என்று அரசாங்கம் சொல்லுகிறது. அப்படி எல்லா இடங்களிலிருந்தும் பணம் கிடைப்பது கஷ்டமாக இருக்கும். ஆகவே எந்த இடத்தில் உண்மையாக பள்ளிக்கூடம் தேவையோ அந்த இடத்தில் பள்ளிக்கூடத்தை அமைத்துக் கொடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

லாரிகளுக்கு இப்போது வரி போடப்பட்டிருக்கிறது. கிருஷ்ணகிரியிலிருந்து சென்னைக்கு ஒரு லாரி புறப்படுகிறது என்றால், இதனிடையே இருக்கும் எல்லா போலீஸ் ஸ்டேஷன்களிலும் மாமூல் கொடுத்துத்தான் தீர வேண்டும்.

விவசாயத்தைப் பொறுத்தவரையில், தருகின்ற புல்டோஸர்கள் எல்லாம் பழுதுபட்டு அங்கங்கே இருப்பதாக காங்கிரஸ் உறுப்பினர் அவர்கள் சொன்னார்கள். அதோடு முன்பு இதற்கான

[திரு. ம. கமலநாதன்] [2nd July 1962

வாடகை 16 ரூபாய் என்றிருந்தது, இப்போது 25 ரூபாய் என்று உயர்த்தப்பட்டிருப்பதால், பல விவசாயிகள் இதை உபயோகிக்க முடியாமல் இருக்கிறார்கள். ஆகவே இதன் வாடகையை குறைக்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டு என் உரையை முடித்துக் கொள்கிறேன். வணக்கம்.

1-00 p.m. * திருமதி சி. கொளந்தையம்மாள்: கனம் உதவி சபாநாயகர் அவர்களே, நம்முடைய நிதி, கல்வி இலாகா அமைச்சர் அவர்கள் இந்த 1962-63-வது ஆண்டுக்குரிய நிதிநிலை அறிக்கையில் பல்வேறு நல்ல திட்டங்கள் இந்த ஆண்டு நிறைவேறப் போவதைப்பற்றிக் குறிப்பிட்டிருக்கிறார். தொடர்ந்து ஐந்தாண்டுக் காலத்தினுடைய திட்டங்களை உள்ளடக்கி மிக அழகாக இந்தச் சபையின் முன்பாக நிதிநிலை அறிக்கையை சமர்ப்பித்து இருக்கின்றதைக் குறித்து அவர்களுக்கு எனது நன்றியையும், வணக்கத்தையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

சிறப்பாக, 39 பள்ளிகள் பெண்களுக்காக திறக்கப்பட்டிருக் கின்றன. அதற்காக பெண்களின் சார்பாக நான் எனது நன்றியை அவர்களுக்கு தெரிவித்துக் கொள்கிறேன். சென்னையிலே பெண் களுக்காக பாலிடெக்னிக் நிறுவி இருக்கிறார்கள். அதற்காகவும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொண்டு, இதைப்போல் கோவை, மதுரை, திருநெல்வேலி போன்ற இப்போதுள்ள பெரிய ஜில்லாக்களுக்கு ஏற்படுத்துவதோடு, தொடர்ந்து மற்ற ஜில்லாக் களிலும் இந்த பெண்களுக்கான பாலிடெக்னிக்குகள் ஏற்படுத் தினால், இப்போது சீனியர் பேசிக் பள்ளியில் படிக்கக்கூடிய மாணவர்கள் இடம் கிடைக்காமல் கஷ்டப்படக்கூடிய நிலைமை நீங்கும் என்பதை இந்த இடத்திலே நான் ஞாபகப்படுத்திக் கொள்ள விரும்புகிறேன். எஸ்.எஸ்.எல்.சி. பாஸ் பண்ணினவர்கள் வேலைக்கு போகவேண்டுமென்று சொன்னால், வேலை கிடைப் பதில்லை. ஆசிரியர் பயிற்சிக்கு போனாலும் இடம் கிடைப்பதில்லை. பாலிடெக்னிக்குகளை அதிகமாக ஏற்படுத்தினால், பெண்களும் தொழிற் கல்வியிலே தாராளமாக முன்னேறுவதற்கு வாய்ப்பு இருக்கும் என்பதை நான் இந்தச் சமயத்திலே தெரிவித்துக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக, 6-ஆம் வகுப்பிலிருந்து தமிழ் ஆசிரியர்கள் இந்த ஆண்டிலிருந்து கட்டாயமாக நியமிக்கப்பட வேண்டுமென்று கனம் அமைச்சர் அவர்கள் உத்தரவு பிறப்பித்திருக்கிறார்கள். கடந்த ஐந்தாண்டு காலமாக எனது பேச்சிலே கல்வி மான்ய கோரிக்கையின்போது நான் கூறிக்கொண்டு வந்தது நிறைவேறி இருப்பதினால், அதற்காக நான் எனது நன்றியையும், வணக்கத் தையும் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். எல்லா உயர்நிலைப் பள்ளிகளிலும் தமிழ் ஆசிரியர்கள் நியமிக்கப்படுகின்ற உத்தரவு அமுல் நடத்தப்படுகின்றதா என்பதில் நாம் கவனமாக இருக்க வேண்டும். சட்டபூர்வமாக நாம் ஒரு உத்தரவு போட்டு விட்டால் மட்டும் போதாது. என்ன நிலை ஏற்படுகிறது என்பதை நாம் நன்கு கவனித்து, அப்படி நிரந்தரமான ஒரு ஏற்பாட்டைச் செய் கிறார்களா என்று கவனிக்க வேண்டும் என்பதை இந்த சமயத்திலே ஞாபகப்படுத்திக்கொள்ள விரும்புகிறேன்.

அடுத்தபடியாக, மதிய உணவுத் திட்டத்திலே இதுவரைக்கும் கடந்து ஆண்டிலே சில குறைபாடுகள் இருந்தாலும்கூட, திட்டம் நல்ல முறையிலே நடந்து வந்திருக்கிறது. இதற்கென நியமிக்கப்பட்ட குழுவினர், இந்த மதிய உணவுத் திட்டத்தை பராமரித்து வந்தார்கள். இப்போது ஜில்லாவாரியாக பரிசீலனை நடந்து, அங்கிருக்கக்கூடிய கமிட்டியைக் கலைத்துவிட்டு, ஆசிரியர்களே கவனிக்கலாம் என்றிருக்கிறது. இப்படி ஆசிரியர்களே கவனித்து கொள்ளலாம் என்று சொல்லும்போது, ஓராசிரியர்கள் உள்ள பள்ளிக்கூடங்களிலே அங்குள்ள ஒரு ஆசிரியரே இதனைக் கவனித்துக் கொள்வதென்றால் மிகவும் கஷ்டமாக இருக்கிறது; சங்கடமாக இருக்கிறது. ஆகவே, ஓராசிரியர் பள்ளிகளிலே இந்த நிலைமையை உடனே எடுத்துவிட வேண்டும். மற்றபடி 2, 3 ஆசிரியர்கள் இருக்கக்கூடிய பள்ளிகளிலும் இம்மாதிரியான வேலைகளை அவர்களை கவனிக்கச் சொன்னால், அதனால் குழந்தைகளின் கல்வியின் தரம் பொதுவாக பாதிக்கப்படும் நிலைமைதான் ஏற்படுகிறது. ஆகவே, கிராமக் கமிட்டியே இதை கவனித்துக் கொண்டு வந்தால் மிகவும் நல்லது என்பதை இந்தச் சமயத்திலே சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

அடுத்தபடியாக விவசாயம். விவசாயத்திற்கு மிகவும் தேவையானது மின்சாரம், நீர்ப்பாசனம், உரம். இந்த நிதி நிலை அறிக்கையைப் பார்க்கின்றபோது, பருத்திக்கு என உரத்தை ஒதுக்கியிருப்பது குறித்து உண்மையிலேயே எனது மகிழ்ச்சியையும், பாராட்டுதலையும் தெரிவித்துக் கொள்கிறேன். கடந்த காலத்தில் எல்லாம் நீர்ப்பாசன வசதியுள்ள நஞ்சைக்கு, நெல், கரும்பு, வாழை போன்றவற்றிற்கு உரம் வழங்கப்பட்டதே தவிர, பருத்தி போன்ற பயிர் பயிரிடுவோருக்கு உரம் கிடைக்காமல் மிகவும் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தார்கள். ஆகவே, இப்போது பருத்திக்கு உரம் ஒதுக்கியிருப்பதற்காக எங்கள் பகுதி மக்களின் சார்பாக நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். இந்த உரத்தை தாராளமாக விநியோகம் செய்வதற்கு கூட்டுறவு சங்கங்கள் அமைக்க வேண்டுமென்று ஞாபகப்படுத்திக் கொள்கிறேன்.

மேலும், கூட்டுறவு சங்கத்திலிருந்து 500 ரூபாய் கடன் பெறலாம் என்பதற்குப் பதில் இப்போது 3,000 ரூபாய் கடன் பெறலாம் என்று கூறியிருப்பது குறித்து எனது மகிழ்ச்சியையும், நன்றியையும் தெரிவித்துக்கொள்கிறேன். இந்த 3,000 ரூபாயையும் ஒரே ஆண்டில் திருப்பிச் செலுத்த வேண்டுமென்று சொன்னால் மிகவும் கஷ்டமாக இருக்கும். ஆகவே, இந்தத் தொகையை மூன்று ஆண்டு காலத்திற்குள் திருப்பி வாங்கிக் கொள்வதற்கு வேண்டிய நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ள வேண்டுமென்று கூட்டுறவு அமைச்சர் அவர்களை கேட்டுக்கொள்கிறேன்.

விவசாயத்திற்கு அடுத்தபடியாக மின்சாரம். விவசாயத்திற்காக மின்சாரத்திற்கு போடப்படும் வரி 7.7 பைசா என்று சொல்லியிருக்கிறது. அது ஓரளவு அதிகமாக இருந்தாலும், மினிமம் கியாரண்டியை எடுத்து விடுமாறு நான் மீண்டும் வற்புறுத்திக் கூற விரும்புகிறேன். ஐந்தாண்டுக் காலமாக இந்த சட்ட மன்றத்திலே பல முறை இந்த மினிமம் கியாரண்டியைப்பற்றி

[திருமதி சி. கொளந்தையம்மாள்] [2nd July 1962

வற்புறுத்தி வந்திருக்கிறேன். ஆகவே, 7.7 பைசா அதிகமாக இருந்தாலும், இதை எடுத்து விடுமாறு வற்புறுத்திக் கூறிக் கொள்ள விரும்புகிறேன்.

அடுத்தபடியாக பாசன வசதி. நிதி நிலை அறிக்கையில் போட்டிருப்பதிலே மேல் பவானி திட்டம் தவிர, மற்ற திட்டங்கள் எல்லாம் உருவாக்கப்பட்டிருக்கிறது. அது மிகவும் வருந்தத்தக்கது. அதோடு, நான் பஞ்சப் பிரதேசத்து பிரதிநிதியாக இந்த மன்றத்திற்கு வந்திருக்கிறேன். பல்லடம் தாலூகாவிலே இருக்கக்கூடியவர்கள், கோயம்புத்தூரிலே இருந்து பிரதிநிதியாக வந்திருக்கக்கூடியவர், அவிஞசி, காங்கேயம் பகுதியைச் சேர்ந்தவர்களையும் பார்க்கவேண்டும். இந்த மேல் பவானித் திட்டம், இப்போது அவிஞசித் திட்டம் என்று உருவாகி இருக்கிறது. மேல் பவானித் திட்டம் எங்கே என்று கேட்டால் அப்படி ஒன்றும் இல்லை என்று சொல்லப் படுகிறது. தாய் பலகாரம் செய்யும்போது, குழந்தைகள் சீக்கிர மாக பாய்ந்து எல்லா பலகாரங்களை சாப்பிடாமல் இருப்பதற்காக மூடி வைப்பதுபோல், இவர்களும் இதை மூடி வைக்கிறார்கள். அவிஞசி திட்டம் என்றால், அப்போது கோயம்புத்தூரின் நிலைமை என்ன? 30 ஆண்டு காலத்திற்கு முன்பு வாய்க்கால் எடுத்து, மேலும் வேலைகள் நடந்து கொண்டு வந்த இடத்தை விட்டு, மற்ற தாலூகாக்களுக்கு பாசன வசதி என்றால், எங்கள் பகுதி ஏமாந்து போகக்கூடிய நிலைமை தான் ஏற்படும் என்பதைச் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். ஆகவே, கோயம்புத்தூர், பல்லடம், அவிஞசி ஆகிய இடங்களுக்கு இந்த நீரைப் பகிர்ந்து கொடுக்கும் வகையிலே இந்த மேல் பவானித் திட்டம் அமுல் நடத்தப்பட வேண்டும். இதை மிகவும் பணிவோடும், தாழ்மையோடும் கேட்டுக் கொள்கிறேன். இப்படிச் செய்தால் நாங்கள் மிகவும் நன்றி செலுத்தக்கூடியவர்களாக இருப்போம். இந்தத் திட்டம் இல்லை என்றால் நாங்கள் வசிக்கக்கூடிய வறண்ட பிரதேசத்தில் இருக்கக்கூடியவர்களின் கதி என்னவது? எங்கள் பகுதியிலே வசிக்கக்கூடிய விவசாயிகள் மிகவும் பாதிக்கப் படுவார்கள். இந்தச் சமயத்தில் கூட்டுறவு அமைச்சர் அவர்கள் தமது பெருந்துறைப் பகுதியையும் சேர்த்துச் சொல்ல வேண்டுமென்று சொல்கிறார்கள். ஆகவே, கோயம்புத்தூரிலிருந்து பெருந்துறை தாலூகா வரையிலும் இந்த நீர்ப்பாசன வசதி அளிக்கும்படி கேட்டுக்கொள்கிறேன். அதிலே, என்னுடைய தாலூகாவையும் எடுத்துக் கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள் கிறேன். இந்தத் திட்டம் இல்லாமல் எங்களுக்கு எத்தகைய பாசன வசதியையும் செய்துகொடுக்க முடியாது. நாங்கள் 1,300 அடி உயரத்திலே உள்ள மேட்டுப் பிரதேசத்திலே வசிக்கிறோம். ஏற்கனவே வாய்க்கால்கள் வெட்டப்பட்டிருக்கின்றன. ஆகவே, எங்களுக்கும் இந்த வசதியைச் செய்து கொடுக்கவேண்டுமென்று மிகவும் பணிவோடு கேட்டுக்கொள்கிறேன். எங்களை விடமாட்டார் கள் என்ற நம்பிக்கையும் எனக்கு இருக்கிறது.

அடுத்தபடியாக, தொழிலாளர்களுக்கு வைத்திய வசதி கொடுக்க வேண்டுமென்று இருக்கிறது. இந்த வசதியை தொழிலாளர்கள் குடும்பத்திற்கும் கொடுக்க வேண்டுமென்று

2nd July 1962] [திருமதி கி. கொளந்தையம்மாள்]

மிகவும் பணிவோடு கேட்டுக்கொள்கிறேன். இப்போது என்.ஜி.ஓ.-க்களுக்குக் கொடுக்கிறார்கள். அவர்களது குடும்பத்தைச் சேர்ந்தவர்களுக்கும் கொடுக்கிறார்கள். இந்த நிலை தொழிலாளர்களுக்கும் இருக்க ஏற்பாடு செய்யவேண்டும். இந்த வசதியைப் பெருக்க வேண்டுமென்று சொன்னால், முதலாளிகள் தங்கள் லாபத்தில் இதற்கு ஒரு தொகை ஒதுக்க ஒப்புக்கொள்வார்கள். ஆகவே, இதையும் தொழிலாளர்களுக்கு செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

அதேபோல் கல்விச் சலுகை முன்பு 1,200 ரூபாய் வருமான அடிப்படையிலிருந்தது. இப்போது அது ரூபாய் 1,500 ஆக உயர்த்தப்பட்டிருக்கிறது. அதற்காக நான் எனது மகிழ்ச்சியையும், நன்றியையும் தெரிவித்துக்கொள்கிறேன். அப்படியென்றால் மாதம் 125 ரூபாய் வருமானம் உள்ளவர்களுக்கு இப்போது இந்தச் சலுகை கிடைக்கும். இதை 175 ரூபாயாக ஆக்கினால் மில்களிலே வேலை செய்யக்கூடிய தொழிலாளர்களுக்கும் இந்தச் சலுகை கிடைக்குமென்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். ஒரு மாதத்திற்கு 175 ரூபாய் சம்பளம் வாங்கக் கூடியவர், 6 குழந்தைகள் வைத்திருந்தால் எப்படி உயர்நிலைப் படிப்பு அவரால் கொடுக்க முடியும்? இன்றைக்கு சமுதாயத்தில் பெரிய பணக்காரர்களாக உள்ளவர்கள் தங்கள் குழந்தைகளை நல்லமுறையிலே படிக்க வைக்க முடிகின்றது. ஏழைக் குழந்தைகளுக்கும் இந்த வசதி அளிக்கப்படவேண்டுமென்றால், 125 என்பதை 175 ஆக மாற்றியமைக்க வேண்டும். இதனால் பெரும்பாலான தொழிலாளிகள் மிகவும் நன்மை அடைவார்கள் என்பதை சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

அடுத்தபடியாக, நாட்டிலே தொழில்கள் பெருக வேண்டுமென்று நாம் சொல்கிறோம். அப்படி தொழில்கள் தொடர்ந்து நடப்பதற்குப் போதிய நிலக்கரி கிடைப்பதில்லை. நிலக்கரி பற்றாக்குறை என்று சொல்லப்படுகிறது. 12 மாதமும் பாக்டரி தொடர்ந்து நடப்பதற்கு முடியாமல், ஓராண்டிலே 7, 8 மாதங்கள் தொடர்ந்து நடப்பதற்கே நிலக்கரி போதவில்லை. ஆகவே, பாக்கி 3, 4 மாதங்கள் தொழில் பாதிக்கப்படுகிறது. இப்படி தொழில் பாதிக்கப்பட்டாலும், தொழிலாளர்களுக்கு இன்சூரன்ஸ், போனஸ் போன்றவைகள் கொடுக்கவேண்டும். இப்படி நிலக்கரி பற்றாக்குறைக்குக் காரணம், வாகன்கள் இல்லை என்று சொல்லப்படுகிறது. வாகன்கள் இல்லை என்றால், டெல்லிக்கு எழுதி அதிகப்படியான வாகன் கிடைப்பதற்கு வாய்ப்பு ஏற்படுத்த வேண்டும். நிலக்கரி இப்போது 3-ல் ஒரு பாகம் தான் கொடுக்கப்படுகிறது 3 வாகன் நிலக்கரிக்கு, 1 வாகன் கொடுத்தால், எப்படி தொழிலைப் பெருக்க முடியுமென்று சிந்தித்துப் பார்க்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். குறைந்த வட்டிக்கு இப்பொழுது கடன் கொடுத்திருக்கிறார்கள். அதாவது 5½ சத விகிதத்திற்கு கடன் கொடுத்திருக்கிறார்கள். அப்படிக் கொடுத்தும் வொர்க்ஷாப்புகளுக்கு நிலக்கரி இல்லை என்று சொல்லுகிறார்கள். அப்படி இல்லை என்று சொன்னால் அந்த வொர்க்ஷாப்புகள் நிலை என்னவாகும் என்பதை கவனிக்க வேண்டும். ஆகவே வொர்க்ஷாப்புகளுக்கு

[திருமதி சி. கௌந்தையம்மாள்] [2nd July 1962

நிலக்கரி தாராளமாகக் கிடைப்பதற்கு ஏற்பாடு செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அதற்கு ஆவன செய்ய வேண்டும் என்றும் இந்த இடத்தில் ஞாபகப்படுத்த விரும்புகிறேன். ஆகவே நிலக்கரி தட்டு வராமல் இருப்பதற்கான யோசனைகளைக் கூற ஒரு சிறந்த கமிட்டியை அமைக்க வேண்டும் என்றும் கேட்டுக்கொள்கிறேன். அதாவது, எந்த மாதிரி விவசாயத்திற்கு மின்சாரம் வழங்குவது, எப்படி கமிட்டிகளை அமைத்து நல்ல முறையில் இயங்கி வருகின்றனவோ அதே போன்று இதற்கும் ஒரு கமிட்டியை அமைத்து நல்ல முறையில் தட்டு ஏற்படாமல் வழங்குவதற்கு தக்க நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டும் என்று இந்த இடத்தில் ஞாபகப்படுத்த விரும்புகிறேன். அந்தக் கமிட்டி பல ஆலோசனைகளைச் செய்து அவர்கள் சிபாரிசு செய்யக்கூடியவைகள் நல்ல யோசனைகளாக இருந்தால் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்றும் இந்த இடத்தில் ஞாபகப்படுத்த விரும்புகிறேன். விவசாயத் தொழிலாளர்கள், ஹரிஜனங்கள் இவர்களுக்கு நன்மைகள் செய்வதற்கு வேண்டிய நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும். ஸ்காலர்ஷிப்புகள் கொடுக்கும் விஷயத்தில் எல்லா ஏழை குழந்தைகளும் ஸ்காலர்ஷிப் வேண்டும் என்று கேட்கின்றன. இப்பொழுது எல்லோருக்கும் இலவசக் கல்வி வசதி செய்திருக்கிறோம். அந்த முறையில் எல்லா ஏழைக் குழந்தைகளுக்கும் ஸ்காலர்ஷிப் கொடுக்க வேண்டும். கிருஸ்தவ குழந்தைகளாக இருந்தாலும், எந்த சமூகக் குழந்தையாக இருந்தாலும் எல்லோருக்கும் ஸ்காலர்ஷிப்கள் கிடைக்கும் அளவில் இருக்க வேண்டும். இப்பொழுது ஹரிஜன மானியத்திலிருந்து கொடுப்பதற்கு பல கஷ்டங்கள் இருக்கின்றன. அவைகளை தளர்த்தி எந்த விதமான கஷ்டமும் இல்லாமல் இருக்கும்படியாகச் செய்ய வேண்டும். தாழ்த்தப்பட்ட வகுப்பினர், பிற்பட்ட வகுப்பினர் இவர்களுக்கு எந்த விதமான கஷ்டமும் இல்லாத அளவில் ஸ்காலர்ஷிப்கள் கொடுக்க ஏற்பாடு செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். எல்லோரும் இந்தச் சலுகைப் பெறுவதற்கு வகை செய்ய வேண்டும்.

அடுத்தபடியாக கோயம்பத்தூரில் தொழில் பேட்டை அமைப்பதாகச் சொல்லப்படுகிறது. அங்கு 13 யூனிட்டுகள் அமைப்பதாக இருக்கிறது. அதை இரட்டித்து 25 யூனிட்டுகள் அமைக்கும்படியாகக் கேட்டுக்கொள்ளுகிறேன். அங்கே பல பெரிய தொழிற்சாலைகள் இருக்கின்றன. அதனால் அங்கு 25 யூனிட்டுகள் அமைத்தால் தான் வசதியாக இருக்கும். பெரிய தொழிற்சாலைகளுக்கு அருகில் சிறிய தொழிற்சாலைகள் அமைத்தால் தான் வசதியாக இருக்கும். அங்கிருந்து கருவிகளைக் கொண்டு போவதற்கு சௌகர்யமாக இருக்கும். உற்பத்தியாகக்கூடிய பொருள்களை 100 மைல்களுக்கு அப்பால் கொண்டு போவதாக இருந்தால் அதிகப்படியான செலவாகும். அதனால் போக்குவரத்திற்கு அதிகப்படியாக செலவாகலாம். அதனால் போக்குவரத்து செலவு அதிகமாகாமல் இருப்பதற்கு பெரிய தொழிற்சாலைகளுக்கு அருகிலேயே சிறிய தொழிற்சாலைகள் இருக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். ஆகவே அங்கு யூனிட்டை அதிகப்படுத்த வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

2nd July 1962] [திருமதி சி. கொளந்தையம்மாள்]

அடுத்தபடியாக கோயம்பத்தூரில் மருத்துவமனையில் எலும்பு முறிவு சிகிச்சை ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. அதை நான் ரொம்பவும் வரவேற்கிறேன். என் நன்றியை தெரிவித்துக் கொள்ளுகிறேன். அடுத்தபடியாக பெண்கள் கல்வி சம்பந்தமாகச் சொல்லும்போது பெண்களுக்கு ஆஸ்டல் வசதி இல்லை. அதைச் செய்து கொடுக்க வேண்டும். எதிர்க் கட்சி அங்கத்தினர்கள் கோவில்களில் தர்ம கர்த்தாக்களைப் போடும் விஷயமாகப் பேசும்போது எல்லாரையும் போடுவது இல்லை என்று குற்றம் சாட்டினார்கள். அப்படி எல்லோரையும் போடுவது என்பது முடியாது. கடவுளிடம் பக்தி கொண்டவர்களைத்தான் போடவேண்டும். காலையில் சிவ பூஜை செய்துவிட்டு வருகிறவர்களைப் போட்டால்தான் கோவில்கள் நன்றாக நடைபெறும். அப்படியில்லாமல் கடவுளிடம் பக்தி இல்லாதவர்களைப் போட்டால் கோவில் சரிவர நடக்காது. அவர்கள் கோவிலை மூடி வைத்துவிட்டு அங்கு பள்ளிக்கூடங்களை வைப்பதற்குத்தான் முயற்சி எடுத்துக்கொள்வார்கள். ஆகவே கோவில்கள் நல்ல முறையில் நடக்கவேண்டுமானால், அதற்குத் தகுந்தவர்களைத்தான் தர்மகர்த்தாக்களாகப் போட வேண்டும் என்றும், மற்றவர்களைப் போடக்கூடாது என்றும் கேட்டுக்கொள்ளுகிறேன்.

ஏரிகள் சம்பந்தமாக சொல்லும்போது பழைய காலத்தில் இருந்ததைப்பற்றியே இப்பொழுதும் சொல்லிக்கொண்டிருக்க முடியாது. மழை பெய்கிறது ஏரி நிறைகிறது அதனால் எதற்காக வரி போடுவது என்று சொல்லக் கூடாது. ஏரிகள் எல்லாம் வண்டல் படிந்து மேடிட்டிருக்கின்றன. அவைகளையெல்லாம் செப்பனிடவேண்டியதாக இருக்கிறது. பெரிய ஏரிகளாக கட்டி இருக்கிறார்கள். அதனால் அதிகப்படியாக வசதி ஏற்படுகிறது. அதனால் வரி கொடுக்க வேண்டியதாகத்தான் ஏற்படுகிறது. பழைய காலத்தில் இருந்ததைப் போல் அல்ல இப்பொழுது. நல்ல முறையில் ஏரிகள் எல்லாம் கண்காணிக்கப்படுகின்றன. மதகுகள் எல்லாம் பழுதாகி போய்விட்டன. அவைகளையெல்லாம் பழுது பார்க்க வேண்டியதாக இருக்கிறது. அதிகப்படியாக தண்ணீரை தேக்கி வைக்கக்கூடிய நிலைமையில் இப்பொழுது ஏரிகள் எல்லாம் இருக்கின்றன. சுமார் ஆறு வருஷ காலமாக ஏரிகளில் தண்ணீர் தங்குவதற்கு வேண்டிய நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்பட்டு வருகிறது. அதனால் அதிகப்படியாக வரி போட வேண்டியதாகவும் இருக்கிறது. ஏரிகளை அடிக்கடி பராமரிக்க வேண்டியதாக இருக்கிறது. அதனால்தான் அதிகப்படியாக வரி போட்டிருக்கிறார்கள். ஆனால், ஏழை மக்களுக்கு வரி போடவில்லை. பணக்காரர்களுக்குத்தான் வரி போடப்பட்டிருக்கிறது. பஸ் போக்குவரத்தை எடுத்துக்கொண்டாலும் அதிலும் பஸ் முதலாளிகளுக்குத்தான் வரி போடப்பட்டிருக்கிறது. ஏழைகளுக்கு போடவில்லை. பணக்காரர்களிடமிருந்துதான் வரியை வசூலிக்கப் போகிறார்கள். ஆகவே அது சம்பந்தமாக சட்டம் கொண்டு வரும்போது ஏழைகளை பாதுகாக்கும் அளவில் சட்டத்தைக் கொண்டு வரவேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். பஸ் கட்டணம் இப்பொழுதுள்ளபடியே ஒரே மாதிரியாகவே இருக்கவேண்டும். அந்த அடிப்படையில்தான் வரி போட வேண்டும்.

அடுத்தபடியாக பஞ்சுக்கும் பருத்திக்கும் அதிகப்படியான வித்யாசம் இருக்கிறது. அதன் விலையிலும் வித்யாசம் இருக்கிறது. பருத்தி பொதி விலை 200 ரூபாயாக இருக்கிறது. அதன் மேல் வரி போடுவதனால் பணக்காரர்களுக்குத்தான் போட வேண்டும். பருத்தியை விளைவிக்கக்கூடிய ஏழைகளுக்கு பாதகம் ஏற்படும் வகையில் போடக்கூடாது. பஞ்சாக மாற்றி மில்களுக்கு அனுப்பக்கூடியவர்களுக்கு வரி போட்டால் பாதகம் இல்லை. பருத்தியை உற்பத்தி செய்கிறவர்களுக்கு வரி இல்லாமல் இருக்கவேண்டும். பஞ்சுக்கு இப்பொழுது கண்ட்ரோல் இருக்கிறது. மத்திய சர்க்காருக்கு எழுதி அதைத் தளர்த்தவேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். பணக்காரர்கள் தான் டெக்ஸ்டைல் மில்கள் வைத்து கொள்ளை லாபம் அடிக்கிருர்கள். அதனால் அவர்களுக்குத் தான் வரிபோட வேண்டும். பருத்தியை விளைவிக்கக் கூடிய ஏழை மக்களுக்கு வரி போடக்கூடாது. ஆகவே பருத்தியை உற்பத்தி செய்யக் கூடிய ஏழை விவசாயிகளுக்கு பாதுகாப்புக் கொடுக்கவேண்டும் என்று வற்புறுத்திக் கேட்டுக்கொண்டு என் உரையை இத்துடன் முடித்துக்கொள்ளுகிறேன்.

* **திரு. சி. ம. அம்பிகாபதி:** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, 1962-63-ம் ஆண்டு நிதி நிலை அறிக்கையில் இரண்டாவது ஐந்தாண்டு திட்டத்தில் நல்ல பலன் அடைந்திருப்பதாக கூறப்பட்டிருக்கிறது. சில சமயம் உரம் கிடைக்காத நிலைமைத்தான் உற்பத்திக்கு இடைஞ்சலாக இருந்தது. தக்க சமயங்களில் உரம் சரியாக கிடைக்காமல் இருந்தாலும் உற்பத்தி பாதிக்கப்படவில்லை என்று கனம் அமைச்சர் அவர்கள் குறிப்பிட்டிருக்கிருர்கள். சரியானபடி உரம் கிடைக்காமல் இருந்தபோதிலும் 9 லட்சம் டன் அதிகமாகவே விளைந்திருக்கிறது. அதைக் கண்டு உண்மையிலேயே பெருமைப்படவேண்டியதுதான். நாம் மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டம் ஆரம்பத்தில் இருக்கிருேம். இந்த நேரத்தில் நம் நாட்டிலேயே அதிகப்படியான உரத்தை உற்பத்தி செய்வதோடு கூட வெளி நாட்டிலிருந்தும் வரவழைக்கக்கூடிய நிலையில் இருக்கிருேம். தவிர நமது மாகாணத்திலேயே உரத்தை அதிகமாக உற்பத்தி செய்கிருேம். அதை வைத்துக்கொண்டு பார்த்தால் இந்த மூன்ருவது ஐந்தாண்டு திட்ட காலத்தின் இறுதியில் நம்முடைய ராஜ்யத்தில் 17 லட்சம் டன் அளவில் உற்பத்தியைப் பெருக்க முடியும் என்று தோன்றுகிறது. இந்த நிலைமையில் வெளி நாட்டிலிருந்து 25 ஆயிரம் டன் உரம் வந்து நாகப்பட்டணம் துறைமுகத்தில் இருக்கிறது. உரம் அங்கு வந்திருந்தும் அவற்றை வைப்பதற்கு சரியானபடி கிடங்குகள் இல்லாமல் மழையிலும் வெய்யிலிலும் கிடக்கிறது என்பதை கனம் அமைச்சர் அவர்களும் நன்கு அறிவார்கள். அவைகள் கெட்டு விடாமல் காப்பாற்ற வேண்டியதாக இருக்கிறது. அதற்கு வேண்டிய கோடவுன்கள் அமைக்க வேண்டியது அவசியமாக இருக்கிறது. கோடவுன் அமைத்து அதை காப்பாற்ற வேண்டும். ஆகவே அதிகப்படியான கோடவுன்களை கட்ட வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அதற்கு மூலதனம் வேண்டியதாக இருக்கிறது. அத்துடன் உற்பத்திக்கு மூலதனம் மிக மிக அவசியமாக

இருக்கிறது. திட்டங்களை அமைக்கும்போது அதற்கு மூல தனம் வேண்டியதாக இருக்கிறது. உற்பத்திக்கு என்னென்ன தேவையோ அதைச் செய்வதற்கும் மூலதனம் வேண்டியதாக இருக்கிறது. மற்றும் நீர்பாசன வேலைகளும் செய்ய வேண்டிய தாக இருக்கிறது. அவைகளுக்கும் மூலதனம் வேண்டியதாக இருக்கிறது. எந்த திட்டத்தைப் போட்டாலும் அதற்கு மூல தனம் தேவையாக இருக்கிறது. அந்த மூலதனத்தை மக்களிட மிருந்துதான் பெற வேண்டிய தேவை இருக்கிறது. திட்டங்களை நிறைவேற்றுவதற்கு இப்பொழுது வரிகள் போடப்பட்டிருக் கின்றன. அவைகள் எந்த அளவில் போட்டிருந்தாலும் அவைகள் ஏற்றுக்கொள்ளக்கூடிய அளவில்தான் இருக்கின்றன. நாட்டில் எந்த அளவு உற்பத்தி பெருகுகிறதோ அந்த அளவுக்கு பொருளா தாரம் பெருகுகிறது. பொருளாதாரத்தைப் பெருக்குவதற்கு பல தொழிற்சாலைகளையும் அமைக்க வேண்டியதாக இருக்கிறது. எந்த அளவுக்கு நாம் பொருளாதாரத்தைப் பெருக்குகிறோமோ அந்த அளவுக்கு வாழ்க்கைத்தரம் உயரும். எந்த அளவுக்கு நாம் ஊக்கத்தைக் கொடுக்கிறோமோ அந்த அளவுக்கு உற்பத்தியும் பெருகும். அந்த முறையில் தான் நாம் பல தொழிற்சாலைகளை அமைத்திருக்கிறோம். அந்த முறையில் தான் மின்சார உற்பத் திக்கும் உர உற்பத்திக்கும் சுட்ட அச்சுக்கட்டைகள் உற்பத்திக்கும் தொழிற்சாலைகளும் இரும்பு உருக்கு தொழிற்சாலைகளும் டெலி ப்ரிண்டர் தொழிற்சாலைகளும் நாட்டிற்கு மிக மிக அவசியம் என்று கருதி ஆரம்பித்திருக்கிறார்கள் என்பதை வலியுறுத்திக் கூறிக்கொள்ள விரும்புகிறேன். ஆக இந்த விதமான திட்டங் களை எந்த அளவிற்கு வெற்றி பெறுகின்றனவோ, அந்த அளவுக்குதான் பொருளாதாரம் அபிவிருத்தியடைந்து, நாட்டில் சுபீட்சம் ஏற்படும் என்பதை நாம் தெரிந்திருக்கும் காரணத் தினால், தேவையான திட்டங்களைப் போட்டு, அவற்றுக்கு வேண்டிய மூலதனத்தை வரி மூலமாகவும் மற்ற நிதியிலிருந்தும் ஈடு செய்ய வேண்டிய நிலையில் இருக்கிறோம். விவசாய உற்பத்திக்கான திட்டங்களும், தொழில் அபிவிருத்திக்கான திட்டங்களும் நிறைவேற்றினால் மட்டும் போதாது. அதற்கு வேண்டிய இன்ஜினியர்கள், சூபர்வைஸர்கள், மற்றும் பல விஞ்ஞா னிகள் தேவையாக இருப்பதால், அதற்கான தொழிற் கல்வி நிலையங்கள் ஏற்படுத்த தொகை ஒதுக்க வேண்டியிருக்கிறது. இப்படி, கல்விக்காக ஒதுக்கப்பட்டிருக்கும் 25 கோடி ரூபாயை குறைந்த தொகையாகத்தான் இருக்கிறது என்று நான் கருது கிறேன். குறைந்த தொகையாக இருந்தாலும்கூட, திட்டங்கள் வெற்றி பெறுவதற்கு எதிர்கட்சி உறுப்பினர்களும் ஒத்துழைப்பு கொடுக்க வேண்டியது அவசியம். எல்லோருடைய ஒத்துழைப்பும் இருந்தால்தான் திட்டங்கள் நிச்சயமாக முழுப் பலனைக் கொடுக்க முடியும். ஆகவே, திட்டத்தைக் குறை கூறிக் கொண்டிருப்பதால் நான் திட்டம் வெற்றி பெற முடியும் என்று சொல்வது அவ்வளவு பொருத்தம் என்று நான் கருதவில்லை. திட்டத்திற்கு எதிர்க் கட்சி உறுப்பினர்களுடைய ஒத்துழைப்பு எந்த அளவு இருக்கிறதோ அந்த அளவு திட்டம் வெற்றி பெறும். திட்டத்தில் இருக்கும் சில தவறுகளைத் திருத்திக் கொள்ளும் வகையில் சுட்டிக்காட்டி, திட்டங்களை நிறைவேற்ற ஒத்துழைப்பு தந்தால், குறிப்பிட்ட

[திரு. சி. ம. அம்பிகாபதி] [2nd July 1962

காலத்தில் நாம் நம்முடைய சிறந்த லட்சியத்தை அடைய முடியும் என்பதையும் நான் சொல்ல ஆசைப்படுகிறேன்.

நம் மாநிலத்தில் உள்ள குழந்தைகள், ஏழ்மைத் தனத்தின காரணமாக, இன்ஜினீங் கல்வி முதலிய தொழில் கல்விகளைப் பெற முடிவதில்லை. என்.ஜி.ஓ.-க்கள், ஆசிரியர்கள், இவர்களுடைய குழந்தைகளுக்கும் சலுகை கொடுத்து, அவர்களும் தொழில் கல்வி பெறுவதற்கு அரசாங்கம் வாய்ப்புக் கொடுத்திருக்கிறார்கள். அமைச்சர் அவர்கள் சமர்ப்பித்திருக்கும் இவ்வாண்டு நிதி நிலை அறிக்கையில், ஏழை மாணவர்களுக்கும் தொழிற் கல்வி பெறுவதற்கான கடனுதவி கொடுக்கவேண்டுமென்பதை வற்புறுத்தி, அதற்கு ஏற்பாடு செய்திருப்பதை நாம் பாராட்டாமல் இருக்க முடியாது. அதைப் பாராட்டுகிறோம். என்.ஜி.ஓ.-க்கள், ஆசிரியர்கள் இவர்களுடைய குழந்தைகளுக்கும், ஏழை எளியவர்களுடைய குழந்தைகளுக்கும் இந்தச் சலுகை கிடைப்பது அவர்களுக்கு நல்ல வாய்ப்பை ஏற்படுத்திக் கொடுத்திருக்கிறது என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன். ஆனால், ஸ்தல ஸ்தாபனத்தில் வேலை செய்யக்கூடிய அரசாங்க உத்தியோகஸ்தர்களுக்கு இந்தச் சலுகை அளிக்கப்படவில்லை. அவர்களுடைய குழந்தைகளுக்கும் இந்த வாய்பை அமைச்சர் அவை மிக விரைவில் ஏற்படுத்திக்கொடுத்தால், ஏழை, நடுத்தர வர்க்கத்தினருக்கு நல் வாழ்வு அளித்த பெருமை அரசாங்கத்திற்குச் சாரும் என்பதை இந்த நேரத்தில் ஞாபகப்படுத்திக்கொள்ள விரும்புகிறேன்.

இப்போது போடப்பட்டிருக்கும் நில வரி விதிப்பில் ஒரு திருத்தம் செய்தால் நலமாக இருக்குமென்று நான் கருதுகிறேன். மூன்று மா நிலம் வைத்திருக்கும் நிலச் சொந்தக்காரர்களுக்கும் இந்த வரி போடுவது அவர்களை மிகவும் பாதிக்கும் என்று நான் கருதுகிறேன். ஆகவே, குறைந்தது ஐந்து ஏக்கர் நிலம் உள்ளவர்களுக்கு எப்படி இப்பொழுது நிலச் சீர்திருத்தச் சட்டத்தில் விலக்கு அளித்திருக்கிறோமோ, அதே போல் இந்த வரி விதிப்பிலிருந்து ஐந்து ஏக்கராவுக்குக் குறைவாக நிலம் வைத்திருப்பவர்களுக்கு விலக்கு அளித்து விட்டு, ஐந்து ஏக்கருக்குமேல் நிலம் வைத்திருக்கும் நிலச் சொந்தக்காரர்களுக்கு இப்படிப்பட்ட வரி போட்டால் மிகவும் பலனுள்ளதாக இருக்கும்.

நம்முடைய திட்டங்கள் நல்ல விதமாக வெற்றி பெறவேண்டுமென்றால், அதற்கு எதிர் கட்சி உறுப்பினர்களும் ஒத்துழைப்பு கொடுக்கவேண்டும். திட்டத்தில் குற்றங்குறைகள் இருந்தால், அவற்றைக் களைவதற்கான யோசனை சொல்வதுடன், நிறைவேற்ற முழு ஒத்துழைப்பையும் கொடுக்கவேண்டுமென்று எதிர் கட்சி உறுப்பினர்களைக் கேட்டுக்கொள்கிறேன். நிதி நிலை அறிக்கையைச் சமர்பித்த மதிப்பிற்குரிய நிதி அமைச்சர் அவர்களை பாராட்டி என்னுடைய உரையை முடிக்கின்றேன். வணக்கம்.

**கனம் உதவி சபாநாயகர்:** சபை இப்பொழுது ஒத்திவைக்கப்பட்டு நாளை காலை 8-30 மணிக்கு கூடும்.

**பிறகு சபை ஒத்திவைக்கப்பட்டது.**

VI.—PAPERS LAID ON THE TABLE OF THE HOUSE.

## A. Statutory Rules and Orders.

113. *Notification issued with G.O. Ms. No. 1565, Home, dated 27th April 1962 regarding the collection of quarterly tax at reduced rate under the Madras Motor Vehicles Taxation Act,* 1931, *in respect of the luxury coach bearing registration No. MDE* 2975 *belonging to Sri Anjaneya Motor Transport (Private) Limited, Erode.* [*Laid on the Table of the House under section* 11 (2) *of the Madras Motor Vehicles Taxation Act,* 1931 (*Madras Act III of* 1931.].

## B. Reports, Notifications and other papers.

46. *Government review on the working of the Travancore Minerals, Limited, Quilon for the year ending* 31*st March* 1961 *together with the Company's Annual Report, etc.*

* 47 *Budget Speech in English and Tamil.*

* 48. *The Budget Memorandum (English and Tamil).*

* 49 *The Annual Financial Statement (English and Tamil).*

* 50. *Detailed Estimates of Revenue.*

*51. *Introduction to the Budget (English and Tamil).*

* 52 *Government Commercial undertakings.*

* 53. *Detailed Public Works Budget.*

* 54. *Detailed Irrigation Budget.*

* 55 *Demands for Grants and Detailed Budget Estimates.*

* 56. *Notice of Demands for Grants for the year* 1962–63.

* 57. *Third Five-Year Plan—Madras State—Review of Programme for* 1961–62 *and Programme for* 1962–63.

* 58. *Third Five-Year Plan—Programme for* 1962–63—*Supplement to the detailed Budget Estimates (Revised) for* 1962–63.

---

* Laid on the table of the House on 20th June 1962.

